# கல்கி

KALKI
21.5.2000
ரூ. 5.00



விடுமுறை ஸ்பெஷல்!

இலவச இணைப்பைக் கேட்டு வாங்குங்கள்!



## தமிழ் நடிகைகளுக்கு ஹாலிடே?

# சீமாரு பழமை




இன்று உங்கள் வீட்டு வேலைக்காரி சமையலுக்கான கேஸை, வாஷிங் மெஷினை, மைக்ரோவேவ் அவனை உபயோகிக்கிறாள். மற்றும் ஒரு வேக்யூம் க்ளீனரையுமா? ஒரு யூரோக்ளீன் வேக்யூம் க்ளீனரை அவளுக்குக் கொடுங்கள். எவரும் அதை உபயோகிக்கும்படி அவ்வளவு சுலபமானது மற்றும் உறுதியானது. கண்ணுக்குப் புலப்படாத தூசையும் அகற்றும் ஆற்றல் படைத்தது; அதோடு அலர்ஜி உண்டாக்கும் மைக்ரோஸ்கோபிக் தூசுக் கிருமிகளையும். கூடவே இதற்கான பரவலான இணைப்புகளைக் கொண்டு நீங்கள் உங்கள் வீட்டின் மூலை, முடுக்குகளை சுத்தம் செய்யலாம். யூரேகா ஃபோர்ப்ஸ் வழங்கும் யூரோக்ளீன். இது உங்களுடைய வேலைக்காரியிடமிருந்து அதிகபட்ச வேலைகளை செய்து வாங்கிட உங்களுக்கு உதவும்.

EUREKA FORBES LTD
YOUR FRIEND FOR LIFE

Visit us at : www.eurekaforbes.com

**Euroclean**
முழுமையான வீட்டு பராமரிப்பு திட்டம்
சூப்பர் சுத்தத்தைப் பெற சூப்பர் சக்தி.

Open your door to health and hygiene. For a free demo in the comfort of your home, page your friend from Eureka Forbes on 9622-343434 or call **CHENNAI:** BURKIT ROAD: TEL: 4348978, 4338197. AMINJIKARAI: TEL: 6424579/5243. SAIDAPET: TEL: 2301152/53/54. T.NAGAR: TEL: 8234721/4514. **COIMBATORE:** TEL: 433180, 454401. **ERODE:** TEL: 261397, 261501. **MADURAI:** TEL: 587728 / 216. **PONDICHERRY:** TEL: 372480, 372823. **SALEM:** TEL: 419422, 411235. **TIRUNELVELI:** TEL: 577363/574917. **TRICHY:** TEL: 461867, 464943, 414967. **NEYVELI:** TEL: 62379. **BANGALORE**: TEL: 222 4453 / 226 7746 / 552 2333. **HYDERABAD** : TEL : 784 0206 / 331 5451 / 756 7185. **MUMBAI** : TEL: 430 1725 / 820 6060.

# தபு பேட்டி





# "மூர்ச்சையானேன்..!"

**தே**வர் மகன் படம், இந்தியில் எடுக்கப்பட்டபோது (விசாரத்) அதில் ரேவதியின் கேரக்டரில் நடித்தவர் தபு. அதற்கான படப்பிடிப்பு நடந்தது காரைக்குடியில்தான். கண்டு கொண்டேன் கண்டுகொண்டேன் படத்துக்காக திரும்பவும் காரைக்குடிக்குச் சென்ற அனுபவத்தைக் கேட்டபோது,

"**அ**து எகிப்து. நல்ல வெயில். சூடு மண்டையைப் பிளந்து கொண்டிருந்தது. நான் ஓடி வர வேண்டும். கேமரா ஓடிக் கொண்டிருந்தது. ரெடி ஆக்ஷன் என்றதும் ஓடினேன். சில செகண்ட்... ம்ஹூம். அடுத்த சில நொடிகளில் கேமராவில் நான் மிஸ்ஸிங்! எல்லோரும் என்னைத் தேட... நான் மூர்ச்சையாகிக் கீழே கிடந்தேன்!"

– எகிப்தில் நடந்த 'கண்டுகொண்டேன், கண்டுகொண்டேன்' பட ஷூட்டிங்கின் போது வெயில் கொடுமையால் தனக்கு நேர்ந்த அனுபவத்தை ஏஸியில் அமர்ந்து மூச்சு விட்டபடி சொன்னார் தபு விடுமுறை ஸ்பெஷலுக்காக!

அடிக்கடி முகத்தில் விழும் தலைமுடியை இடப்பக்கமும் வலப்பக்கமும் பிரித்து விட்டுக் கொள்கிறார்.

"தென்னிந்தியப் பெண்ணான நீங்கள், இந்திக்குப் போய் அதன் பின் தமிழ், தெலுங்கு, மலையாளம் என்று நடிக்க வந்திருப்பது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?"

"எனக்கு விதியின் மீது நம்பிக்கை உண்டு. நான் வாழ்க்கையை அதன் போக்கிலேயே சென்று சந்திக்க வேண்டும் என்று நினைப்பவள். இந்தியில் வாய்ப்பு கிடைத்து பிரபலமானபின், தெற்கேயிருந்து வாய்ப்புகள் வந்தன. ஏற்றுக் கொண்டேன். ஆனால் சினிமாவைப் பொறுத்தவரை, இந்தி, தெலுங்கு, தமிழ், மலையாளம், மராத்தி இவை ஒவ்வொன்றுமே தனித் தனி உலகங்கள். ஒன்று போல இன்னொன்று கிடையாது. பலதரப்பினரும் என்னை ஒரு நடிகையாக ஏற்றுக் கொண்டிருப்பது குறித்து நான் ரொம்பப் பெருமைப் படுகிறேன்."

"காரைக்குடியில், பிரம்மாண்டமான வீடுகள் நிறைய இருப்பது தெரியவந்தபோது ஆச்சரியப்பட்டேன். ஹைதராபாத்தில், எங்கள் குடும்பத்துக்குச் சொந்தமான பெரிய ஹைவேலி (பங்களா)வை நினைவூட்டியது காரைக்குடி வீடு. சின்ன வயதில் அங்கே நான் ஓடி விளையாடிய நாட்கள் என் நினைவுக்கு வந்தன. மும்பையில், இத்தனை பெரிய வீடெல்லாம் கனவிலும் நினைத்துப் பார்க்க முடியாத விஷயம்" என்றார்.

"உங்கள் சினிமா வாழ்க்கையில் திருப்பு முனை என்று எதைச் சொல்வீர்கள்?"

"காலாபானி (சிறைச்சாலை) படத்தில் நடித்ததைத்தான் சொல்ல வேண்டும். என்னாலும் அழுத்தமான கேரக்டர்களைச் செய்து பெயர் வாங்க முடியும் என்று நிரூபிக்க வாய்ப்பளித்த படம் அது. அந்தப் படத்தில் நடித்த போது, எனக்கே என் திறமை மீது நம்பிக்கை அதிகமானது என்று சொல்லலாம். மேற்கத்திய உடையணிந்து கொண்டு, 'ருக் ருக் ருக்..' பாணியில் டான்ஸ் ஆடிக் கொண்டிருந்த வழக்கமான ரோலில் வந்து கொண்டிருந்த, தபுவா இது? என்று காலாபானி பார்த்து விட்டு புருவம் உயர்த்தியவர்கள் பலர். இதற்கெல்லாம் இயக்குனர் பிரியதர்ஷனுக்குத்தான் நான் நன்றி கூற வேண்டும்.

"ஒரு இத்தாலியப் படத்தில் கூட நடிக்கிறீர்களாமே?"

"ஆமாம்! வாய்ப்பு வந்தது; ஓ.கே. சொல்லியிருக்கிறேன். மற்றபடி வேறு ஒன்றும் முடிவாகவில்லை."

"விருதுகள் பற்றி உங்கள் அபிப்ராயம் என்ன?"

"விருதுகளை மட்டுமே மனத்தில் வைத்துக் கொண்டு நான் படங்களை ஒப்புக் கொள்வதும் இல்லை; நடிப்பதும் இல்லை. நான் நடிப்பை காதலிக்கிறேன். முழு ஈடுபாட்டுடனும், ஆசையுடனும் நடிக்கிறேன். அதில் எனக்குத் திருப்தி கிடைக்கிறது. விருதுகள் கிடைப்பது போனஸ் மாதிரி! வந்தால் சந்தோஷம்! வராவிட்டால் நஷ்டம் ஒன்றும் இல்லை. நான் நடிக்க வந்த போது, இத்தனை குறைந்த வயதில் தேசிய விருது கிடைக்கும் என்று கனவிலும் நினைக்கவில்லை. தேசிய விருது கிடைத்து விட்டதற்காக நான் கர்வப்படவில்லை. அந்தக் குறிப்பிட்ட வருடத்தில், போட்டிக்கு வந்த படங்களில் நடித்தவர்களுள், என் நடிப்பு பெஸ்ட் என்று அந்தக் குறிப்பிட்ட நடுவர் குழு நினைத்து, விருதுக்குத் தேர்ந்தெடுத்தது. அதில் எனக்கு சந்தோஷம். தட்ஸ் ஆல்!

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

# "பா.ஜ.கவில் மற்றொரு டாக்டர்!"

பா.ஜ.கவில் இருந்து அதிமுகவுக்குச் சென்ற டாக்டர் மைத்ரேயனை அடுத்து இப்போது மற்றொரு டாக்டர் குரல் அக்கட்சி வட்டாரத்தில் கேட்க ஆரம்பித்திருக்கிறது. இந்த டாக்டர் இதுவரை துணைத் தலைவராக இருந்து இப்போது தமிழக பா.ஜ.கவின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் ஸ்ரீநிவாசன் (தாத்தா) பூவன் (அப்பா) கிருபாநிதி. அதாவது எஸ்.பி. கிருபாநிதி.

சொந்த ஊர் பாண்டிச்சேரி செல்லும் வழியிலுள்ள கோலியனூர். ஆனால் கிருபாநிதி துவக்கக் கல்வியை விழுப்புரத்தில் முடித்துவிட்டு சென்னை வெஸ்லி பள்ளிக்கு வந்துவிட்டார். பையன் நன்றாகப் படிப்பதைப் பார்த்து, தொடர்ந்து அவரை சென்னையிலேயே படிக்க வைத்தார் பூவன். பிரஸிடென்ஸியில் இண்டர் முடித்துவிட்டு ஸ்டான்லியில் மருத்துவப் பட்டம் பெற்று சென்னை மருத்துவக் கல்லூரியில் அறுவை சிகிச்சைக்கான மேல் படிப்பும் முடித்து தமிழ்நாடு மருத்துவப் பணியில் சேர்ந்துவிட்டார் கிருபாநிதி. மாவட்ட மருத்துவ அதிகாரியாக 1987ல் பணி ஓய்வு பெற்றதும் பா.ஜ.க.வில் இணைந்துவிட்டார்.

''பா.ஜ.க.வில் ஏன் இணைந்தீர்கள் என்று பலர் கேட்டார்கள். ஒரு தேசியக் கட்சியில் சேர வேண்டுமென்பது என் ஆசை. நமது நாட்டை, தனது தவறான கொள்கைகள் மூலம் பாழடித்தது காங்கிரஸ்தான் என்பது மறைக்க முடியாத நம்பிக்கை. இதுதவிர சிறுபான்மை மற்றும் ஆதிதிராவிட, பிற்பட்ட மக்களுக்கு பா.ஜ.க. ஆட்சியில்தான் நல்ல பாதுகாப்பு கிடைக்கும். மற்ற கட்சிகள் அவர்களை வோட்டுகளுக்காகத்தான் பயன்படுத்துகின்றன'' என்கிறார் ஆதிதிராவிட சமூகத்தைச் சேர்ந்த கிருபாநிதி.

படிக்கும் காலத்தில் விடுமுறையில் ஊருக்குப் போனால், கையில் லாந்தர் விளக்கை எடுத்துக்கொண்டு, கிராமம் கிராமமாகச் சென்று, ஏழை குழந்தைகளுக்கு படிப்புச் சொல்லிக்கொடுப்பாராம்.

பா.ஜ.க.வில் சேர்ந்த பின் பல போராட்டங்களிலும் பங்கு பெற்றிருக்கிறார். இவரது மனைவி கிருஷ்ணவேணியும் ஒரு டாக்டர்! மகப்பேறு நிபுணர். இருவரும் சேர்ந்து மருத்துவமனையில் ஏழைகளுக்கு இலவச சிகிச்சை அளிக்கிறார்கள்.

"கஷ்டப்படுபவர்களுக்கு உதவ வேண்டும் என்பது உட்பட, எனக்கு நல்ல பண்புகளைக் கற்றுக் கொடுத்த பள்ளி ஆசிரியர்கள் சங்கரநாராயணன், வரதாச்சாரி, ரத்னம் முதலியார் ஆகியோரை மறக்க முடியாது" என்கிறார் கிருபாநிதி.



நவீன சோதனை முறைகள் எதுவும் கண்டுபிடிக்காத காலகட்டத்தில் ஒரு பெண்மணிக்கு கருப்பைக்கு வெளியே வளர்ந்த குழந்தையைக் காப்பாற்றி தாய்க்கும், குழந்தைக்கும் எந்தப் பாதிப்புமில்லாமல் வெற்றிகரமாக பிரசவம் பார்த்தவர் இவர். பத்து லட்சத்தில் ஒரு கேஸ்தான் இப்படி அமையும். பல மருத்துவ பத்திரிகைகளில் இது பற்றிச் சிறப்பாக எழுதப்பட்டதாம்.

"தமிழக பா.ஜ.கவைப் பலப்படுத்த என்ன செய்யப் போகிறீர்கள்?"

"தீவிரமாகச் சுற்றுப்பயணம் செய்து தாழ்த்தப்பட்ட, பிற்படுத்தப்பட்ட மக்களை மேலும் மேலும் கட்சியில் இணைக்க முயற்சி செய்வேன்" என்கிறார் அறுபத்து ஒன்பது வயதான இந்தக் கிருபாநிதி!

சந்திப்பு: ப்ரியன்

படம்: ராஜன்

அ.தி.மு.க வட்டாரம் குழப்பத்தில் இருக்க, கலைஞரின் உடன்பிறப்புகள் உற்சாகமாக இருக்கிறார்கள். கருப்பசாமி பாண்டியனும், ரகுபதியும் கட்சியில் இணைந்ததால் திமுகவுக்குக் கூடுதலாக பலம் உண்டாகும் என்பது அவர்களது நம்பிக்கை. அதே சமயத்தில் ''கலைஞரைப் பற்றியும், தி.மு.க பற்றியும் கண்டபடி விமர்சித்தவர்களை இருகரம் நீட்டி வரவேற்கும் போக்குக்கு அதிருப்தி இல்லாமல் இல்லை. ''அறிவாலயம் என்ன சத்திரமா; சாவடியா?'' என்று தமாஷாக (ஸீரியஸ்?) கேட்டார் ஒரு மூத்த உடன்பிறப்பு. புதிய வரவுகளைப் பற்றியும் உடன்பிறப்புகளின் எண்ண ஓட்டத்தையும் தெரிந்து கொள்ள அமைச்சர் ஆலடி அருணாவைச் சந்தித்தோம்.

● ''கருப்பசாமி பாண்டியனும், ரகுபதியும் தி.மு.க.வில் இணைந்தது பற்றி நாங்கள் ஒன்றும் சொல்ல முடியாது; அது அவர்கள் உட்கட்சி விவகாரம்'' என்றார் த.மா.கா பொதுச்செயலாளர் பீட்டர் அல்போன்ஸ். ஆனால் ஒன்று மட்டும் சொல்ல முடியும். தனி மனிதனோ அல்லது ஒரு அமைப்போ, கலைஞருடன் நல்லுறவில் இருக்கும்போது ''இந்திரன் சந்திரன்'' என்று புகழப்படுபவர்கள்; விலகிச்

# ஊழல் பேர்வழிகளுக்கு

கட்சியில் சேர்ந்துள்ள இந்த இருவரைப் பற்றி குறிப்பிட்ட கலைஞர் 'தோட்டக்காரன் நல்ல கனிந்த பழங்களைப் பறித்து வெளியே வீசி விட்டான்' என்றார்; ஆனால் ஜெயலலிதாவோ ''அழுகிய பழங்கள் அவை'' என்று அறிக்கை விட்டிருக்கிறார். இந்த நிலையில் அ.தி.மு.க.வி லிருந்து யார் வந்து இணைந்தாலும் சேர்த்துக் கொள்வீர்களா?

ஜெயலலிதா அமைச்சரவையில் இடம் பெற்றிருந்தவர்கள், இடம் பெறாதவர்கள் என்று பலர் மீது ஊழல் வழக்குகள் தனி நீதிமன்றங்களில் நடந்து வருகின்றன. ஏழு வழக்குகளில் தீர்ப்பும் வந்திருக்கிறது. யார், யார் மீது ஊழல் வழக்குகள் பதிவு செய்யப்பட்டிருக்கிறதோ, அல்லது தண்டனை வழங்கப்பட்டிருக்கிறதோ அவர்களைக் கழகத்தில் சேர்த்துக் கொள்ள மாட்டோம். ஊழல் குற்றச்சாட்டுக்கு ஆளாகாத நல்லவர்களைத்தான் சேர்ப்போம். அப்படிப்பட்ட நல்லவர்கள்தான் ரகுபதியும், கருப்பசாமி பாண்டியனும். அவர்கள் அழுகிய பழங்கள் அல்ல; அருமையான பழங்கள்!



படம்: ராஜன்

சேடப்பட்டிக்கு 'க்ரீன் சிக்னல்' உண்டா?

"இந்தக் கேள்விக்கு என்னால் நேரடியாகப் பதில் சொல்ல முடியாது. பலன் தரத்தக்க, பயன்தரத்தக்கவர்களைத்தான்

சென்றால் கடுமையாகத் தாக்கப்படுவார்கள். தமிழகத்தைப் பொறுத்தவரை மனிதர்களுக்கு ஐ.எஸ்.ஐ முத்திரை போடும் பொறுப்பை கலைஞர் வைத்துக் கொண்டிருக்கிறார்'' என்றார் பீட்டர்.

● எதிர்காலத்தில் ஸ்டாலினுக்கு நல்ல பக்கபலமாக தெற்கு பக்கத்தில் க. பாண்டியன் இருப்பார் என்று கலைஞர் கருதுகிறாராம். இதற்கிடையில் ரகுபதியைப் பயன்படுத்திப் புதுக்கோட்டை வட்டாரத்தில் தனது செல்வாக்கைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர தி.மு.க. ஏதாவது செய்யுமா என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறார் திருநாவுக்கரசு.

● தி.மு.க.வுடன் 'புதிய தமிழகம்' நெருங்கி வரும் நிலையில், கருப்பசாமி பாண்டியன் சேர்ந்ததன் காரணமாக முக்குலத்தோர்கள் தி.மு.க.வுடன் நெருங்கி வருவதற்கான வாய்ப்பு குறைவு என்கிறார்கள்.

சேர்ப்போம். ஊழல் பேர்வழிகளை ஒருபோதும் சேர்க்க மாட்டோம்.

காலில் விழும் கலாசாரத்தைக் கிண்டல் செய்தவர்கள் நீங்கள். அப்படியிருக்க ரகுபதியும், க.பாண்டியனும் கலைஞர் காலில் விழுந்ததன் மூலம் அந்தக் கலாசாரத்தை தி.மு.க.வுக்கும் எடுத்து வந்து விட்டதாகச் சொல்லலாமா?

# இடம் இல்லை!





''வீட்டில் தாய், தந்தையை காலில் விழுந்து வணங்குகிறோம்; தமிழகத்தைப் பொறுத்தவரை கலைஞர் மூத்த தலைவர். எங்கள் எல்லோருக்கும் தந்தை போன்றவர். அவர் காலில் விழுந்து மரியாதை செலுத்துவதில் எந்தத் தவறும் கிடையாது. மரியாதை செய்வதில் பலமுறைகள் இருக்கின்றன. கைகுலுக்கிக் கொள்வார்கள்; அரவணைத்துக் கொள்வார்கள்; வயதில் பெரியவர்களுக்கு வணங்கி மரியாதை செய்வார்கள். திராவிட இயக்கத்தின் மூத்தவரான கலைஞருக்கு இளையவர்கள் காலைத் தொட்டு மரியாதை செய்ததை தவறு என்று யாரும் சொல்ல மாட்டார்கள். 'காலில் விழும் கலாசாரம்' என்று நாங்கள் கிண்டல் செய்தது, தன்னைவிட வயதில் மூத்தவர்களும் காலில் விழ வேண்டும் என்று எதிர்பார்த்த அ.தி.மு.க. கலாசாரத்தைத்தான்.

அ.தி.மு.க.வில் இருந்து வந்தவர்களுக்கு கட்சிப் பொறுப்புகள் கொடுக்கப்பட்டால் நீண்ட காலமாக கழகத்தில் இருப்பவர்களுக்குச் சலிப்பு ஏற்படுமே?

''நாங்கள் கட்சி வளர வேண்டுமென்ற அக்கறை உள்ளவர்கள். பதவியைப் பெற போட்டியிடுபவர்களல்ல! கட்சிக்காக உழைக்கக்கூடிய யாராக இருந்தாலும் வரவேற்பதில் தவறு கிடையாது.

புதிதாக இணைந்தவர்கள் கழகத்திற்குக் கணிசமாக நிதி கொடுத்துத்தான் இணைந்தார்கள் என்று பேச்சு இருக்கிறதே!

''இது அற்பத்தனமான பேச்சு மட்டுமல்ல; அயோக்கியத்தனமும் கூட. எங்களுக்கு நிதி தேவை என்றால் தொண்டர்களிடம் வசூலித்துக் கொள்வோம்.''

நெல்லை மாவட்டத் தி.மு.க. ஏற்கனவே கோஷ்டி பூசலால் பிளவுபட்டு இருப்பதாகவும் க.பாண்டியன் வரவால் மற்றொரு புதிய கோஷ்டி உருவாகும் என்றும் சொல்கிறார்களே?

''நெல்லை மாவட்டத் தி.மு.க.வில் பிளவு இருப்பதாக நீங்கள் சொல்வது தவறு. ஜனநாயக முறையில் இயங்கும் கழகத்தில் கருத்து வேறுபாடு இருக்கலாம். கோஷ்டி, பிளவு என்ற பேச்சுக்கே இடமில்லை.

சந்திப்பு: ப்ரியன்




# ஜோடி சேருங்கள்!

இந்தியாவில் உள்ள பன்னிரண்டு சுற்றுலா தலங்கள் இவை. மாநிலத்துக்கு இரண்டு என்கிற வகையில் ஆறு மாநிலங்களில் உள்ள இடங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கின்றன. இவற்றைக் கண்டுபிடித்து மாநில வாரியாக ஜோடி சேருங்கள் பார்ப்போம். (கீழே உள்ள குறிப்புகளும் உங்களுக்கு உதவக்கூடும்)

1. ஒழிந்தது பிளேக் நோய்
2. நகரேஷு
3. ஹொய்சல மன்னர்களின் கலாரசனை
4. நம்ம ஹாலிவுட்?
5. கல்லிலே கலைவண்ணம்.
6. மறக்க முடியாத கிரிக்கெட் ரசிகர்கள்
7. கலைகளின் சங்கமம்
8. பாரதக் கதவு
9. பணக்கார கோவில்?
10. குறைவில்லாத சினிமா ஷூட்டிங்குகள்
11. கட்டிடத்தின் பெயரிலேயே ராஜ (ராணி?) கம்பீரம்.
12. இந்தியாவின் மிக உயர்ந்த இடம்.

— ஜி.எஸ்.எஸ்

விடைகள் 86ம் பக்கம்





# சீச்சீ... ச்சீ...!

ஜுராங் பறவைகள் பூங்கா. சிங்கப்பூரின் சூப்பர் ஸ்பெஷாலிடி அட்ராக்ஷன். இயற்கையான மரங்களடர்ந்தப் பகுதியை மேலும் செழிப்பூட்டி காடு போல ஆக்கிவிட்டார்கள். அங்குள்ள திறந்த வெளி அரங்கில் நடக்கும் ஆல் ஸ்டார் பறவைகள் ஷோவை பார்ப்பதற்குத்தான் பலரும் அங்கு வருகிறார்கள்.

கேலரி அமைப்பு கொண்ட அந்த அரங்கு நிரம்பி வழிகிறது. எல்லோருடைய கவனமும் கீழேயுள்ள அறை வட்டப் புல்வெளியில். இரண்டு சீன யுவதிகள் வந்து வரவேற்ற கையோடு, ஒரு ஸ்பெஷல் சந்தோஷ சப்தம் போட்டவுடன் விதவிதமான பறவைகள், புல்வெளியின் இருபுறமிருந்தும், ஜிவ்வென்று புறப்பட்டு நடந்தும், பறந்தும் வளையவருகின்றன. "எல்லாரும் போங்கள்" என்று கொஞ்சலாய் அப் பெண் சொன்னதும், "அட! அவ்வளவு தானா பறவைகள் ஷோ" என்று அலுத்தபடி ஒரு சீனப் பெண்மணி, தூசு தட்டிக் கொண்டு எழுந்து விட்டார். 'போகச் சொன்னது பறவைகளைத்தான்! உங்களை இல்லை' என்றவுடன் மறுபடி உட்கார்ந்து கொள்ள, திரும்பினால், பறவைகள் எல்லாம் போயே போச்!

அடுத்து, சீனப் பெண் கேட்டார். "உங்களில் யாருக்கு இலவசமாய் கோக் வேண்டும்?" ஏறத்தாழ மொத்த அரங்கமும் கையை உயர்த்தியது. அட! இத்தனை கோக் பிரியர்களா? என்றார். இல்லை... ஓசி கேஸ்கள் என்று முணுமுணுப்பு எழுந்தது.

கோக் பற்றிய பேச்சை அப்படியே விட்டு விட்டு, "யார் எனக்கு இரண்டு டாலர் தருவீர்கள்?" என்றார். இரண்டு டாலர் கொடுக்க பலரும் முன்வந்தார்கள். அவர்களில் ஒரு இளைஞனை மட்டும் சுட்டிக்காட்டி, "நீங்கள் கொடுங்கள்" என்றார். அவர் இரண்டு டாலர் நோட்டை எடுத்துக் கொண்டு, நடக்க ஆரம்பிக்க, "நோ... நோ...

உங்கள் இருக்கையிலேயே நில்லுங்கள்... சிக்கி... என் சார்பில் வந்து வாங்கிக் கொள்ளுவாள்..." என்றதும் அவரது தோளில் உட்கார்ந்திருந்த சிக்கி என்ற ஒரு பஞ்சவர்ணக் கிளி சர்ரென்று கிளம்பி, அவரை நோக்கிப் பறந்து வந்து, மிகச் சரியாக அந்த இளைஞனின் தோளில் வந்து 'லாண்ட்' ஆனது. அவரது கையிலிருந்த இரண்டு டாலரை மூக்கால் கவ்விக் கொண்டு, மறுபடி சர்! இரண்டே விநாடிகளில் அந்த நோட்டு சீனப் பெண் கையில். ஒரே கைத்தட்டல்!

"நீங்கள் எங்கள் நாட்டுக்கு விருந்தினர். உங்களிடம் நான் இந்த இரண்டு டாலர் கடன்பட விரும்பவில்லை! இப்போதே திருப்பித் தந்து விட விரும்புகிறேன்" என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கிறபோதே அந்த சிக்கி மறுபடி ஜிவ்! இளைஞர் தோள்பட்டையில் உட்கார்ந்து கொண்டு, நோட்டை நீட்ட, வாங்கிக் கொண்டார். கைதட்டல் பிய்த்துக் கொண்டது.



அரங்கின் இடது கோடி, நடு, வலது கோடியில் மூன்று பேரை எழுந்து நிற்கச் சொன்னார்கள். மூவர் கையிலும் சைக்கிள் டயர் சைசில் வளையங்களைக் கொடுத்து, பிடித்துக் கொள்ளச் சொன்னார்கள். விசில் கொடுத்தவுடன் ஒரு பறவை புறப்பட்டு, அந்த மூன்று வளையங்களுக்குள் புகுந்து புறப்பட்டு, வந்து சேர்ந்தது. அடுத்து எதிர்ப்புறமாய் ஒரு ரவுண்டு. அடுத்து இரண்டு பறவைகள் ஒரே நேரம் எதிரெதிர் திசையில் புறப்பட்டு, முட்டிமோதிக் கொள்ளாமல் ஜம்மென்று சுத்தி வந்ததை மொத்தக் கூட்டமும் வாய் திறந்து பார்த்து ரசித்தது.

ஒரு டஜன் கிளிகள் வந்தன. ஒரு கிளி, "ஹலோ வெல்கம்.." என்றது. 'உங்களில் யாருக்காவது இன்று பிறந்த நாளா?' என்று அந்தப் பெண் கேட்க, இரண்டு பேர் கையைத் தூக்கினார்கள். அவர்களை அழைத்தார். ஒரு கிளி அவர்களுக்கு ஒரு பூவைக் கொடுத்து, "ஹாப்பி பர்த்டே டு யூ..." என்று பாட... 'அட இங்க பார்றா' என்று மூக்கில் விரல் வைத்தது கூட்டம்!

கிளிக்கு முன் மைக்கைப் பிடித்தார் ஒருவர். "உனக்கு நம்பர்கள் சொல்லத் தெரியுமில்லையா...? சொல்" என்றதும், இக்புக் என்றது. "நீ சீனமொழியில் சொன்னதால், எல்லாராலும் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆங்கிலத்தில் சொல்லேன்" என்றதும் கிளி ஆரம்பித்தது. "ஒன்... டூ...... டென்"!

ஒரு பாட்டு பாடச் சொல்லுங்கள் என்று நேயர் விருப்பம். ஒரு சீனப் பாடலை பாகவதர் கணக்காய் உச்சஸ்தாயி வரை கொண்டு போய் பாடினது அந்த நீல நிறக்கிளி! ஒரே அப்ளாஸ்!

தொடர்ந்து கிளிகள் சைக்கிள் ஓட்டின. இரண்டு கிளிகளுக்கு இடையே சைக்கிள் ரேஸ் நடந்தது. அவை கவுண்டமணி - செந்தில் ஸ்டைலில் மோதிக் கொண்டது தமாஷ்! பார்வையாளர்களை இரண்டு கோஷ்டியாய்ப் பிரித்து, கிளிகளை உற்சாகப்படுத்தச் சொன்னபோது, நல்ல காலம், பாண்டிச்சேரி முதல்வர் தேர்வு போல கோஷ்டி மோதல் ஏதும் நடக்கவில்லை. கிளைமாக்ஸாக, ஏராளமான பறவைகள், திறந்தவெளி அரங்கில் பார்வையாளர்கள் தலைக்கு மேலே, குறுக்கும், நெடுக்குமாய்ப் பறந்த சில நிமிடங்கள் ஒரு புதுமையான அனுபவம்.

கடைசியாய், கோக் சமாசாரத்துக்கு வருகிறேன். யாருக்கு இலவசமாய் கோக் வேண்டும் என்று கேட்டாரில்லையா அந்த சீனப் பெண். இறுதியில் ஒருவரைத் தேர்ந்தெடுத்தார். அவரை எழுந்து நிற்கச் சொல்லிவிட்டு, மற்றவர்களை எல்லாம் உட்காரச் சொன்னார். அவர் தோளிலிருந்து கிளி பறந்து வந்து நின்று கொண்டிருந்த பெண் கழுத்தில் உட்கார்ந்து, ஒரு துண்டுச் சீட்டை நீட்டியது.

"பறவைகள் பார்க் கேன்டீனில் இந்தச் சீட்டைக் கொடுத்துவிட்டு, ஒரு கோக் கேன் இலவசமாய்ப் பெற்றுக் கொள்ளவும்" என்று அச்சிட்ட சீட்டு!

**— எஸ். சந்திரமௌலி**

பாதுகாப்பான முதலீடு - நிலையான வருமானம்

# பவர்ஃபைனான்ஸ்

## தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்

### டெல்லியில் டெபாசிட் திரட்டும் முகாம்

**இடம் : "டெல்லி தமிழ் சங்கம்", தமிழ் சங்கம் மார்க், செக்டார் 5, ஆர்.கே. புரம், புதுடெல்லி - 110 022.**

**தொலைபேசி : 6193964, 6193966**

**நாள் : 18-5-2000 முதல் 21-5-2000 வரை**

**நேரம் : காலை 9.00 மணி முதல் மாலை 7.00 வரை**

### முதலீடுகளுக்கு வழங்கும் வட்டி விகிதங்கள்

| காலம் | முறையான வட்டி வழங்கும் திட்டம் (RIPS) வழங்கப்பட உள்ள ஆண்டு வட்டி விகிதம் | | திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS) - I | |
|---|---|---|---|---|
| | மாதத்திற்கு | காலாண்டிற்கு | முதிர்வுத் தொகை ரூ. 5,000/-த்திற்கு | ஒரு ஆண்டிற்கு பெறக்கூடிய வருவாய் விகிதம் |
| 12 மாதங்கள் & 1 நாள் | – | 11.10% | ரூ. 5,580/- | 11.57% |
| 25 மாதங்கள் | – | 11.61% | ரூ. 6,346/- | 12.92% |
| 36 மாதங்கள் | 12.50% | 12.63% | ரூ. 7,261/- | 15.07% |
| 48 மாதங்கள் | 12.50% | 12.63% | ரூ. 8,222/- | 16.11% |
| 60 மாதங்கள் | 12.50% | 12.63% | ரூ. 9,311/- | 17.24% |

### திரள் வட்டி வழங்கும் திட்டம் (CIPS) - II

| காலம் | குறைந்த அளவு டெபாசிட் ரூ. | முதிர்வுத் தொகை ரூ. | ஒரு ஆண்டிற்கு பெறக் கூடிய வட்டி விகிதம் |
|---|---|---|---|
| 60 மாதங்கள் | 537/- | 1,000/- | 17.24% |

**தமிழ்நாடு மின்விசை நிதி மற்றும் அடிப்படை வசதி மேம்பாட்டு நிறுவனம் (பவர்ஃபின்)**

(தமிழ்நாடு அரசு நிதி நிறுவனம்)

பதிவு அலுவலகம் : எண் 84, டி.டி.கே. சாலை, ஆழ்வார்ப்பேட்டை, சென்னை - 600 018.
தொலைபேசி : 4997689, 4995648, ஃபேக்ஸ் : 044-4982694 மின் அஞ்சல் : powerfin@md3.vsnl.net.in
Visit us at: www.tnpowerfinance.com / www.tninfrafinance.com

28-9-99 தேதியிட்ட எகனாமிக் டைம்ஸ் இதழில் வெளியிடப்பட்ட முந்தைய விளம்பரத்தின் தொடர்ச்சியாக இந்த விளம்பரம் வெளியிடப்படுகிறது.

"Also available on the Internet" www.tn.gov.in / www.chennaionline.com / www.aaraamthinai.com




# ஆங்கிலமே

"என்ன மாப்ளே, போன வாரம் பொண்ணு பாக்கப் போயிருந்தியாமே. எங்கிட்ட ஒரு வார்த்தை கூட சொல்லவேயில்லையே."

"Sorry, திடீர்னு ஏற்பாடு பண்ணியிருந்தாங்க. Inform பண்ண முடியலை."

"சரி, பொண்ணு எப்படி? okay சொல்லிட்டியா?"

"அட நீ ஒண்ணு. நான் வேணாம்னு சொல்லிட்டேன். ஏன்டா?"

"பொண்ணு ரொம்ப black - க்கா இருந்துச்சு அதனாலதான்."

"ஆமாம். நீ மட்டும் ரொம்ப white டாவா இருக்கே?"

– உரையாடலை கவனித்தீர்களா? இப்படி நிறபேதம் பண்ணிப் பேசறதே தப்புன்றது ஒரு பக்கமிருக்க, இந்த இங்கிலீஷ்"ம் தப்பு! மனுஷங்களோட நிறத்தைப் பத்திப் பேசறப்போ white, red, blackன்னு சொல்லக் கூடாது!

அந்தப் பொண்ணு நல்ல சிவப்பா இருக்காங்கறதை 'The girl is fair'' னு சொல்லணும்.

Red, white ங்கற வார்த்தைகளை use பண்றது சரியில்ல.

'கறுப்பா இருக்கா'ங்கறதை 'black' னு சொல்றது தப்பு.

'She is dark' னு சொல்லணும்.

ஆப்பிரிக்க நாட்டில் வசிக்கும் கறுப்பர்களை 'blacks' என்று சொல்வதுண்டு. ஓர் இனத்தைக் குறிக்க 'black' என்ற வார்த்தையைப் பயன்படுத்தலாம்.

'He is a black' என்றால் அவர் கறுப்பர் இனத்தைச் சேர்ந்தவர் (Negro) என்று பொருள்.

இந்த 'dark' ங்கற வார்த்தைக்கு 'இருட்டு'ன்னு ஒரு அர்த்தமும் உண்டு.

The room is very dark ன்னா இந்த ரூம் ரொம்ப இருட்டா இருக்குன்னு அர்த்தம். போட்டோ ஸ்டுடியோவில் படச் சுருளைக் கழுவும் அறைக்கு 'dark room'ன்னு பெயர் என்பது உங்




**வி. ராஜகோபாலன்**




# அருகில் வா!

களுக்குத் தெரியுமில்லையா?

சரி, அதிக கறுப்புமில்லாமல் ரொம்ப சிவப்புமில்லாம இருக்கறதை 'மாநிறம்'னு சொல்லுவோம். இதை இங்கிலீஷ்ல எப்படிச் சொல்லணும் தெரியுமா?

அவன் மாநிறமாக இருக்கிறான் என்பதை "He is of medium complexion" (ஹி ஈஸ் ஆஃப் மீடியம் கம்ப்ளெக்ஷன்) என்று சொல்லலாம்.

'Beauty' ன்னா அழகுன்னு அர்த்தம்.

'Beauty contest' அழகுப் போட்டி.

'Beauty parlour' அழகு நிலையம்.

அந்தப் பொண்ணு அழகா இருக்கான்னு சொல்லணும்னா 'The girl is beautiful' ன்னு சொல்லணும்.

Beautiful ன்னா 'அழகாக'ன்னு அர்த்தம்.

ஒரு பொண்ணு அழகா இருந்தா beautifulன்னு சொல்லலாம். ஆனா ஆண் அழகா இருந்தா இந்த வார்த்தைய use பண்றது சரியில்லை.

"He is handsome" ன்னு சொல்லணும்.

அழகிய பெண்களை வர்ணிக்க பெரும்பாலும் நாம் 'beautiful' என்ற வார்த்தையைத்தான் அடிக்கடி பயன்படுத்துகிறோம்.

She is beautiful.

She is beautiful என்று சொல்வதற்குப் பதிலாக அழகை (அழகியை) வர்ணிக்க புதிய வார்த்தைகளைப் பயன்படுத்தி

She is pretty

She is charming

She is fair

She is good looking

She is nice looking

இவற்றில் ஏதேனும் ஒன்றைக்கூறி வர்ணிக்கத் தொடங்குங்கள்.

ஆனால் ஒரு விஷயம். மேற்கூறிய வர்ணிப்புகள் பெண்களுக்குரியவை. ஒரு ஆண் அழகாக இருந்தால் handsome என்ற வார்த்தையைப் பயன்படுத்தி He is handsome என்று சொல்லுங்கள்.

ஒரு ஆளு உயரமா இருந்தா 'He is tall'ன்னு சொல்லலாம். குள்ளமா இருந்தா 'He is short'ன்னு சொல்லலாம்.

ஆள் தடியா (குண்டா) இருந்தா?

'He is fat' ன்னு சொல்லலாம். 'He is stout' ன்னும் சொல்லலாம்.

குள்ளமா, தொந்தியும் தொப்பையுமா இருக்கற ஆளுங்களை வர்ணிக்கறப்போ 'tubby' ங்கற வார்த்தையை use பண்ணலாம்.

"He is tubby' ன்னா அந்த ஆளு குட்டையா, குண்டா, தொந்தியும் தொப்பையுமா இருக்கான்'னு அர்த்தம்.

அவன் சரியான குண்டன் என்று ஒருவரைப் பற்றி விமர்சனமா பேசும் போது மட்டும் 'fat' ங்கற வார்த்தையை use பண்ணுங்க.

கொஞ்சம் மரியாதையா, அதாவது அவர் பருமனான ஆள்ன்னு நாசூக்காகச் சொல்லணும்னா 'He is a little over weight' ன்னு சொல்லுங்க.

ஒரு குழந்தை கொழு, கொழுன்னு குண்டா, அழகா இருந்தா "chubby"ங்கற வார்த்தையை use பண்றது வழக்கம்.

'The child is chubby' ன்னு சொல்லுங்க. சரி, அந்தப் பொண்ணு ஒல்லியா இருக்கா, ஒட்டடைக்குச்சி மாதிரி இருக்கா, கொழு கொழுன்னு கொழுக்கட்டை மாதிரி இருக்கா என்றெல்லாம் எப்படிச் சொல்றது?

அடுத்த வாரம் பார்க்கலாம்.

(தொடரும்)



# கலக்குது பார் நம்ம ரயிலு!

● ஒரு "அதிபுத்திசாலி" நீளமான ரயிலின் கடைசி பெட்டியில் பயணம் செய்துகொண்டிருந்தார். எல்லா ஸ்டேஷன்களிலும், ஸ்டேஷனுக்கு வெளியே, பிளாட்பாரத்தை விட்டு, வெகு தூரத்தில் இவர் பெட்டி நிற்கும்படி ஆகிவிடும். அப்போது, சக பயணியிடம் இவர் சொன்னார்.

"ஏங்க! இந்த ரயில் நகருகிறதா இல்லையா? கபாசிடி 40000 என்கிற ஊரிலேயே நிற்பது போல இருக்கிறதே!'

அவர் சொன்னார்: "ரயில் போய்க் கொண்டுதான் இருக்கிறது. நம் பெட்டி, ஸ்டேஷனுக்கு வெளியில் நிற்கிறது. கபாசிடி 40000 என்பது ஊர் பெயரில்லை. ஸ்டேஷன் தண்ணீர்த் தொட்டியின் கொள்ளளவு!

● ஓர் இளைஞன் ரயில் முன் விழுந்து தற்கொலை செய்து கொள்ள முடிவு செய்து, தண்டவாளத்தின் அருகே நின்று கொண்டிருந்தான். அந்த வழியே வந்த ஒருவர், "என்ன பண்ணிக் கொண்டிருக்கிறாய்?'' என்று கேட்க, ''தற்கொலை செய்து கொள்ளப் போகிறேன்."

"அது என்ன கையில் ஏதோ பொட்டலம்?''

"நம் ஊர் ரயில்களை நம்ப முடியாது. ரயில் வர லேட்டானால் பசிக்குமே! அதற்காக பிரியாணி!"

● மணிக்கு நூறு கிலோமீட்டர் வேகத்தில் ரயில் விரைந்து கொண்டிருந்தது. ஒரு ஆசாமி, ரயிலுக்கு வெளியே, ஜன்னல் கம்பிகளைப் பிடித்தபடியே தாவித் தாவி, ரயிலின் பின்பகுதியை நோக்கிப் போய்க்கொண்டிருந்தார். பதறிப்போன ஒரு பயணி, "ஏன் அவசரப்பட்டு, ரிஸ்க் எடுக்கிறாய்? ரயில் நின்ற பிறகு போகலாமே!'' என்றவுடன், அந்த ஆசாமி சொன்னார். இஞ்சினில் டிரைவர் மயக்கமடைந்துவிட்டார். அந்தத் தகவலை கார்டிடம் சொல்லி, ரயிலை நிறுத்தத்தான் போய்க் கொண்டிருக்கிறேன்.''

● ரோம் நகரின் பிரதான ரயில்வே ஸ்டேஷனுக்கு வெளியே, ஒரு ஞாயிற்றுக்கிழமை ஒரு எக்ஸ்பிரஸ் ரயில், வழக்கத்துக்கு மாறாக, இருபத்தி ஐந்து நிமிடங்கள் நிற்க வேண்டியதாகிவிட்டது. காரணம், தண்டவாளத்தில் ஒரு பூனை, குட்டிப் போட்டு விட்டதுதான்!

● வட இந்திய கிராமப்புறங்களில் 'ருக்தா நகர்' ரொம்ப பிரபலம். இது எங்கே இருக்கிறது என்கிறீர்களா? ரயில்வே டைம் டேபிளில் தேடினாலும் இந்த ஊர் கிடைக்காது. காரணம் இப்படி ஒரு ஊரே கிடையாது. ரயில்பாதை அருகில் உள்ள கிராமங்களிலிருப்பவர்கள், ரயிலில் பயணம் செய்கிற போது தங்கள் கிராமம் வந்தவுடன், அபாயச் சங்கிலியை இழுத்து ரயிலை நிறுத்திவிட்டு, இறங்கி, தாங்கள் பாட்டுக்குப் போய் விடுவார்கள். இதற்குத்தான் ருக்தா நகர் என்று பெயராம். 'ரொக்னா' (நிறுத்தம்) என்ற வார்த்தையிலிருந்து இது உருவானது.

● மறைந்த பாராளுமன்ற உறுப்பினர் பிலுமோடியின் நகைச்சுவை வெகு பிரசித்தம். ரயில்வே அமைச்சருக்கு அவர் எழுதிய ஒரு கடிதத்தில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார். "போன தடவை, நான் பயணம் செய்த முதல் வகுப்பு ரயில் பெட்டியில் இரண்டு கரப்பான் பூச்சிகள் இருந்தது பற்றி உங்களுக்குப் புகார் எழுதியிருந்தது நினைவிருக்கும். இப்போது நிலைமை முன்னேறி இருக்கிறது. இந்தத் தடவை நான் பயணம் செய்த ரயில் பெட்டியில் நாலு கரப்பான் பூச்சிகளைப் பார்த்தேன்!''

● ஊரிலிருந்து வரும் மனைவியை அழைத்துவர, ஸ்டேஷனுக்குப் போனார் ஒருவர். ரயிலில் வந்து இறங்கிய மனைவியின் கைகளைப் பிடித்துக்கொண்டு முத்தமிட்டார். மனைவி, "அதோ அவரைப் பாருங்கள். தம் மனைவிக்கு எத்தனை அழுத்தமாக முத்தம் கொடுக்கிறார்?'' என்றார். அதற்குக் கணவன் சொன்னார். "அவர் மனைவியை ரயில் ஏற்றி அனுப்ப வந்தவராக இருக்கும்."

நன்றி: A Train Load of Jokes and Anecdotes

தொகுப்பு: மானஸா



# புற்றுநோய்க்கு தெய்வீக இயற்கை மூலிகை மருத்துவம்



நம் உடலில் உள்ள ஒவ்வொரு செல்களும் வளருகின்றன. ஒவ்வொரு நிமிடமும் பழைய செல்கள் அழிந்து புதிய செல்கள் உருவாகி கொண்டே இருக்கின்றன. இதற்கு இயற்கையாகவே ஒரு கட்டுப்பாடு உள்ளது. ஆனால் சில செல்கள் கட்டுப்பாடின்றி உடலின் எந்த இடத்திலும் பல்கிப் பெருகி வளர ஆரம்பிக்கும். கட்டுப்பாடு இல்லாமல் வளர்ச்சியடையும் செல்கள் ஒரு கட்டியாக மாறுகிறது. இதைத்தான் புற்றுநோய் என்கிறோம். எல்லா ரக புற்று நோய்களுக்கும் சில வகை பழக்க வழக்கங்களே காரணமாக இருக்கின்றன. புகையிலை போடுவதால் வாயில் புற்று நோய், சிகரெட் பிடித்தல் காரணமாக நுரையீரல், தொண்டை, உணவுக் குழாய், மூத்திரப்பையில் புற்று நோய், பொடி போடுவதால், மூக்கில் புற்று நோய், மது அருந்துவதால் காமாலை வந்தால் கல்லீரல், இரப்பையில் புற்றுநோய் அதிக குழந்தைகளை பெறுதல், பல ஆண்களுடன் தொடர்பு கொள்ளுதல் ஆகியவற்றால் கர்ப்பபை புற்று நோய், ஏற்படுகின்றது. மேலும் நாம் உண்ணும் உணவு வகைகள் தயாரிப்பில் நிலங்களில் அதிகமான இரசாயன உரங்கள், மருந்துகள் சேர்ப்பதாலும், சுகாதாரமற்ற சுற்றுபுற சூழ்நிலைகளாலும், அவ்வப்போது நாம் உபயோகிக்கும் இரசாயன மாத்திரைகளாலும் அதிகமான கோபம், பயம், மன உளச்சல், பரபரப்பு, அடிக்கடி உணர்ச்சி வயப்படுதல் போன்றவற்றின் காரணமாக தோன்றும் நரம்புத் தளர்ச்சியாலும் புற்றுநோய் வரலாம். ஒரு புற்று நோய் செல் பல்கி பெருகி புற்று நோய் கட்டியாக மாறுவதற்கு குறைந்தது 7 முதல் 10 ஆண்டுகள் ஆகும்.

**புற்றுநோய் ஆரம்ப அறிகுறிகள்** ஒவ்வொரு உறுப்புக்கும் எந்தவிதமான நோய் வந்தாலும் ஒரேவிதமான அறிகுறிகள்தான் தென்படுகின்றன. உதாரணமாக காசநோய், நிமோனியாக் காய்ச்சல் ஆகியன நுரையீரலைத் தாக்கும்போது இருமல், சளி, மூச்சு வாங்குதல், சளியில் இரத்தம் ஆகிய அறிகுறிகள் தென்படுகின்றன. நுரையீரலைப் புற்றுநோய் தாக்கும் போதும், இதே அறிகுறிகள்தான் இருக்கும். இதேபோன்று வயிற்றுப் புண்ணுக்கு இருக்கும் அறிகுறிகள்தான் இரப்பையில் புற்றுநோய் வந்தால் இருக்கும். எனவே எந்த நோயின் அறிகுறிகளும் இரண்டு வாரத்திற்கு மேல் இருந்தால் உடனடி மருத்துவ ஆலோசனை அவசியம். எச்சில் துப்பும்போது ரத்தம் வந்தால் அலட்சியப்படுத்தக் கூடாது. ஏனெனில் புற்று நோய்க்கென தனிப்பட்ட அறிகுறிகள் கிடையாது. பொதுவான அறிகுறிகளுடன் புற்றுநோய் இருக்க வாய்ப்புகள் அதிகம்.

**புற்றுநோய்க்கு தெய்வீக மூலிகைகள்** வேப்பிலை, வில்வம், துளசி, மாவிலை, அருகம்புல், அத்தி, வெற்றிலை, தும்பை, கீழாநெல்லி, நித்திய கல்யாணி, முருங்கை, நெல்லி, கரிசலாங்கன்னி, வல்லாரை ஆகியவைகளை பொடி செய்து பின் சமஅளவில் ஒரு பாட்டிலில் கலந்து வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு ஒருமணி நேரம் முன்பாக காலை, பகல், இரவு ஆகிய மூன்று வேளையும் உட்கொள்ள வேண்டும். இம் மூலிகைகளினால் முதலில் புற்று செல்கள் பெருகி வளர்ச்சி அடைவது தடுக்கப்படுகின்றது. பின்னர் புற்று செல்கள் உருவாகாமாலும், கட்டிகள் உடைந்து மெதுவாக வெளியேற்றப்படுகின்றது. இந்த தன்மை மேற்கூறிய மூலிகைகளுக்கு உண்டு என்பது மறுக்கப்படாத உண்மையாகும்.

**புற்றுநோய்களைத் (குவிக்கும்) தடுக்கும் உணவு வகைகள்** புற்று நோயாளிகளுக்கு பச்சை காய்கறிகள் நல்லது. மஞ்சள் நிறத்திலும், பச்சை நிறத்திலும் உள்ள காய்கறிகள் மற்றும் பழங்கள் புற்று நோயைத் தடுக்க கூடியவை. இவற்றில் வைட்டமின் ஏ,சி சக்திகள் அதிகம். வைட்டமின் ஏல் பீட்டாகரோட்டின் என்ற பொருள் உள்ளது. இது ஒரு ஆண்டி ஆக்சிடெண்ட் புற்று நோயை தடுக்கும் குணம் இதற்குண்டு. காரட், தக்காளி, மாம்பழம், பலாப்பழம், கொய்யா, ஆரஞ்சு, ஆப்பிள், திராட்சை, எலுமிச்சை, நெல்லிக்காய், முட்டைகோஸ் பீட்ருட் போன்றவற்றில் மேற்சொன்ன சத்துக்கள் அதிகமுள்ளன. இவற்றை அடிக்கடி உண்பவர்களுக்கு புற்றுநோய் வரவாய்ப்பில்லை. இதேபோல் நார்பொருள் நிறைந்த உணவுகளை சாப்பிட்டால் பெருங்குடல் தொடர்பான புற்றுநோய்கள் வருவது குறைகிறது. கோதுமை, கம்பு, சோளம், கேழ்வரகு, தேங்காய், நிலக்கடலை, அவரை, கத்திரிக்காய், வெள்ளரிக்காய், வெண்டைக்காய், பட்டாணி, வெங்காயம், பேரிச்சம்பழம், வாழைப்பழம் ஆகியவற்றில் நார்ச்சத்து அதிகம். மேலும் முருங்கை கீரை, பொன்னாங்கன்னி கீரை, மணத்தக்காளி, இலைகள், மஞ்சள், சீரகம், துளசி, கசகசா, வெள்ளைப்பூண்டு, ஏலக்காய் ஆகியவற்றிலும் புற்று நோயைத் தடுக்கின்ற நொதிப் பொருட்கள் அடங்கியுள்ளன. ஆகவே இவைகளை அடிக்கடி நமது உணவுகளில் தவறாமல் பயன்படுத்துவது நல்லது.



*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*


தலைமை முகவரி : **Dr.M.குருபரன், Dr.M.சபாபதி, & Dr.M.சிவசக்தி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்**

P.B.No:30,No:3, திருநாத முதலி நகர், காலேஜ் எதிரில், திருப்பத்தூர் (N.A.A.) 635601 ✆ 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேனர் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 ✆ 6424285, 6427638


**குறிப்பு:** சென்னை, வேலூர், காஞ்சீபுரம், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, ஓசூர், சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்

**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 26 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.60/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.60/-ம் தலைமை முகவரிக்கு D.D. அல்லது M.O. அனுப்பவும்.

7 & 8-ந் தேதி - மும்பை : காலை 9 to இரவு 8 மணி வரை The South Indian Concerns Ltd., 401, Telang Road, Matunga, (CR), Ph : 4011589

9-ந் தேதி - பெங்களூர் : காலை 11 to 1 ஹோட்டல் பிரைட்வே, கல்பனா தியேட்டர் அருகில் கெம்பே கவுடா ரோட் ✆ : 2266374

18 & 19-ந் தேதி-புது டெல்லி: காலை 9 to இரவு 8 மணி வரை South Indian Hotel, 10211, Padam Singh Road, Ajmal Khan Road, Karol Bagh, ✆ : 5717126, 5723651




2000 மே 21
விக்ரம வைகாசி 8
மலர் : 58
இதழ் : 43

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கிராமங்களையும் கொஞ்சம் கவனியுங்கள்!

தொழில்துறை முதலீட்டில் முன்னணி வகித்த மாநிலம் மஹாராஷ்டிரா. நீண்ட நெடுங்காலமாக இப்பெருமையை அனுபவித்து வந்த அம்மாநிலம், இவ்வாண்டு தமிழகத்திடம் தோற்கும்படி நேர்ந்திருக்கிறது! தமிழகத்தின் தொழில் துறை முதலீடு 1,56,893கோடி ரூபாய்! மஹாராஷ்டிரம் இரண்டாவது இடத்துக்குத் தள்ளப்பட்டிருக்கிறது.

ஈரோடு பகுதியில் தொழில் வளர்ச்சி மையம், ஸ்ரீபெரும்புதூரில் ஏற்றுமதி தொழில் பூங்கா, கும்மிடிப்பூண்டியில் புதிய தலைமுறைக்கான ஆணுறைகள் தொழிற்சாலை, நாங்குனேரியில் ஹைடெக் தொழில் பூங்கா, ஹோசூரில் 220 ஏக்கர் விஸ்தீரணத்தில் மலர்கள் பண்ணை, இருங்காட்டுக்கோட்டையில் பெட்ரோலியப் பொருட்கள், கண்ணாடி தொழிலகங்கள், கடலூரில் எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலை என்று தமிழக அரசின் ஆதரவுடனும் பங்கேற்புடனும் பெருகிவரும் தொழில் திட்டங்களின் பட்டியல் நீள்கிறது.

தகவல் தொழில்நுட்பம் எனப்படும் கம்ப்யூட்டர் துறையில் முதலீடு செய்ய தமிழகமே தலைசிறந்த மாநிலம் என்று சாஃப்ட்வேர் தொழில்துறையின் தேசிய கூட்டமைப்பான நாஸ்காம் (NASSCOM) சிபாரிசு செய்கிறது.

சென்னையில் தகவல் தொழில்நுட்பப் பூங்காவைத் தொடங்கிவைக்கப் பிரதமர் பறந்து




வரும்போது (ஜூலை 4) புத்தம்புது மேம்பாலங்களுடன் தலைநகர் மின்னிக் கொண்டிருக்கும்.

மேம்பாலங்களின் அவசியம் குறித்து இன்று கேள்வி எழுப்புவோர்கூட இன்னும் 2-3 ஆண்டுகளில் அவற்றின் முக்கியத்துவத்தை முழுமையாய் உணர்ந்து 'தமிழக அரசின் தீர்க்கதரிசனத்தைப் பாராட்டவே செய்வார்கள்.

கடந்த நான்கு ஆண்டு தி.மு.க. ஆட்சியில் தமிழகம் பல முனைகளில் முன்னேறியிருக்கிறது- குறிப்பாகத் தொழில் துறையில்-அதிலும் தகவல் தொழில்நுட்பத் துறையில். 1995-96ல் 37 கோடி ரூபாய் பெறுமானமுள்ள மென்பொருள் ஏற்றுமதி செய்யப்பட்ட இடத்தில் இவ்வாண்டு 1890கோடி ரூபாய் மதிப்புள்ள மென்பொருள் ஏற்றுமதியாகியுள்ளது- இந்த ஒரு தகவலே வளர்ச்சிக்குச் சான்று.

ஆனால், இத்தனை வளர்ச்சி இருந்தும் கிராமப்புறங்களில் வேலையின்மை பிரச்னை பன்மடங்காக அதிகரித்திருக்கிறது. கவலைதரும் இத்தகவலை கோலப்பன் கமிட்டி ஆய்வறிக்கை விவரங்களுடன் வெளியிட்டிருக்கிறது.

கிராமங்களில் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகக் காரணம் ஜனத்தொகை பெருக்கம் மட்டும் அல்ல. தொழில்துறை வளர்ச்சி கிராமப்புற ஊழியர்களின் பங்கேற்பைக் கோருவதாக அமையவில்லை என்பதும் அவ்வறிக்கையில் சுட்டிக்காட்டப்பட்டிருக்கிறது.

கிராமப்புற உழைக்கும் வர்க்கத்தினருக்கு ஆண்டு முழுவதும் விவசாய வேலை கிடைப்பதில்லை. சாகுபடி, அறுவடைக் காலங்கள் போக எஞ்சிய காலத்தில் அவர்கள் வயிறு கழுவ திண்டாட வேண்டியிருக்கிறது.

கோலப்பன் கமிட்டி அறிக்கை, இத்தகைய ஊழியர்களுக்கு உதவ பல நலத் திட்டங்களைச் சிபாரிசு செய்கிறது.

மனிதாபிமான நோக்கில் இந் நலத்திட்டங்கள் அவசியம்தானென்றாலும் அவற்றால் வேலையின்மையைப் போக்க முடியாது; கிராமப்புற பொருளாதாரத்தை மேம்படுத்த முடியாது.




தமிழக தொழில்துறை வளர்ச்சி என்பது கிராம ஊழியர்களின் வளர்ச்சியையும் உள்ளடக்கியதாக அமைந்தால் அன்றி அது முழுமையான வளர்ச்சியாக இராது.

ஹார்வார்டு பல்கலைக் கழகம் தமிழ்நாட்டின் தகவல் தொழில்நுட்பத் துறை கண்டுள்ள வளர்ச்சியை ஆய்வு செய்து, பாராட்டி அளித்துள்ள அறிக்கையில்கூட, அவ்வளர்ச்சியின் பயன் கடைநிலை மக்களிடையே பரவினாலன்றி முன்னேற்றம் முழுமையானதாக இராது என்று குறிப்பிட்டிருக்கிறது.

பாரபட்சமின்றி வழங்கப்பட்டுள்ள இந்த விமர்சனத்தைப் பெருந்தன்மையுடன் ஏற்று, கையேடாக அச்சிட்டு வினியோகித்திருக்கிறார் தமிழக முதல்வர்.

ஹைடெக், ஏற்றுமதி தொழிலகங்கள் விரைவாக லாபம் ஈட்டித் தரக்கூடியவை என்பதால் அவற்றில் சிறப்புக் கவனம் செலுத்துகிறார் முதல்வர். தகவல் தொழில் நுட்பத்துக்கென்று ஒரு துறையையே தோற்றுவித்திருக்கிறார். இதை வரவேற்கும் வேளையில் அதே முனைப்பை, கிராமப்புறத் தொழில்கள் வளர்ச்சியிலும் செலுத்த நினைவூட்டுகிறோம்.

விவசாயம் சார்ந்த தொழிலகங்கள், நகரங்களிலும் புறநகர்ப்பகுதியிலும் தொடங்கப்படும் பிரதான தொழிலகங்களுக்குத் தேவையான உதிரி பாகங்கள் உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் போன்றவற்றைக் கிராமப் பகுதிகளில் ஆரம்பித்து வேலை வாய்ப்பைப் பெருக்கலாம்.

ஆனால், அப்பகுதிகளில் தொழில்கள் தொடங்குவதற்கு அவசியமான அடிப்படை வசதிகளில் (தடையில்லாத மின்சாரம், சாலைகள், போக்குவரத்து) முதலில் கவனம் செலுத்தியாக வேண்டும்.

இதில் உடனடி கவனம் செலுத்துவது அத்தியாவசியமானது. ஏனெனில், தன்னிறைவு காணாத கிராமங்களும் வறுமையில் வாடும் கிராமங்களும் ஒரு மாநிலத்தின் கரும்புள்ளிகள் மட்டும் அல்ல; அவை அதிருப்திக்கும் அதன் விளைவான வன்முறைக்கும் மோதல்களுக்கும் தீவிரவாதத்துக்கும் விளைநிலங்கள். அடுத்த ஆண்டு தேர்தலைச் சந்திக்கவிருக்கும் முதல்வர் இதை மறந்துவிடக் கூடாது. ○

# ஊருக்குக் கிளம்பறீங்களா?

# பெட்டி நிறை

கிளம்பறதுக்கு முன்னால ஒரு சின்ன லிஸ்ட் போட்டுக்குங்க.

டிரஸ், செருப்பு-ஷூ, ஹேர் ஆயில், சீப்பு, பவுடர், டூத் பேஸ்ட், பிரஷ், ஷாம்பூ, தலைவலி-ஜலதோஷம்-அஜீர்ணக் கோளாறு மாத்திரைகள், கேமரா (ஃபிலிம் போட்ருக்கா பாத்துருங்க), டார்ச் லைட், (செல் இருக்கா பாருங்க)அலார்ம் டைம் பீஸ்.

ஆங்... முக்கியமா டிக்கட்டு, பணம். கேஷாத்தான் எடுத்துட்டுப் போகணும்னு இல்லே. டிராவலர்ஸ் செக் இருக்கு. ஸ்டேட் பாங்க் கூட புதுசா அறிமுகப்படுத்தியிருக்கே...

எல்லாம் பாக் பண்றதுக்கு முன்னாடி, லிஸ்ட்படி சரியா இருக்கான்னு செக் பண்ணி டுங்க. இல்லேன்னா ஊர்ல போய் இறங்கி னதும் டூத் பேஸ்ட், சோப்புன்னு வாங்கக் கடையைத் தேடி ஓடணும்! தேவையா அது?

## பாக் பண்றது எப்படி?

'ஏங்க, இதுகூடவா தெரியாது?'ன்னு நிச்சயம் கேட்பீங்க. இருந்தாலும் சொல்லிடறேன்:

உங்களால எவ்வளவு சுமக்க முடியுமோ அதை மட்டுமே சூட்கேஸ்ல வையுங்க. சும்மா, இருக்கிற எல்லாத் துணிமணியையும் குத்தித் திணிக்காதீங்க. உங்க தேவைக்கு ஏத்த மாதிரி சைஸ்ல சூட்கேஸ் எடுத்துக்குங்க. சின்னப் பெட்டியா எடுத்துக்கிட்டு, அதுல சாரிஸ், ஷர்ட், பாண்ட் எல்லாம் போட்டுத் திணிச்சா மடிப்பெல்லாம் கலைஞ்சு போய், புளிப் பானைக்குள்ள வச்சிருந்து எடுத்தது போல இருக்கும். எத்தனை நாள் ஸ்டே, எத்தனை டிரஸ் தேவையா இருக்கும்னு கணக்குப் பண்ணி எடுத்துட்டுப் போங்க. ஒரே பாண்ட், ரெண்டு ஷர்ட்டுக்கு மாட்ச் ஆகிற மாதிரி இருந்தா, ஒரு பாண்ட் போதும். ரெண்டு டீ ஷர்ட்டுக்கு ஒரு ஜீன்ஸ் மாட்ச் ஆச்சுன்னா ஒரு ஜீன்ஸ் போதுமே, ரெண்டு எதுக்கு? இந்த டிப்ஸ் எல்லாம் பெட்டில இடத்தை மிச்சம் பிடிக் கறதுக்குத்தாங்க!

பிளாஸ்டிக் பேக்ல போட்ட ஷூ, ஷேவிங் கிட் மாதிரி ஐட்டம் எல்லாம் பெட்டிக்கு உள்ளே, ஹிஞ்சஸ் பக்கத்திலே அடுக்கிடுங்க. ஸ்வெட்டர், சாக்ஸ், டீ-ஷர்ட் மாதிரி, மடிப்புக் கலைஞ்சாலும் பாதகமில்லாததை எல்லாம் அழகாகச் சுருட்டி அது மேல வச்சிடுங்க. இப்படி வச்சுட்டா ஷூ, கிட் எல்லாம் நகராது. சட்டை-பாண்ட் மடிப்பு, கலையாது. ஹேர் க்ரீம் அல்லது ஹேர் ஆயில், பவுடர் எல்லாத்தையும் ஒரு பிளாஸ்டிக் பைல போட்டு சைடுல ஓரமா வச்சுடுங்க. (ஹேர் ஆயில் சாய்ந்தால் ஒழுகாம இருக்கணும். கவனிச்சுக்குங்க)

திரும்பி வரும்போது ஏதும் வாங்கி வராமலா இருப்பீங்க? மடிச்சுப் பெட்டியில வச்சுக்கற மாதிரி துணி, இல்லேன்னா பிளாஸ்டிக், ரெக்ஸின் பை ஒண்ணையும் எடுத்துக்குங்க. உபயோகமா இருக்கும்.



• துணிகளை வைக்கும்போது, ஷர்ட் காலர் மடிஞ்சிடாம வையுங்க. எல்லாத் துணிகளையும் ஒண்ணு மேல ஒண்ணா ஒரே மாதிரி அடுக்காம, பெட்டிக்குள்ள வெய்ட் ஒரு இடத்துல கூடுதலாவும், இன்னொரு இடத்துல குறைச்சலாவும் இருக்கற மாதிரி வைக்காம,

சமமாகவும் பரவலாகவும் அட்ஜஸ்ட் பண்ணி வையுங்க.

ஊர் போய்ச் சேர்ந்த உடனே எந்தத் துணியை முன்னால எடுக்கணுமோ, அதை மேலே வச்சடுங்க- அதாவது பனியன், டவல் மாதிரி.

ஷர்ட்-பேன்ட் போதும்கிற போது, ஸூட் எல்லாம் அநாவசியமா எடுத்துட்டுப் போகாதீங்க. ஓவர் வெய்ட், ஆளுங்களுக்கு மட்டுமில்லே, பெட்டிக்கும் நல்லதில்லே!

சின்னதா ரெண்டு சூட்கேஸ் இருந்தா ஆளுக்கு ஒண்ணா தூக்கிட்டுப் போறது ஈஸி. அவங்கவங்க டிரஸ், மத்த ஐட்டங்களை அழகாப் பிரிச்சு ஒவ்வொண்ணுலயும் வச்சிடலாம்.



இல்லியா?

லெதர் சூட்கேஸ்னா, மூணு நாலு மாசத்துக்கு ஒரு தடவை, சிரமம் பார்க்காம, வேக்ஸ் பாலிஷ் போட்டுருங்க. கீறல் எதாவது இருந்ததுன்னு வையுங்க, அங்க மட்டும் லேசா ஷூ பாலிஷ் போட்டுரலாம்.

வி.ஐ.பி. மாதிரி சூட்கேஸ்னா, கீறல் தாங்கும். ஆனா உடையாது. கொஞ்சம் சூடான சோப்புத் தண்ணி போட்டுத் துடைச்சிட்டு, அப்புறம் நல்ல தண்ணில துணிய முக்கி துடைச்சு, பெட்டியப் பளபளன்னு வச்சுக்கலாம்.

ஊருக்குப் போய்ட்டு வந்தப்புறம் பெட்டியைப் படுக்க வைக்காமல், நிறுத்தி வையுங்க. ஓகே?

சூட்கேஸுக்கு வெளியில லேபில் மாதிரி ஒரு சின்ன அட்டை இருக்குமே? அதுல உங்க விலாசத்தை எழுதிடுங்க. இப்ப எல்லாம் ஒரே மாதிரி சூட்கேஸ் நிறையவே வருது. ஊர் வந்ததும் அவசரத்துல இறங்கறப்ப, உங்களோடதை எடுத்துக்காம, அதே மாதிரி இருக்கிற அடுத்த பயணியோட சூட்கேஸை எடுத்து வந்துட்டா? அப்புறம் லிஸ்ட் எல்லாம் போட்டுக் கஷ்டப்பட்டு எடுத்து வந்த டிரஸ்ஸும் மத்த சாமான்களும், உங்களுக்குப் பிரயோசனப்படாமலேயே போயிடுமே?- அதுக்குத்தான்!

பெட்டிய முதல்ல திருட்டுப் போகாம பாதுகாத்துக்குங்க. பத்திரமா இருந்தாத்தானே, மேலே சொன்ன மாதிரி சோப்புத் தண்ணி போட்டுத் துடைக்கலாம்; இல்லே வேக்ஸ் பாலிஷ் போடலாம்?

சர்தார்ஜி ஜோக்ஸ் மாதிரி நம்பூதிரி ஜோக்ஸ் உண்டு. ஒரு நம்பூதிரியோட பெட்டிய யாரோ தட்டிக்கிட்டுப் போய்ட்டான். நம்பூதிரி சொன்னார்: 'பெட்டிய எடுத்துட்டுப் போனா என்ன? சாவி எங்கிட்டதானே இருக்கு?'

— சித்தார்த்

(அடிப்படை: விஐபி வெளியிட்ட டிராவலர்ஸ் கைடு)



# டிப்ஸ்!

## பெட்டி பாதுகாப்பு

ஒரு தடவை டிராவல் பண்ணிட்டுப் பெட்டியத் தூக்கிக் கடாசிட மாட்டீங்க இல்லே? அடுத்த ட்ரிப்புக்கு வேணுமே? அதனால பெட்டிய பத்திரமா வச்சக்கணும்,

21

**சென்னைக்கு மேலாக ஹெலிகாப்டரில் பறந்தால் புத்தம்புது மேம்பாலங்கள் நெஞ்சு நிமிர்த்தி நிற்பதைப் பார்க்கலாம். ஹெலிகாப்டரெல்லாம் நமக்குச் சரிப்பட்டு வருமா... மாநகரப் பேருந்திலேயே புறப்பட்டோம் மேம்பால யாத்திரை!**



ஆயிரம் விளக்கு அருகே பீட்டர்ஸ் சாலை-சத்யம் தியேட்டர் சந்திப்பு. இங்கே இருவழிச்சாலை பாலம். ராயப்பேட்டை செல்லவும் ராயப்பேட்டையிலிருந்து அண்ணாசாலையை அடையவும், வாகனங்கள் விர்விர்ரென்று விரைந்து கொண்டிருந்தன. கோபாலபுரத்தில் உள்ள முதல்வர் வீட்டிற்கு மிகமிக அருகே இருப்பதால், இந்தப் பாலத்திற்கு வி.ஐ.பி. இமேஜ்! ஆனால், கீழேயுள்ள சர்வீஸ் சாலைகளில் மருந்துக்குக் கூட பிளாட்ஃபார்ம் காணோம்! பாலத்தைத் தாங்கி நிற்கும் தூண்களைச் சுற்றி செடிகள் வளர்க்க அலங்காரச் சுவர்கள் கட்டிக் கொண்டிருக்கிறார்கள்.

ஆயிரம் விளக்கு மசூதி வாசலில் தொடங்கும் பாலம், நியூ காலேஜ் வாயில் அருகே முடிந்துவிட... அங்கிருந்து வெறும் நூறு மீட்டர் இடைவெளியில் (பீட்டர்ஸ் ரோடு-வெஸ்ட்காட் சாலையில்) அடுத்த பாலம் தொடங்கிவிடுகிறது.

''இந்த இரண்டு பாலங்களுக்கும் இடையில் ஆதர்ஷ் வித்யாலயா, மொனாகன் மேல்நிலைப்பள்ளி, மாநகராட்சி நடுநிலைப்பள்ளி, நியூ காலேஜ் என்று நான்கு கல்வி நிறுவனங்கள் இருக்கு... காலையிலும் மாலையிலும் பத்தாயிரம் மாணவர்கள் இந்தச் சாலையைக் கடந்து போகணும். இரண்டு பாலத்திற்கும் இடையில் சுரங்கப்பாதை கட்டணும். இல்லேன்னா தலைவலிதான்'' என்றார் நாம் சந்தித்த புதுக்கல்லூரியின் விரிவுரையாளர் ஜாசிர் ஷெரிப்.

• ஜாசின் ஷெரீப்



• ஆண்ட்ரூஸ் ஜேக்கப்



ராயப்பேட்டை சிக்னல் பாலத்தை அடைந்து சுற்றிச் சுற்றி வந்தோம்... ராயப்பேட்டை மணிக்கூண்டு வழியாக, திருவான்மியூர், மந்தைவெளி, மயிலாப்பூர், தி.நகர் செல்லும் பேருந்துகள், வாகனங்கள் கண் இமைப்பதற்குள் டஜன் கணக்கில் கூடி விடும் இடம். இப்போது பாலம் கட்டி; பாதை பிரித்ததில் தடையின்றி போய்க் கொண்டிருந்தன.

ராயப்பேட்டை நெடுஞ்சாலை-டாக்டர் ராதாகிருஷ்ணன் சாலை சந்திப்பில் (ஜெம்மி பில்டிங்) திறக்கப்பட்டுள்ள பாலம். இங்கேயும் கீழே இருபுறமும் உள்ள சர்வீஸ் சாலைகளில் பிளாட்ஃபாரம் இல்லை! பயந்து பயந்து நடந்து வந்த பாதசாரிகள், பேருந்துபோன்ற பெரிய வாகனங்களைக் கண்டால்... ஓரத்தில் இருக்கும் கடைகளுக் குள் பாய்ந்து பதுங்கிக் கொண்டார்கள்!



போன நடைபாதை!



# மேம்பால யாத்திரை!

சர்வீஸ் சாலையில் சைக்கிள், மோட்டார் சைக்கிள் போன்ற இரு சக்கர வாகனங்களைக் கூட, பேருந்து ஓவர் டேக் செய்து போக முடியாது! இறக்கை கட்டிப் பறந்த மாநகரப் பேருந்தின் ஓட்டுனர்கள் இந்தப் பாலத்தின் சர்வீஸ் சாலையில் அடக்கித்தான் வாசித்தாக வேண்டும்!

இந்தப் பாலத்தின் மீது போடப்பட்ட சாலைகளில் திட்டுத்திட்டாகக் குழிகள்... "வேலை சீக்கிரம் நடக்க வேண்டி சப் கான்ட்ராக்ட் விட்டாங்க... அதான் இந்த நிலைமை" என்றார் பாலத்தின் கீழே வேலை செய்து கொண்டிருந்த ஒரு தொழிலாளி.

அடையாறு சந்திப்பில் கட்டப்பட்டிருக்கும் சுழல் பாலத்தை அடைந்தோம். ஒரு கணம்... மகிழ்ச்சி, அதிர்ச்சி, இரண்டும கலந்த சந்தோஷம். கன்னித்தீவு கதையில், சிந்துபாத்தை தூக்கிப்போகும் ராட்சஸ கழுகு நம்மையும் தூக்கி வந்து சிங்கப்பூரில் போட்டுவிட்டதோ என்ற குழப்பம். அப்புறம்தான் தெரிந்தது: காந்திநகர் முதல் தெருவை ஒட்டி, பட்டேல் சாலையில் இருந்த சாலையோரப் பூங்கா 'ஸ்வாகா' செய்யப்பட்டு, அந்த இடம் சர்வீஸ் டிராக்குகளாக பிரிக்கப்பட்டுள்ளது!

'சென்னை ரோட்டரி சங்கம் பராமரித்து வந்த பூங்காக்களைத் தியாகம் செய்த காந்திநகர் வாசிகளின் பெருந்தன்மை வாழ்க!' என்று கூற வாயெடுத்த போது ஒரு கண்டனக் குரல் பாய்ந்து வந்தது: "காந்திநகர் முதல் தெருவில் இருக்கிற ஒவ்வொரு வீட்டு ஓனரும், 1956-ல் இந்த ரோடு சைட் பார்க் இடத்தை பணம் கொடுத்து வாங்கி இருக்கிறார்கள்... பின்னால் இந்த பார்க்கில் கொஞ்சம் இடத்தை காந்திநகர் பேருந்து நிலையம் கட்டக் கொடுத்தோம்.... அதுக்குப் பிறகு... மிச்சம் இருக்கிற பார்க்கை கார்பரேஷன் பராமரிக்கட்டும்னு அவங்க கட்டுப்பாட்டுல விட்டோம்... ஆனா அவங்க பராமரிக்கலே. தனியார் வந்து ஆக்கிரமிச்சு கடைபோட்டாங்க... அப்பவும் பார்த்துக்கிட்டுதான் இருந்தாங்க. இதனால... இங்கே பார்க்கைத் தவிர வேற எந்த கட்டடத்தையும் மாநகராட்சி அனுமதிக்கக் கூடாது. வேறு எதுக்கும் பயன்படுத்தக் கூடாதுன்னு சென்னை உயர்நீதிமன்றம் 1975-ல் உத்தரவு போட்

• அதற்குள் பள்ளங்கள்! (ராயப்பேட்டை ஜெம்மி பில்டிங் மேம்பாலம்)



டிருக்கு... எங்க பிள்ளைகள் விளையாட நாங்க வாங்கின இடத்துல இப்போ மூணு அடி பிளாட்ஃபார்ம் மட்டும் போட்டுட்டு மீதியை சாலையா மாத்திட்டாங்க. இதை நான் விடற மாதிரி இல்லை. சுப்ரீம் கோர்ட் வரைக்கும் போவேன்" என்று பொங்கினார் காந்திநகர் முதல் தெருவாசியான ஆண்ட்ரூஸ் ஜேக்கப். கோபத்தில் கோர்ட் ஆர்டரையும் நம்மிடம் கொடுத்து 'இதுக்கு என்ன சொல்றீங்க' என்றார்!

அடையாறு சந்திப்பில் பூக்கடை, பழக் கடை வைத்திருந்த அனைவரையும் அப்புறப்படுத்தி அடையாறு பழைய பாலம் அருகே கடைகள் கட்டித்தரப்பட்டுள்ளன.

"நாற்பது பேருக்குக் கடைகட்டி கொடுத் திருக்காங்க... ஆனா... இங்கே யாரும் பூவோ பழமோ வாங்க வர்றதில்லே... கடை பார்வையா இல்லே... பத்து பேருக்குத்தான் வயித்துப் பிழைப்பு ஒடுது... முப்பதுபேரு கடையே திறக்காம போட்டுட்டுப் போயிட்டாங்க" என்றார், பத்து வருடமாக அடையாறில் பூ வியாபாரம் செய்து வரும் ரமணி. பெரிய சௌகரியத்துக்குப் பின்னால் பல சோகங்கள்!

**நான் நாத்திகனில்லை—19, குறையொன்றுமில்லை—69 தொடர்கள் அடுத்த இதழில் இடம்பெறும்.**

ஆழ்வார்பேட்டை டி.டி.கே. சாலை-சி.பி.ராமசாமி சாலை சந்திப்பில் கட்டப்பட்டு வரும் ஒரு வழிச்சாலை-பாலம், மியூசிக் அகாதமி அருகே டி.டி.கே. சாலை, ராதாகிருஷ்ணன் சாலையில் கட்டப்பட்டு வரும் இருவழிச்சாலை பாலம், எழும்பூர் பாந்தியன் சாலை யில் கட்டப்பட்டு வரும் ஒருவழிச்சாலை பாலம் மூன்றிலும் விறுவிறுப்பாக வேலை நடந்து வருகிறது. ஆனால், பாந்தியன் சாலை பாலம் எதற்குக் கட் டப்படுகிறது என்பது அங்குள்ள வர்களுக்கே புரியவில்லையாம்.

பெரம்பூர் சர்ச்பாயிண்ட் ரயில்வே மேம்பாலத்துக்கு மேலே கட்டப்பட்டு வரும் பிரமாண்ட மேம்பாலப் பணிகள் ஆமை வேகத்தில் நடக்கின்றன. இங்கு குடிசை களை அப்புறப்படுத்துவதிலும், தேவையான இடத்தை தனியாரிடமிருந்து கையகப் படுத்துவதிலும் நிறைய தலைவலிகளாம்... அதனால்தான் பதினெட்டு மாதத்தில் முடிக்க வேண்டிய பாலம் சில தூண் களோடு மட்டுமே நினைவுச் சின்னம் மாதிரி நின்று கொண்டிருக்கிறது!

இவை ஒருபுறமிருக்க... சைக்கிள் ஓட்டுபவர் தொடங்கி, பேருந்து ஓட்டுனர் வரை மினிமேம்பாலங்களில் பயணம் செய்யும் அத்தனைபேரும் சிறகுகள் முளைத்துவிட்டது போன்ற சந்தோஷத்தில் பறக்கிறார்கள்...

'சந்தோஷமெல்லாம் கிடக்கட்டும்! பாலங்கள் கட்டும் பணியில் இந்திய ரோட் காங்கிரஸ் விதிகள் பின்பற்றப்படவில்லை— கோடிக் கணக்கில் ஊழல் நடந்திருக்கிறது. ஒவ்வொன்றுக்கும் ஆதாரம் இருக்கிறது என்பது மாநகராட்சி எதிர்க்கட்சித் தலை வரான வெற்றிவேலின் குற்றச்சாட்டு. அவரது ஒவ்வொரு குற்றச்சாட்டுக்கும் பதில் வைத்திருக்கிறார் சென்னை மாநகராட்சி ஆணையர் ராதாகிருஷ்ணன்.

கொஞ்சம் மூச்சு விட்டுக்கங்க. அந்த மோதலின் விவரங்கள் அடுத்த வாரம் தான்!

— ஆர். சி. ஜெயந்தன்

படங்கள்: வெங்கடேஷ்



"கருணாநிதி நாட்டின் முதிர்ந்த அரசியல் தலைவர்களுள் ஒருவர். இலங்கைப் பிரச்னையின் முழு வீச்சையும் நன்கு உணர்ந்தவர். அவர் அனுபவத்தைத்தான் நாங்கள் நம்பியிருக்கிறோம்" - பத்திரிகையாளர்களிடம் சொன்னவர் சாக்ஷாத் அயலுறவுத் துறை அமைச்சர் ஜஸ்வந்த் சிங்.

மத்திய அரசின் பிரதிநிதியாக அவர் மனப்பூர்வமாகப் பேசியது தமிழக முதல்வரின் பொறுப்பை அதிகரித்துவிட்டது. அவரும், "மத்திய அரசின் கரங்களை நாங்கள் கட்டிவைக்க மாட்டோம்" என்று ஒத்துழைப்புப் பிரகடனம் செய்து விட்டார்.

இலங்கைப் பிரச்னையை எப்படி அணுகினாலும் முள் மேல் விழுந்த சேலையை எடுப்பது போல்தான். அதனால்தான் ஆலோசனைக் கூட்டங்களில் அனைத்துத் தரப்பினரையும் ஈடுபடுத்த மத்திய அரசு மீண்டும் மீண்டும் முயன்று வருகிறது.

தமிழகத்தின் பா.ஜ.க. கூட்டணித் தலைவர்கள் (தி.மு.க. நீங்கலாக), பிறகு தி.மு.க. தலைவர் - முதல்வர், மத்திய அமைச்சரவையின் பாதுகாப்புக் குழு, வெளி-உள்விவகாரத் துறையினர், பாதுகாப்புத் துறையினர் இடம்பெற்ற குழு,

# ஜெ. டெல்லிக்கு வருவாரா?



அனைத்துக் கட்சிப் பிரதிநிதிகள் குழு என்று தனித்தனியாக அழைத்து ஆலோசனைக் கேட்கச் செய்தார் பிரதமர்.

"இலங்கை ராணுவத்துக்கு உதவுவது தமிழ் விரோதம்" என்று வைகோ, ராமதாஸ் போல் பிறர் வெளிப்படையாகச் சொல்லவில்லைதான். ஆனால் யாருமே 'உதவியனுப்ப வேண்டும்' என்றும் பளிச்சென்று கூறிவிடவில்லை.

இலங்கை அரசுக்கு உதவுவது வம்பை விலைக்கு வாங்கும் காரியம் என்பதில் உறுதியாய் இருந்தாலும் இந்தியா உதவாது போனால் பிற நாடுகள் உதவிக்கு வருமே என்று கவலைப்படுகிறார்கள் சில அரசியல் நோக்கர்கள். உதாரணமாக, பாகிஸ்தானோ சீனாவோ, சந்திரிகா அரசுக்கு உதவுமானால் அந்நாடுகளுக்கு இந்துமாக் கடல் பகுதியில் வலுவான பிடி ஏற்பட்டுப் போகும். இது இந்தியாவுக்கு நல்லதல்ல என்று கணிக்கிறார்கள்.

இதற்கிடையே ராணுவ உதவி அனுப்புவதில் இஸ்ரேல் முந்திக் கொள்ள, யாழ்ப்பாணத்தில் யுத்தம் தீவிரமாகத் தொடர்கிறது.

வதந்திகளுள் பலமாக அடிபடும் வதந்தி:

### பிரார்த்தனை...!

சமீபத்தில் ஒரு திருமணத்தில் கலந்து கொள்ளவும், அப்போலோவில் செக்-அப் செய்து கொள்ளவும் சென்னை வந்திருந்தார் முன்னாள் பிரதமர் தேவகௌடா. அடையாறில் உள்ள "ஜீஸஸ் கால்ஸ்" வளாகத்தில் கௌடாவுக்கு ஒன்றரை மணி நேரம் சிறப்பு பிரார்த்தனை நடத்தப்பட்டது. வழிபாட்டை நடத்தியவர் சகோதரர் டி.ஜி.எஸ். தினகரன்!



\- கௌசி
படம்: ராஜன்

இலங்கைப் படை வேண்டுமென்றே தன் ஸ்தானத்திலிருந்து வெளியேறி ஒரு நெருக்கடியை ஏற்படுத்தி, சர்வதேச நாடுகளின் கவனத்தை இப் பிரச்னையின் பக்கம் திருப்ப முயன்றிருக்கிறது என்பதுதான்!

இதை நம்புவது கஷ்டமாயிருக்கலாம். ஆனால் இலங்கையில் யுத்தம் வலுத்தால் அதன் எதிரொலியாக அகதிகள் வருகை தமிழகத்தில் அதிகரிக்கும் என்பது சொல்லித் தெரிய வேண்டியதில்லை.

"இலங்கையில் கொட்டினால் தமிழ்நாட்டில் நெறி கட்டாமல் பார்த்துக் கொள்வது நம் அரசின் கடமை..." என்று கருணாநிதி அறிக்கை விட்டிருப்பது அகதிகள் பிரச்னையை மனத்தில் கொண்டுதான்.

சந்திரிகாவுக்குப் பாராளுமன்றத் தேர்தலைச் சந்திக்க வேண்டிய நிர்ப்பந்தம். அதில் தோற்றால் இலங்கை அரசியல் சாசனப்படி அவர் ஜனாதிபதியாகத் தொடரலாம்; ஆனால் அவருக்குப் பாராளு

மன்றத்தில் பெரும்பான்மை இராது. அந்நிலையில் அவரால் துரும்பைக் கூட நகர்த்த முடியாது. அதனால்தான் எந்த நாட்டிடமாவது உதவி பெற்று புலிகளை ஜெயிக்கும் நிர்ப்பந்தத்தில் அவர் இருக்கிறார் என்பது டெல்லிக்கு வந்துள்ள இலங்கைத் தகவல்.

இலங்கை அதிபர்களுள் சந்திரிகா மட்டுமே இந்திய நல்லுறவாளர் என்ற அபிப்ராயமும் நிலவுகிறது. இதனால் மனிதாபிமான அடிப்படையிலேனும் உதவிகள் அனுப்புவது அவசியம் என்கிறார்கள் சில அரசியல் நோக்கர்கள்.

'இந்திய விமானப் படையைக் கொண்டு உணவு, மருந்துகள் அளிக்கச் செய்து உதவினால் புலிகளின் அதிருப்தியும் எதிர்ப்பும் கிளம்பும். உதவ வரும் விமானங்கள் சுட்டு வீழ்த்தப்பட்டு யுத்தத்தில் இந்தியா பங்கேற்பது தவிர்க்க முடியாததாகிவிடும்...' என்கிறார் ஒரு பாதுகாப்புத் துறை நிபுணர்.

இலங்கை பிளவுபடுவதை இந்தியா ஆதரிக்கவில்லை. புலிகளின் அத்துமீறல், இந்திய விரோத சக்திகளால் அவர்கள் வளருவது, எதுவுமே நமக்கு ஏற்புடையதாக இல்லை. இதை வெளியிட்ட பத்திரிகைத் தொடர்பாளர் பிரமோத் மகாஜன் "இலங்கை அரசியல் நிர்ணயச் சட்டத்துக் குட்பட்டு பிரச்னைக்குத் தீர்வு காணப்பட வேண்டும் – அதையே இந்தியா விழைகிறது" என்று தெரிவித்தார்.

இந்திய அயலுறவுத் துறை அதிகாரிகளை டெல்லியில் சந்தித்த அமெரிக்க தூதுவரோ, "இலங்கை அரசியல் நிர்ணயச் சட்டத்தையே திருத்தி தமிழர்களின் உரிமைகளை உறுதிசெய்ய வேண்டும். இலங்கையில் ஒரு சமஷ்டி அரசு அமைப்பு உருவாக வழிவகை செய்ய வேண்டும்" என்று தமது நாட்டின் கொள்கையை எடுத்துரைத்திருக்கிறார்.

நீண்ட கால நலன் நோக்கில் இதை இந்தியா சீரியஸாக எடுத்துக் கொண்டு இலங்கை அரசையும் புலிகளையும் மறைமுகமாக வலியுறுத்தும் என்று தெரிகிறது. மீண்டும் அனைத்துக் கட்சித் தலைவர்களையும் அழைத்துப் பேசவிருக்கிறார் பிரதமர். டீ பார்ட்டிக்குப் பிறகு டெல்லி பக்கம் எட்டிப் பார்க்காத ஜெயலலிதா அந்தக் கூட்டத்துக்கு வருவாரா? என்ற கேள்வி டெல்லியில் ரீங்காரமிடுகிறது!

டெல்லியிலிருந்து : **வெங்கட்**

# சூழ்

– இரா. சுந்தரமூர்த்தி

- மாட்டின் வலி
  பதிந்து கிடக்கிறது
  வண்டித் தடம்.

- முள் அடர்ந்த பகுதி
  முன்னேறிச் செல்கிறது
  ஒற்றையடிப் பாதை.

- சிரித்துக் கொண்டிருக்கிறோம்
  நானும் அவளும்
  போட்டோ ஆல்பம்.

- அவனும் கவிதைதான் விற்கிறான்
  கூடை நிறைய
  கோழிக்குஞ்சுகள்

- அடித்துப் போகவில்லை
  வெள்ளம்
  தென்னையின் நிழல்.





• கொரியாவில் ராமகிருஷ்ணன், உஷா, தங்கள் குழந்தையுடன்!



# புலிக்கு முத்தம் கொடுத்த குழந்தை!

**சென்னையில் ஹுண்டாய் கம்பெனிக்கு உதிரி பாகங்கள் தயாரிக்கும் ஓராமக்ஸ் நிறுவனத்தில் பணிபுரிபவர் ராமகிருஷ்ணன், அண்மையில் கொரியாவில் உள்ள தமது தாய் நிறுவனத்தினைப் பார்வையிடச் சென்று வந்தார். அவரும் அவர் மனைவி உஷாவும் கொரியா பற்றிக் கூறுகிறார்கள்:**

● கொரியாவில் பிரதான உணவு, பன்றி மற்றும் மாட்டு மாமிசம்தான். காய்கறிகளைக்கூட, பச்சையாகவோ அல்லது அரைவேக்காட்டிலோதான் சாப்பிடுகிறார்கள்.

● கொரியர்கள், வெளிநாட்டவர்கள் நிரந்தரமாக இங்கு வந்து தங்குவதை விரும்புவதில்லை. மருந்துக்குக்கூட இந்தியர்களை இங்கு பார்க்க முடியவில்லை!

● நகர்ப்புறங்களில் ஏறத்தாழ எல்லாருமே கார் வைத்திருக்கிறார்கள். நம் ஊரின் சொகுசு கார்கள், அங்கே வெகு சகஜமாய்க் காண முடிகிறது. இளைஞர்கள், மோட்டார் சைக்கிளில் மணிக்கு நூறு, நூற்றி இருபது கி.மீ வேகத்தில் பறக்கிறார்கள். ஓட்டுபவர்களும் பின்னால் இருப்பவர்களும் தவறாமல் ஹெல்மெட் அணிகிறார்கள்.

● டாக்சி டிரைவர்கள், கோட்டு சூட்டு அணிந்து டிரிம்மாக இருக்கிறார்கள். டாக்சியில் போகிறபோது, அட்ரஸ் தெரியவில்லை எனில், தம் செல்போனில் சம்பந்தப்பட்டவருடன் பேசி, வழி கேட்டு நம்மைக் கொண்டு போய் விட்டு விடுகிறார்கள்.

● ஓட்டல்களிலும், கடைகளிலும் மெஜாரிட்டிப் பெண் பணியாளர்கள்தான். அவர்களின் பணிவும், புன்னகையும் நம்மைக் கவர்கின்றன.

● சியோலில், வெர்லாண்டு வோர்ல்டு என்கிற இடத்துக்குச் சென்று கொண்டிருந்தபோது, மழை பெய்யத் தொடங்கியது. அரை மனத்தோடு, மூன்று அமெரிக்க டாலர் கொடுத்துக் குடை வாங்கிக் கொண்டோம். வெர்லாண்டு வோர்ல்டு போய் இறங்கினால், அவர்களே அத்தனைச் சுற்றுலாப் பயணிகளுக்கும் மழைக் கோட்டு வழங்கிக் கொண்டிருந்தது இனிய ஆச்சரியம்.

● இன்னொரு இடத்தில் செயற்கையான இருட்டு. காட்டுக்குள்ளே, நடுஇரவில் போனால் எப்படியிருக்கும் என்பதைக் காட்டும் ஏற்பாடு. பிரம்மாண்டமான ஆப்பிரிக்க யானை அனைவரையும் வரவேற்கிறது. உள்ளே அசையும் மிருகங்கள், பறக்கும் பறவைகள், நகரும் பாம்புகள், அவற்றின் குரல் ஒலிகள் என்று மிகப் புதுமையான அனுபவம்தான்!

● கண்ணாடி மூடிய பஸ்ஸில் நாம் உட்கார்ந்திருக்க, காட்டுக்குள் புலி, சிங்கம், கரடி எல்லாம் சகஜமாய் உலவிக் கொண்டிருக்கும் பகுதிகளுக்கு பஸ் போய் வருகிறது. பஸ்ஸின் முன்புறமும், பக்கவாட்டிலும் மாமிசத் துண்டுகளை வைத்து விடுகிறார்கள். காட்டினுள்ளே பஸ்ஸை நிறுத்தியதும், மாமிச வாசனையை நுகர்ந்தபடி புலிகளும், சிங்கங்களும் பஸ்ஸை நோக்கி வருகின்றன. மாமிசத் துண்டுகளைச் சாப்பிடுகின்றன. விளையாடுகின்றன. கண்ணாடி வழியே, பஸ்சுக்குள்ளிருந்தபடி புலிக்கு என் பெண் முத்தம் கொடுத்தாள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

— மானஸா



# குடும்பத்தோடு வாங்க! ஸ்கூட்டர் ஓட்டலாம்! கார் ஓட்டலாம்!!



**நா**ன் ஆசிரியையாக இருக்கிறேன். கோடை விடுமுறையை பயனுள்ளதாக செலவிட நினைக்கிறேன். என்ன செய்யலாம்? என்று 47 வயது கோடம்பாக்கம் சாந்தி கேட்கிறார். இதே கேள்வியைத்தான் அவரது மகள்கள் எத்திராஜ் கல்லூரி மாணவி கவிதா, கம்ப்யூட்டர் படிக்கும் ரேஷ்மா, நீதிமன்றத்தில் பணிபுரியும் அவரது கணவர் லிங்கேஸ்வரன் எல்லோருமே கேட்கிறார்கள்.

இந்த மாதிரி கேள்விகளை எழுப்பும் பல குடும்பத்ினருக்கு விஷயம் தெரிந்தவர்கள் தரும் பதில் ஒன்றேதான்.

**வள்ளி வள்ளியப்பன் டிரைவிங் ஸ்கூலுக்கு குடும்பத்தோடு போங்க... அங்கே வள்ளி மற்றும் வள்ளியப்பன் கூடவே அவரது குழுவைச் சேர்ந்த பெண் - ஆண் பயிற்சியாளர்கள் தயாராக இருக்கிறார்கள். எளிதாக விரைவாக உங்களுக்கு அவர்கள் வாகனங்களை இயக்கக் கற்றுத் தருகிறார்கள். சில நாட்களிலேயே நீங்கள் சென்னை மவுண்ட் ரோட்டில் கூட ஜாலியாக வாகனங்களை ஓட்டலாம்.**

**சிறப்பாக வாகனங்களை ஓட்டுவதற்கு கற்றுக் கொடுத்ததற்காக வள்ளி வள்ளியப்பன் போலீஸ் ஐ.ஜி. திலகவதி, தேனிசைத் தென்றல் தேவா ஆகியோரிடம் பாராட்டும் விருதும் பெற்றிருக்கிறார்.**

**நீங்கள் விரைவாக எளிதாக பாதுகாப்பாக வாகனங்களை இயக்க கற்றுக் கொடுப்பது எப்படி?**

முதல் நாள் அவர்களுக்கு மனப் பயிற்சி கொடுப்போம். அதன் மூலம் தன்னம்பிக்கை, உடல் வலு, புரிந்து கொள்ளும் தன்மை அதிகப்படும். அப்புறம் அவர்கள் இயக்க விரும்பும் வாகனம் பற்றி விளக்குகிறோம். அடுத்ததுதான் அவர்களுக்கு வாகனம் இயக்கக் கற்றுத் தருகிறோம். அவர்களின் மனதை பக்குவப்படுத்தி விடுவதால் எளிதாகப் புரிந்து சில நாட்களிலேயே கற்றுக் கொள்கிறார்கள் என்கிறார்கள் வள்ளியும் அவரது கணவர் வள்ளியப்பனும்.

**கணவன் மனைவி இருவரும் ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமா? கார் ஓட்டக் கற்றுக் கொள்ள வேண்டுமா? நீங்கள் உடனே தயங்காமல் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :**

## வள்ளி டிரைவிங் ஸ்கூல்

(அரசு அங்கீகாரம் பெற்றது)

புது எண். 13 (ப. எண். 7), தண்டபாணி தெரு, தி.நகர், சென்னை - 17.

(பனகல் பார்க் அருகில்; வெங்கட்நாராயணா ரோடு எதிரில்; வேளாங்கண்ணி பள்ளி அருகில்)



☎ : 4364815, 4842466.

பேஜர் : 9628445790.

செல் : 9840043648

**அலுவலக நேரம் :**

**காலை 7.00 மணிமுதல்**

**மாலை 7.00 மணிவரை**

குறிப்பு : **பெண்களுக்கு கற்றுத்தர பெண் பயிற்சியாளர்கள் உண்டு.**



# வேண்டும்!

ஜெயஸ்ரீ ராஜ்

"**வே**ண்டாமே..." ஒரே வார்த்தையில் நிராகரித்தான் புரு; புருஷோத்தமன் என்ற பெயரை "புரு"வாகச் சுருக்கிக்கொண்டிருப்பது போல்தான் வார்த்தைகளையும் சுருக்கிக்கொண்டிருந்தான்.

இத்தனைக்கும் அவன் மனைவி நிருபமா, நின்று, நிதானித்து, எதிர்பார்ப்புடன், விஸ்தாரமாக ஒரு கேள்வியைப் புனைந்திருந்தாள் –

"ஏங்க... அந்த டாக்டர் ரஞ்சனி சொன்ன சென்டர்லருந்து, நமக்கு தகுந்தாப்ல குழந்தை கிடைச்சிருக்குன்னு காண்டாக்ட் பண்ணியிருக்காங்க; போய்ப் பார்ப்பமா?"

பதிலாக வந்த வார்த்தை அவளை ஒன்றும் நிலை குலைந்துவிடச் செய்யவில்லை; அவள் பிறந்த நாளிலிருந்தே... சரியாகச் சொல்ல வேண்டுமென்றால் பிறப்பதற்கு முன்பே, அவளுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட பரிச்சயப்பட்ட சொல்தான் அது.

'கருவில் திருவுடையாளா?'என வியாக்காதிர்கள்; அப்படியே இருந்திருந்தாலும், இவள் கருவில் வளர்ந்த காலத்தில், அடிக்கடி பெற்றோர் வாயிலாக கேட்டிருக்கக் கூடிய சொல் இதுவாகத்தானிருந்திருக்கும் –

"வேண்டவே வேண்டாம்... நமக்கெதுக்கு இப்ப இந்தத் தலைவலி... இந்தச் சனியன் வேணும்னு யார் அழுதா?" அம்மாவின் நிரந்தர பல்லவி இது.

"இந்தக் குமாஸ்தா உத்யோகத்துல முதல் ரெண்டு சனியன்களைக் கரையேத்தறதே பெரிய ரோதனை... அதுல மூணாவது வேற பொண்ணாப் பொறந்து தொலைச்சுட்டுதுன்னா? ஒரு பொம்மனாட்டிக்கு இது கூடவாத் தெரியாது? மூணு மாசம் ஆனப்பறமா டாக்டர் கிட்ட போவா?" அப்பாவின் அனுபல்லவியும் கிட்டத்தட்ட இதேதான்... 'மூடு'க்கேற்ப 'ஸ்தாயி' மாறும்!

"நானும் என்னென்னவோ மருந்தை எல்லாம் அரைச்சுத்தான் முழுங்கினேன். ஒண்ணுத்துக்கும் கரையலையே... ஈச்வரா..." அம்மாவின் அரற்றல் இறைவன் சரணத்தில் தான் முடியும்!

**ம**ற்ற இரண்டு பெண்களும் செக்கச் செவேலென்று, கொழு மொழுவென் றிருக்கையில், இவள் கரேலென்று பிறந்து வைத்தாள்.

அன்றிலிருந்து ஆரம்பித்ததுதான் இந்த 'ஒதுக்கல்' படலம். புரு இவளுக்குக் கணவனாகக் கிடைத்ததே அவனுடைய முதல் மனைவி நிஷா, அவனை வேண்டாம் என ஒதுக்கிவிட்டுச் சென்று விட்டதால் தானே?

இந்த விஷயமெல்லாம் திருமணமான பின்தான் அவளுக்குத் தெரியவந்தது. அப்பாவிடம் கோபப்படக் கூட முடியவில்லை!

இப்போது இந்தத் தாய்மைப் பேறு இவளுக்கு 'பெப்பே' காட்டிக் கொண்டிருந்ததுதான் பெரும் வேதனையாயிருந்தது; டாக்டர்கள், உடல்ரீதியாக இருவருக்கும் எந்தக் குறையுமில்லை என்று விட்டார்கள். ஐந்தாண்டுகளாகியும் எந்த மாற்றமுமில்லை என்ற பிறகுதான் தத்து எடுத்துக் கொள்ளும் சிந்தனை அரும்பியது. கணவன், மாமியார் இருவரையும் அழைத்துக்கொண்டு சென்றாள், 'அடாப்ஷன் சென்டருக்கு'.

"நீங்க எதிர்பார்க்கற மாதிரி எல்லாம் அழகா, செக்கச் செவேல்னு கொழு மொழு குழந்தைங்கள்லாம் கிடைக்காதும்மா; குழந்தைங்க, நோஞ்சானா, காய்ந்த கருவாடு மாதிரிதானிருக்கும். குழந்தை கிடைச்சாலே பெரிசுன்னு நினைக்கணும்" – இவர்கள் சென்றிருந்த ஆசிரமத்துத் தலைவி இப்படிச் சொன்னதும், மாமியாரின் முகம் விழுந்துவிட்டது.

"இந்த அப்ளிகேஷன்களை ஃபில்லப் பண்ணி, உங்க ரெண்டு பேர் ஃபோட்டோவையும் அட்டாச் பண்ணுங்க; உங்களுக்கேத்த குழந்தையா வந்ததுன்னா, நாங்களே உங்களைக் கூப்பிட்டுக் காட்டுவோம்; உங்களுக்குப் பிடிச்சிருந்தா எடுத்துக்கலாம்..."

இதைக் கேட்டதும் 'புரு'வுக்கு 'திக்' கென்றது. ஏதோ நூற்றுக்கணக்கில் குழந்தை



# வேண்டும்!

கனிருக்கும்... அதில் ஒன்றை செலக்ட் பண்ணிக் கொள்ளலாமென்றல்லவா எண்ணியிருந்தான்?

"இதென்னங்க? கத்தரிக்கா வியாபாரமா? பாத்துப் பொறுக்கி எடுக்க..." நக்கலாகக் கேட்கிறாரா நாசூக்கை உணர்த்துகிறாரா என்று அனுமானிக்க முடியவில்லை. இவர்கள் காட்டும் குழந்தை பிடிக்காது போனால்...?

இவர்களது உள்ளத்தின் ஓட்டத்தை கிரஹித்தவராக, 'இல்லைன்னா ஆறு, ஆறு மாசம் கழிச்சு அப்புறம் ரெண்டு சான்ஸ் தருவோம்; அதுவும் பிடிக்கலைன்னா, உங்களுக்கு அடுத்த சான்ஸ் வர பத்து வருஷத்துக்கு மேல ஆகலாம்; ஏனா... வெயிட்டிங் லிஸ்டுல நிறைய பேரண்ட்ஸ் இருக்




"டைரக்டர் சார்! டி.வி.க்காக நீங்க எடுத்துட்டு இருக்கிற மெகா தொடர் எப்போ முடியும்?"

"ஸ்பான்ஸர் செய்ய ஆள் கிடைக்காத போது."

— பொள்ளாச்சி கே. சித்ரா

---

காங்க; குழந்தைங்கதான் கம்மியாயிருக்கு... இப்பல்லாம் 'அபார்ஷனை' 'லீகலைஸ்' பண்ணிட்டாங்க இல்ல?" தலைவி நிதர்சனத்தைக் காட்டினார்.

கிட்டத்தட்ட ஆறு மாதங்களுக்குப் பிறகு, இப்போது, முதல் 'கால்' வந்திருந்தது. அதற்குத்தான் 'வேண்டாமே' என்றான் புரு.

"சும்மாப் போய்ப் பாக்கறதுல என்னங்க தப்பு? அம்மா எவ்வளவு பூஜை செய்யறாங்க? அதுக்கெல்லாம் பலனில்லாம இருக்குமா?" நிருபமா மாமியாரை செண்டிமெண்டலாக 'டச்' செய்துவிட்டாள்.

"அவ ஆசையைக் கெடுப்பானேன்? நீங்க ரெண்டு பேரும் போயிட்டு வாங்க"... மாமியார் திருவாய்மலர்ந்தருளியதும், புருஷோத்தமனைக் கிளப்புவதொன்றும் நிருபமாவுக்குக் கஷ்டமாய் இல்லை.

ஆசிரமத் தலைவி இவர்களை வரவேற்று, இருக்கையில் அமர்த்தி, உள்ளே சென்றாள். திரும்பியபோது கூடவே ஒரு செவிலியும் அவள் கையில் ஒரு பூப் பொட்டலமாக அந்தக் குழவியும்.

மனசுக்குள் ஆயிரம் பட்டாம்பூச்சுகள் படபடக்க, நிருபமா அந்தச் சின்னஞ்சிறு பொட்டலத்தைப் பிரித்தாள். பெண் குழந்தை... க்ளுகோஸ் பேபியையோ, ரஸ்னா குழந்தையையோ, ஃபாரக்ஸ் பச்சாவையோ நினைவுபடுத்தாத சாதாரண முகம்; வறுத்த கோதுமை நிறம்.

நிருபமாவுக்கு மனதைப் பிசைந்தது. பார்த்த மாத்திரத்தில் அள்ளி முத்தமிடும் ரகமில்லைதான்; மாமியாருக்கு நிச்சயம் பிடிக்கப் போவதில்லை; புருவுக்கு...? முதலில் தனக்கே...

வாழ்க்கை முழுவதும் நிராகரிப்புகளையே ஏந்தி நின்றவள், முதன் முதலாகத் தனக்கு வழங்கப்பட்ட ஒன்றை நிராகரிக்கப் போகிறாளா?

"மேடம் ஒருத்தரும் செலக்ட் பண்ணாத குழந்தைகளை என்ன செய்வீங்க?" அவளுக்கே அந்நியமான குரலில், அபத்தமாக எதையோ உளறி வைத்தாள், உறுத்தலுடன்.

"இங்க உள்ளவங்க எடுத்துக்கலைன்னா என்னங்க? இவுங்களை அடாப்ட் பண்ண எத்தனையோ ஃபாரினர்ஸ் காத்திருக்காங்க; நல்ல வசதியோட, ரெண்டு மூணு குழந்தைகளோட உள்ளவங்களே இந்தக் குழந்தைகளை எடுத்து வளர்க்கறாங்க; சில சமயம் 'மெண்ட்டலி ரிடார்டட்', ஊனமுற்ற குழந்தைங்களைக்கூட கேட்டு வாங்கிக்கறாங்க; இப்படி ஐரோப்பாவுலயும், அமெரிக்காவுலயும், கனடாவுலயும் வளர்ற குழந்தைகளோட குடும்ப ஃபோட்டோ இந்த ஆல்பத்துல இருக்கு பாருங்க... இந்தக் குழந்தையையே ஸ்வீடன்லேருந்து வந்திருந்த ஒரு தம்பதிக்குப் பிடிச்சிருந்தது; ஆனா நாங்க எப்பவும் இந்திய பெற்றோருக்குத்தான் முன்னுரிமை கொடுக்கிறோம்... இயன்ற வரையில் இயற்கையான சூழல்ல அதுங்க வளரணும்னு பாடுபடறோம்..."

அவர் பேசப் பேச, நிருபமாவுக்குள் ஒரு ஒளி பரவுவது போலிருந்தது. அட... ஒருத்தர் வேண்டாமென்று சொல்வதால் என்ன குறை வந்து விடப் போகிறது? மாறாக... அதிக உயர்வுகள் காத்திருக்கின்றனவோ...?

நினைத்துப் பார்த்ததில் தன் வாழ்க்கையும் அப்படி ஒன்றும் குறைபட்டதாகத் தெரியவில்லை;

மனசிலிருந்த வெப்பமெல்லாம் தணிந்து, சில்லென்று தென்றல் வீசியது போலிருந்தது; கடலால் ஒதுக்கப்படுவதுபோல்தானிருக்கிறது அலைகளைப் பார்த்தால்... ஆனால் அந்த அலைகள் தன்னை வருடாதா என்று எத்தனை பேர் தவம் கிடக்கின்றனர்!

அந்தக் குழந்தையை ஏறிட்டாள்; அது ரொம்பவும் அழகான குழந்தையாகத் தெரிந்தது.... "எனக்கு இந்தக் குழந்தை வேண்டும்" என்றாள் ஆணித்தரமாக!

# அதிர்ஷ்ட கற்களை அணிந்து உங்கள் பிரச்சனைகளுக்கு தீர்வு காணுங்கள்

**உங்கள் வாழ்க்கையில் மகிழ்ச்சியும் செல்வமும் செழித்திட அதிர்ஷ்ட கல் அணிந்து செழிப்பாக வாழ்ந்திடுங்கள்.**

நாங்கள் முதல்தர ஜோதிட வல்லுனர்களைக் கொண்டு உங்கள் ஜாதகத்தின் அடிப்படையில் கிரக நிலைக்கு ஏற்ப பிரச்சினைகளுக்கு நல்ல முறையில் தீர்வு காண்கிறோம்.

நேரில் வரும் அன்பர்களுக்கு ஜாதகத்தின் மூலம் எந்த ராசி கற்கள் அணியலாம் என்று கூற ரூ. 101/- மட்டும் வெளியூர் அன்பர்களுக்கு கூடுதலாக தபால் செலவு ரூ. 45/- மட்டும். வெளிநாட்டில் வசிக்கும் அன்பர்களுக்கு US $ 10 (அ) ரூ. 400ம் D.D/M.O. வை K.V. NARAYANA என்ற பெயரில் அத்துடன் உங்கள் பிரச்சினைகளையும், ஜாதகத்தின் நகலையும் எடுத்து அனுப்பி முழு பலன்களையும் அடையலாம்

- முத்து
- பவளம்
- கோலாபூர் ஆண்டிக் கோல்டு
- ஆண்டிக் ஆபரணங்கள்
- நவரத்தின மாலைகள்
- ரூபி ஜேட் எமரால்டு மாலைகள்
- மிக்கி மோட்டா முத்துக்க்ள்
- Emerald Ruby Sets
- Oxidised Jewellery, Etc.



அதிர்ஷ்ட கல் அணிந்து பயனடைவீர்

# NARAYANA PEARLS, GEMS & JEWELS

"SUDHA'S PARADISE" 62, Pondy Bazaar, (Opp. Maya's Plaza),

Below Karur Vysya Bank, T. Nagar, Chennai - 600 017.

Tel : 432 26 44, 433 10 60

Sundays also open (11 am to 4 pm)

மரகதம் • வைரம் • முத்து • கனக புஷ்பராகம் • நீலம் தரமான ஜாதிகற்கள் கிடைக்கும் • பவளம் • மாணிக்கம் • வைடூரியம் • கோமேதகம்




### நாற்பத்தாறாம் அத்தியாயம்

## படகு நகர்ந்தது!

அமரர் கல்கி

வந்தியத்தேவன் ஒரு பக்கத்தில் விரைந்து வந்துகொண்டிருந்தான்.

மற்றொரு புறத்தில் மணிமேகலை, "அக்கா! உணவு சித்தமாயிருக்கிறது!" என்று சொல்லிக்கொண்டு நெருங்கி வந்துகொண்டிருந்தாள்.

கரிகாலர் இருபுறமும் பார்த்துவிட்டு, "நந்தினி! என்னைக் கடம்பூர் மாளிகைக்கு வர வேண்டாம் என்று தடுக்க வந்தியத்தேவன் மட்டும் முயலவில்லை. ஆழ்வார்க்கடியான் என்னும் வைஷ்ணவனும் அதே மாதிரி செய்தியைக் கொண்டு வந்தானே? என் தந்தையின் உயிர் நண்பரும் என் பக்திக்கு உரியவருமான முதன்மந்திரி அநிருத்தரும் சொல்லி அனுப்பினாரே?" என்றார்.

"முதன்மந்திரி அநிருத்தர்! தங்கள் தந்தையின் பிராண சிநேகிதர்! ஆகையினால் தங்கள் தந்தையின் பிராணனைத் தாமே அபகரிக்கப் பார்க்கிறார். தங்களுடைய பக்திக்கு உரியவர்! ஆகையால் தங்களுக்கு அடுத்த பட்டம் இல்லாமற் செய்யப் பார்க்கிறார்...."

"ஏன்? ஏன்?"

"தாங்கள் வெறிபிடித்தவர் என்றும், தெய்வ பக்தி இல்லாதவர் என்றும் அவருக்கு எண்ணம். தங்கள் தம்பிக்குப் பட்டம் கட்டி வைத்து அவனை வீர வைஷ்ணவனாக்கி இந்தச் சோழ நாட்டையே வைஷ்ணவ நாடாக்கி விட வேண்டுமென்பது அவருடைய விருப்

பம். தங்களுடைய தம்பி நடுக்கடலில் காணாமற்போன போது அவருடைய எண்ணத்திலே மண் விழுந்தது!''

''அதற்காக என்னைக் கடம்பூர் வராமல் தடுக்க வேண்டிய அவசியம் என்ன?''

''அவர்களுடைய அந்தரங்கத்தையெல்லாம் தங்களிடம் நான் சொல்லி விடலாம் அல்லவா?''

''உனக்கு எப்படி அவர்களின் அந்தரங்கம் தெரியும்?''

''ஐயா! அந்த வைஷ்ணவன் ஆழ்வார்க்கடியான் சகோதரி நான் என்பதை மறந்து விட்டீர்கள்....''

''உண்மையாக நீ அவனுக்கு உடன் பிறந்த சகோதரியா? அந்தக் கதையை என்னை நம்பச் சொல்கிறாயா?''

''நானும் அந்தக் கதையை நம்பவில்லை. தங்களை நம்புமாறு சொல்லவும் இல்லை. அவனுடைய தந்தையின் வீட்டில் நான் வளர்ந்து வந்தேன். ஆகையால் என்னைச் சகோதரி என்று அழைத்து வந்தான். என்னை ஆண்டாளின் அவதாரம் என்று அந்த வைஷ்ணவன் சொல்வது வழக்கம். ஊர் ஊராக அவனுடன் நான் சென்று ஆழ்வார்களின் பாசுரங்களைப் பாடி வைஷ்ணவ சம்பிரதாயத்தைப் பரப்ப வேண்டும் என்பது அவனுடைய ஆசை.''

''புத்த சந்நியாசினிகளைப் போல் உன்னையும் வைஷ்ணவ சந்நியாசினியாக்க அவன் விரும்பினானா?'' என்று ஆதித்த கரிகாலர் கேட்டார்.

''அப்படி ஒன்றுமில்லை. நான் அவனைக் கலியாணம் செய்து கொண்டு தம்பதிகளாகப் பாசுரம் பாடிக்கொண்டு ஊர் ஊராகப் போக வேண்டும் என்பது அவன் ஆசை. வைஷ்ணவத்தைப் பிரசாரம் செய்ய நான் பல குழந்தைகளைப் பெற்று அளிக்க வேண்டும் என்பது அவன் விருப்பம்....''

''சீச்சீ! அந்தக் குரங்கு மூஞ்சித் திருமலை எங்கே? நீ எங்கே? உன்னை அவன் தனக்கு மனைவியாக்கிக் கொள்ள விரும்பினானா?...''

''ஐயா! என் துரதிர்ஷ்டம் அது! நான் பிறந்தவேளை அப்படி! என்னை நெருங்கி வரும் ஆண் பிள்ளைகள் எல்லாரும் துர் எண்ணத்துடனேயே என்னை நெருங்குகிறார்கள்...''

''கிழவன் பழுவேட்டரையனுடைய புத்தி போன பாட்டில் மற்றவர்களைப் பற்றிச் சொல்வானேன்?''

''கோமகனே! பழுவேட்டரையரைப் பற்றி என் காதில் படத் தூஷணையாக எதுவும் சொல்ல வேண்டாம். அவர் என்னிடம் ஆசை கொண்டார். என்னை உலகமறிய மணந்து கொண்டார். அநாதைப் பெண்ணாயிருந்த என்னை அவருடைய திருமாளிகையில் பட்டத்து ராணியாக்கிப் பெருமைப் படுத்தினார்...''

''ஆனால் உன்னுடைய விருப்பம் என்ன, நந்தினி? நீ அவரை உண்மையிலேயே உன் பதியாகக் கொண்டு பூஜிக்கிறாயா? அப்படியானால்...''

''இல்லை, இல்லை. அவரிடம் நான் அளவில்லா நன்றியுடையவள். ஆனால் அவருடன் நான் மனை வாழ்க்கை நடத்தவில்லை. அவரும் என்னை வற்புறுத்தவில்லை. ஐயா! நான் ஏழைக் குடியில் பிறந்தவள்; பிறந்தவுடனே கைவிடப்பட்டவள். ஆயினும் என்னுடைய நெஞ்சை ஒரே ஒருவருக்குத்தான் அர்ப்பணம் செய்தேன். அதை ஒருநாளும் மாற்றிக் கொண்டதில்லை...''

''நந்தினி! அந்தப் பாக்கியசாலி யார்? வேண்டாம்; அதைச் சொல்ல வேண்டாம். நீ யார்? உண்மையைச் சொல்! நீ என் தந்தையின் மகள் இல்லாவிடில், என் சகோதரி இல்லாவிடில், ஆழ்வார்க்கடியானுடன் கூடப் பிறந்தவளும் இல்லை என்றால், பிறகு நீ யார்? அதை மட்டும் சொல்லி விடு, நந்தினி! அதைத் தெரிந்து கொள்ளாவிட்டால் எனக்குப் பைத்தியம் உண்மையிலேயே பிடித்து விடும்!'' என்றார் கரிகாலர்.

''அதைத் தங்களுக்குத் தெரிவிக்க வேண்டுமென்றுதான் நானும் விரும்புகிறேன். ஆனால் தங்களுடைய தோழரும் என்னுடைய தோழியும் இதோ நெருங்கி வந்து விட்டார்கள். மறுபடியும் சந்தர்ப்பம் வாய்க்கும் போது அவசியம் சொல்லுகிறேன்'' என்றாள்

நந்தினி.

மிகச் சமீபத்தில் வந்து விட்ட வல்லவரையனைப பார்த்துப் பழுவூர் ராணி, "ஐயா! இது என்ன வெறுங்கையுடனே திரும்பி வந்திருக்கிறீர்கள்? புலியின் தலை எங்கே?" என்று கேட்டாள்.

"தேவி! புலியின் தலையைக் கொண்டு வந்து தங்கள் காலடியில் சமர்ப்பிக்கும் பாக்கியம் எனக்குக் கிட்டவில்லை!" என்றான் வந்தியத் தேவன்.

"ஆகா! இவ்வளவுதானா உமது வீரம்? உமது முன்னோர்களின் வீரத்தைப் பற்றிப் பாட்டுகள் எல்லாம் சொன்னீரே? மூன்று குலத்து வேந்தர்களின் தலைகளைப் பறித்துக் கழனியில் நடவு நட்டார்கள் என்று சொன்னீரே?"

"அது என்ன அப்படிப்பட்ட பாடல்?" என்று கரிகாலர் கேட்டார்.

"ஐயா! நீர் சொல்கிறீரா? நான் சொல்லட்டுமா?" என்று நந்தினி வந்தியத்தேவனைப் பார்த்து வினவினாள்.

"ராணி! அப்படி ஒரு பாடல் சொன்னதாக எனக்கு ஞாபகம் இல்லையே?" என்றான் வந்தியத்தேவன்.

"உமக்கு ஞாபகம் இல்லை. ஆனால் எனக்கு நன்றாய் நினைவு இருக்கிறது. நான் சொல்லுகிறேன் கேளுங்கள், ஐயா!

***சேனை தழையாக்கிச் செங்குருதி***
***நீர் தேக்கி***
***ஆனை மிதித்த அருஞ்சேற்றில்***
***— மான பரன்***
***பாவேந்தர் தம்வேந்தன் வாணன்***
***பறித்து நட்டான்***
***மூவேந்தர் தங்கள் முடி!***

எப்படியிருக்கிறது பாட்டு! கோமகனே! தாங்கள் பாண்டியன் ஒருவனுடைய தலையை மட்டுமே கொண்டீர்கள். இந்த வீரருடைய முன்னோர்கள், சேர சோழ பாண்டியர்களுடைய தலைகளைப் பறித்துக் கொண்டு வந்து கழனியில் நடவு நட்டார்களாம்...!"

கரிகாலருடைய முகத்தில் அருவருப்பும் குரோதமும் தாண்டவம் ஆடின.

"நல்ல உழவு! நல்ல நடவு!" என்று சொல்லி விட்டு அவர் இடி இடி என்று வாய் விட்டுச் சிரித்தார்.

வந்தியத்தேவன் கரிகாலருடைய முகத்தையே ஏறிட்டுப் பார்க்க முடியவில்லை. அவன் தட்டுத் தடுமாறி, "தேவி! இத்தகைய பாடல் ஒன்றைத் தங்களிடம் நான் சொல்லவே இல்லையே?" என்றான்.

"அதனால் என்ன? ஏற்கெனவே தெரிந்துகொண்டிராவிட்டால் உமது குலத்தின் பெருமையை இப்போதாவது தெரிந்து கொள்ளும்! அவ்வாறு முக்குலத்து வேந்தர்களின் முடிகளைப் பறித்து நட்ட வம்சத்தில் பிறந்தவர் கேவலம் காயம் பட்ட புலி ஒன்றின் தலையைக் கொண்டு வர முடிய வில்லையே?" என்றாள்.

"தேவி! காயம்பட்ட அந்தப் புலி செத்துத் தொலைந்து போய்விட்டது. செத்த புலியின் தலையை வெட்ட நான் விரும்பவில்லை."

"அது எப்படி? புலி தத்தித் தத்திப் படகில் ஏறியதை நான் பார்த்தேனே?" என்றார்.

"நான்தான் அந்தக் காட்சியைத் தங்களுக்குக் காட்டினேன். படகில் ஏறிப் படுத்துக்கொண்ட பிறகு அது செத்துப் போயிருக்கிறது. பழுவூர் இளைய ராணியின் திருமேனியைக் காயப்படுத்தி விட்டோமே என்ற பச்சாதாபத்தினால் அது பிராணனை விட்டு விட்டதோ, என்னமோ?" என்றான் வந்தியத்தேவன்.

கரிகாலரின் முகத்தில் கடுகடுப்புச் சிறிது தணிந்து புன்னகை அரும்பியது.

"ஆனால் அது தண்ணீரிலேயே செத்துப் போயிருக்கலாமே? படகில் ஏறிச் சாக வேண்டியதில்லையே?" என்றார் கரிகாலர்.

"என்னைப் போல் அதற்கும் தண்ணீரைக் கண்டால் பிடிப்பதில்லை போலிருக்கிறது. எல்லாச் சாவுகளிலும் தண்ணீரிலே சாவதுதான் எனக்குப் பயமளிக்கிறது!" என்றான் வந்தியத் தேவன்.

"ஆயினும் சற்று முன்னால் தைரிய

மாகத் தண்ணீரில் குதித்து விட்டீரே? இந்தப் பேதைப் பெண்களின் பேரில் அவ்வளவு கருணை போலிருக்கிறது!''

''தேவி! தண்ணீரைக் காட்டிலும் எனக்குப் பெண்களைக் கண்டால் அதிக பயம் உண்டாகிறது. இளவரசருடைய வற்புறுத்தலுக்காகத்தான் குதித்தேன். உண்மையில் அப்படிக் குதித்திருக்க வேண்டிய அவசியமே இல்லை என்று இப்போது தெரிகிறது!'' என்றான் வல்லவரையன்.

''ஆம், ஆம்! நீர் தண்ணீரில் விழுந்து சாவது பற்றித்தான் உமக்குப் பயம். பிறரை மூழ்க அடித்து சாகச் செய்வது பற்றி உமக்குப் பயமே இல்லை!'' என்றாள் நந்தினி.

இந்தப் பேச்சுக்கள் ஒன்றும் மணிமேகலைக்குப் பிடிக்கவில்லை என்பது அவளுடைய முகபாவத்திலிருந்து நன்கு வெளியாயிற்று.

''அக்கா! சமைத்த உணவு ஆறிப் போய் விடும். வாருங்கள், போகலாம்!'' என்றாள்.

நால்வரும் பளிங்கு மண்டபத்தை நோக்கி நடந்தார்கள். அப்போது இடையிடையே மணிமேகலை வந்தியத்தேவனை நோக்கினாள். அவனுடைய மனத்தில் ஏதோ சங்கடம் ஏற்பட்டிருக்கிறதென்றும், இளவரசரும் நந்தினியும் அவனுக்கு ஏதோ தொல்லை கொடுக்கிறார்





கள் என்றும் அவள் தன் உள்
ளுணர்ச்சியால் அறிந்தாள். "யார் தங்களுக்கு
எதிரியானாலும் நான் தங்களுடைய கட்சியில் இருப்
பேன்; கவலைப்பட வேண்டாம்!" என்று நயன

பாஷையின் மூலம் வந்தியத்தேவனுக்கு ஆறுதல் கூற முயன்றாள். ஆனால் வந்தியத்தேவனோ அவள் பக்கம் திரும்பிப் பார்க்கவே இல்லை. அவன் கவலைக் கடலில் அடியோடு மூழ்கிப் போனவனாகக் காணப்பட்டான்.

நந்தினி தேவியின் வஞ்சக வார்த்தைகளும் வந்தியத்தேவன் மீது அவள் சுமத்திய பயங்கரமான பழியும் இந்தக் கதையைத் தொடர்ந்து படித்து வரும் நேயர்களுக்கு அருவருப்பை அளித்திருக்கக்கூடியது இயல்பேயாகும்.

எனினும், நாம் அறிந்துள்ள வரையில் அவளுடைய பிறப்பையும் வாழ்க்கை நிகழ்ச்சிகளையும் நினைவு கூர்ந்தால் அவ்வளவாக வியப்பு அடைய மாட்டோம்.

மனிதர்களின் குணாதிசயங்கள் பரம்பரை காரணமாக இரத்தத்தில் ஊறியுள்ள இயல்புகளினால் அமைகின்றன; சூழ்நிலையினாலும் பழக்கவழக்கங்களினாலும் வாழ்க்கை அநுபவங்களினாலும் மாறுதலடைகின்றன.

ஊமையும் செவிடுமான மந்தாகினி காட்டிலே பெரும்பாலும் வாழ்ந்திருந்தவள். வனவிலங்குகளிடமிருந்து தப்பித்துக் கொள்ள அவள் எவ்வளவோ ஜாக்கிரதையாயிருக்க வேண்டியிருந்தது. தான் உயிர் தப்புவதற்காகச் சில சமயம் அந்த மிருகங்களைக் கொடூரமாகக் கொல்ல வேண்டியும் நேர்ந்தது.

வெகு காலம் வரையில் பால் போல் தூய்மையாக இருந்த அவள் உள்ளத்தில் ஒரு சமயம் அன்பு என்னும் அமுத ஊற்றுச் சுரந்தது. விரைவில், அந்த ஊற்று வறண்டு அவளுடைய நெஞ்சத்தை வறண்ட பாலைவனம் ஆக்கியது. விதியின் விளையாட்டு அவளை ஒரு பெரிய ஏமாற்றத்துக்கு உள்ளாக்கி விட்டது. அதனால் ஏற்பட்ட அதிர்ச்சி அவளுடைய புத்தியே பேதலித்துப் போகும்படி செய்து விட்டது. எனினும், நாளடைவில் அவளுடைய நெஞ்சின் காயம் ஆறியது. அன்பாகிய அமுத ஊற்று மீண்டும் சுரந்தது. சுந்தர சோழரின் மீது கொண்ட காதலையெல்லாம் அவளுடைய அருமைப் புதல்வனாகிய அருள்மொழிச்செல்வனிடம் பிள்ளைப் பிரேமையாக மாற்றிக்கொண்டாள்.

மந்தாகினியின் புதல்வியாகிய நந்தினியிடம் தாயின் குணாதிசயங்கள் பல இயற்கையில் தோன்றியிருந்தன. ஆனால் தாயை உலகம் வஞ்சித்ததைக் காட்டிலும் மகளை அதிகமாக வஞ்சித்தது. பெற்ற தாயினாலும் கைவிடப்பட்டாள். பிறர் வீட்டில் வளர்ந்தாள். காட்டு மிருகங்களினால் அன்னைக்கு ஏற்பட்ட தொல்லைகளைக் காட்டிலும் நாட்டு மனிதர்களால் மகள் அதிக கொடுமைகளுக்கு உள்ளானாள். இளம் பிராயத்தில் அரச குலத்தினரால் அவமதிக்கப்பட்டதெல்லாம் அவளுடைய நெஞ்சில் வைரம் பாய்ந்து நிலைத்து விஷத்தினும் கொடிய துவேஷமாக மாறியது. துவேஷத்துக்கு மாற்று அளிக்கக்கூடிய அன்பு என்னும் அமுதம் அவளுக்குக் கிட்டவில்லை. அவள் யார் யாரிடம் அன்பு வைத்தாளோ அவர்கள் ஒன்று அவளை அலட்சியம் செய்து புறக்கணித்தார்கள்; அல்லது துரதிர்ஷ்டத்துக்கு உள்ளாகி மாண்டு போனார்கள். அவளை அவமதித்தவர்களும், அவளால் வெறுக்கப்பட்டவர்களும் மேன்மையுடன் வாழ்ந்தார்கள். ஒரு பெண்ணின் உள்ளத்தை நஞ்சினும் கொடியதாக்குவதற்கு வேறு என்ன காரணங்கள் வேண்டும்? தன்னை வஞ்சித்தவர்களையும் அவமதித்தவர்களையும் பழிவாங்குவதைத் தவிர அவளுடைய உள்ளத்தில் வேறு எதற்கும் இடம் இருக்கவில்லை. அதற்கு வேண்டிய சூழ்ச்சித் திறன்கள் அன்னையின் கர்ப்பத்தில் இருந்த நாளிலேயே அவளுடைய இரத்தத்தில் சேர்ந்திருந்தன. வாழ்க்கையில் அவள் பட்ட அல்லல்களும் ஏமாற்றங்களும் பயங்கர அநுபவங்களும் அவளுடைய உள்ளத்திலிருந்து இரக்கம், அன்பு முதலிய மிருதுவான பண்புகளை அடியோடு துடைத்து இரும்பினும் கல்லினும் கடினமாக்கியிருந்தன.

இக் கதையில் இனி வரப் போகும் நிகழ்ச்சிகளை நன்கு அறிந்து கொள்

வதற்கு இந்தக் குணாதிசய விளக்கத்தை இங்கே குறிப்பிடுவது அவசியம் என்று கருதி எழுதினோம்.

இணவருந்தும் வேளையில் அவர்களுக்குள் உற்சாகமான பேச்சு எதுவும் நடைபெறவில்லை. நந்தினியும், கரிகாலரும், வந்தியத்தேவனும் அவரவர்களுடைய கவலையிலே ஆழ்ந்திருந்தார்கள். இதனால் மணிமேகலைக்குத்தான் மிக்க ஆதங்கமாயிருந்தது. பழுவூர் ராணியுடன் உல்லாசமாகப் பேசி உற்சாகமாகப் பொழுதுபோக்கும் எண்ணத்துடன் அவள் அன்று நீர் விளையாடலுக்கும் வனபோஜனத்துக்கும் ஏற்பாடு செய்திருந்தாள். இளவரசரும் வந்தியத்தேவனும் எதிர்பாராமல் வந்து சேர்ந்து கொண்டவுடன் அவளுடைய உற்சாகம் அதிகமாயிற்று. ஆனால் அதற்குப் பிறகு மற்ற மூவரும் பேசிய வார்த்தைகளும் நடந்து கொண்ட விதமும் அவளுக்குச் சிறிதும் திருப்தி அளிக்கவில்லை. நந்தினியையும் வந்தியத்தேவனையும் சேர்த்துப் பார்த்த போது ஏற்பட்ட வேதனையை அவளுடைய குழந்தை உள்ளம் உடனே மறந்து விட்டது. அதைப் பற்றித் தவறாக எண்ணி அசூயைக்கு இடங்கொடுத்தது தன்னுடைய தவறு என்று எண்ணித் தேறினாள். அதற்குப் பிறகு மற்ற மூன்று பேரும் கலகலப்பில்லாமல் சிடுசிடுவென்று முகத்தை வைத்துக் கொண்டிருந்ததும் கபடமாகப் பேசி வந்ததும் அவளுக்கு விளங்கவும் இல்லை; பிடிக்கவும் இல்லை.

எனவே, உணவருந்திச் சிறிது நேரம் ஆனதும் மணிமேகலை, "அக்கா! நாம் திரும்பிப் பிரயாணப்படலாமா? படகைக் கொண்டு வரச் சொல்லட்டுமா? இவர்கள் இருவரும் நம்முடன் வருகிறார்களா? அல்லது குதிரை மீது வந்த வழியே போகிறார்களா?" என்று கேட்டாள்.

அப்போதுதான் கரிகாலர் சிந்தனை உலகத்திலிருந்து வெளி உலகத்துக்கு வந்தார். "ஆ! ஆ! இந்தப் பெண்ணின் யாழிசையைக் கேட்காமல் திரும்புவதா? ஒருநாளும் முடியாது. நந்தினி! மறந்து விட்டாயா, என்ன? மணிமேகலை! எங்களை ஏமாற்றி விடாதே!" என்றார்.

"அதை நான் மறக்கவில்லை. தங்களையும் தங்கள் சிநேகிதரையும் பார்த்தால் கானத்தைக் கேட்கக் கூடியவர்களாகத் தோன்றவில்லை. முள்ளின் மேல் நிற்பது போல் நிற்கிறீர்கள்! ஆயினும் பாதகமில்லை. மணிமேகலை! எங்கே! யாழை எடுத்துக்கொண்டு வா!" என்றாள்.

"எதற்காக, அக்கா! விரும்பாதவர்களின் முன்னால், எதற்காக என்னை யாழ் வாசிக்கச் சொல்கிறீர்கள்?" என்று மணிமேகலை சிறிது கிராக்கி செய்தாள்.

"இல்லை, இல்லை! இளவரசர்தான் கேட்பதாகச் சொல்லுகிறாரே? அவருடைய நண்பருக்குப் பாட்டுப் பிடிக்காவிட்டால் காதைப் பொத்திக் கொள்ளட்டும்" என்றாள் நந்தினி.

"கடவுளே! அப்படியொன்றும் நான் இசைக்கலையின் விரோதி அல்ல! கோடிக்கரையில் பூங்குழலி என்னும் ஓடக்காரப் பெண்.

*'அலைகடலும் ஓய்ந்திருக்க*
*அகக்கடல்தான் பொங்குவதேன்?'*

என்று ஒரு பாட்டுப் பாடினாள். அதை நினைத்தால் இப்போதும் எனக்கு உடம்பு சிலிர்க்கிறது!" என்றான் வந்தியத்தேவன்.

"சில பேருக்குச் சிலருடைய பாட்டுத்தான் பிடிக்கும். என்னுடைய பாட்டு உங்களுக்குப் பிடிக்குமோ என்னமோ?" என்றாள் மணிமேகலை.

"பிடிக்காமற் போனால், யார் விடுகிறார்கள்? அதற்கு நான் ஆயிற்று; நீ யாழை எடுத்துக்கொண்டு வா!" என்றார் கரிகாலர்.

மணிமேகலை யாழை எடுத்துக்கொண்டு வந்தாள். பளிங்கு மண்டபத்தின் படிக்கட்டில் மேற்படியிலே உட்கார்ந்துகொண்டாள். நரம்புகளை முறுக்கிச் சுருதி கூட்டினாள். ஏழு தந்திகள் கொண்ட யாழ் அது. ஒவ்வொரு தந்தியிலும் பாதி வரையில் ஒரு ஸ்வரமும் அதற்கு மேலே இன்னொரு ஸ்வரமும் பேசக் கூடியது.

சிறிது நேரம் யாழை மட்டும் வாசித்து

இன்னிசையைப் பொழிந்தாள். கரிகாலரும் வந்தியத் தேவனும் உண்மையிலேயே மற்றக் கவலைகளை யெல்லாம் மறந்து விட்டார்கள். யாழின் இசையில் உள்ளத்தைப் பறி கொடுத்துப் பரவசமானார்கள்.

பின்னர், மணிமேகலை யாழிசையுடன் குரலிசையையும் சேர்த்துப் பாடினாள். அப்பர், சம்பந்தர், சுந்தரின் தெய்வீகமான பாசுரங்களைப் பாடினாள்.

சிறிது நேரமானதும் இளவரசர், "மணிமேகலை! உன்னுடைய கானம் அற்புதமாயிருக்கிறது. ஆனால் எல்லாம் பக்திமயமான பாடல் களையே பாடி வருகிறாய். அவ் வளவாக நான் பக்தியில் ஈடுபட்ட வனல்ல. சிவ பக்தியையெல்லாம் மதுராந்த கனுக்கே உரிமையாக்கி விட்டேன். ஏதா வது காதல் பாட்டுப் பாடு!" என்று சொன் னார்.

மணிமேகலையின் அழகிய கன்னங்கள் நாணத்தினால் குழிந்தன. சிறிது தயக்கம் காட்டினாள்.

"பெண்ணே! ஏன் தயங்குகிறாய்? இங்கே நீ காதல் பாட்டுப் பாடினால் என்னை உத் தேசித்துப் பாடுகிறாய் என்று நான் எண் ணிக் கொள்ளமாட்டேன். என் சிநேகிதனும் எண்ணி கொள்ள மாட்டான். ஆகையால் தயக்கமின்றிப் பாடு!" என்றார் கரிகாலர்.

"அப்படி யாராவது எண்ணிக்கொண்டால் மணிமேகலை அதற்காகக் கவலைப்படவும் மாட்டாள்!" என்றாள் நந்தினி.

"போங்கள், அக்கா! இரண்டு புருஷர்கள் இருக்கு மிடத்தில் இப்படிப் பரிகாசம் செய்யலாமா?" என்றாள் மணிமேகலை.

"இவர்கள் புருஷர்கள் என்று நீ நினைப்பதுதான் பிசகு. ஒரு செத்த புலியின் தலையைக் கொண்டு வர முடியாதவர்களை ஆண் பிள்ளைகள் என்று சொல்ல முடியுமா? முற்காலத்தில் தமிழ்நாட்டு வீர புருஷர்கள் உயிருடன் புலியைப் பிடித்து அதன் வாயைப் பிளந்து பற்களைப் பிடுங்கிக்கொண்டு வந்து தங்கள் நாயகிகளுக்கு ஆபரணமாகச் சூட்டுவார்களாம்! போனால் போகட்டும்! நீ பாடு! அன்றைக்கு என்னிடம் பாடிக் காட்டினாயே? அந்த அழகான பாட்டைப் பாடு!" என்றாள் நந்தினி.

மணிமேகலை யாழ் வாசித்துக்கொண்டு பின் வரும் கீதத்தைப் பாடினாள். அது என்னமோ, இத்தனை நேரம் பாடியதைக் காட்டிலும் இந்தப் பாட்டில் அவள் குரல் இணையற்ற இனிமையுடன் அமுத வெள்ளத்தைப் பொழிந்தது:-





"இனியபுனல் அருவி தவழ்
இன்பமலைச் சாரலிலே
கனிகுலவும் மரநிழலில்
கரம்பிடித்து உகந்ததெல்லாம்
கனவு தானோடி - சகியே
நினைவு தானோடி!

புன்னைமரச் சோலையிலே
பொன்னொளிரும் மாலையிலே

என்னைவரச் சொல்லி அவர்
கன்னல்மொழி பகர்ந்ததெல்லாம்
சொப்பனந் தானோடி – அந்த
அற்புதம் பொய்யோடி?

கட்டுக்காவல் தான்கடந்து
கள்ளரைப்போல் மெள்ள வந்து
மட்டிலாத காதலுடன்
கட்டி முத்தம் ஈந்ததெல்லாம்
நிகழ்ந்ததுண்டோடி – நாங்கள்
மகிழ்ந்த துண்டோடி?"

இவ்வாறு மேலும் மேலும் பல கண்ணிகளை மணிமேகலை வெவ்வேறு பண்களில் அமைத்துப் பாடி வந்தாள். அந்தக் கான வெள்ளத்தில் மற்ற மூவரும் மூழ்கிப் போனார்கள். பல காரணங்களினால் நெஞ்சைக் கல்லிலும் இரும்பிலும் கடினமாக்கிக் கொண்டிருந்த நந்தினியின் கண்களிலும் கண்ணீர் ததும்பியது. ஆதித்த கரிகாலர் இந்த உலகத்தை அடியோடு மறந்து விட்டார். வந்தியத்தேவன் அடிக்கடி திடுக்கிட்டு விழித்துக் கொண்டவன் போல் மணிமேகலையை நோக்கினான். அப்போதெல்லாம் அவன் தன்னையே பார்த்துக் கொண்டிருந்தது கண்டு அந்த வீரனுடைய உள்ளம் மேலும் திடுக்கிட்டது. "ஐயோ! இந்தப் பெண்ணுக்கு நாம் என்ன தீங்கு செய்து விட்டோம்?" என்று அவன் நெஞ்சம் பதைபதைத்தது.

கான வெள்ளத்திலும் உணர்ச்சி வெள்ளத்திலும் மூழ்கியிருந்தவர்கள் வரவரக் காற்று கடுமையாகிக் கொண்டு வருவதைக் கவனிக்கவில்லை. ஏரியில் முதலில் சிறிய சிறிய அலைகள் கிளம்பி விழுந்ததையும் வரவர அவை பெரிதாகி வந்ததையும் கவனிக்கவில்லை. காற்று கடும் புயலாக மாறிக் காட்டு மரம் ஒன்றை அடியோடு பெயர்த்துத் தள்ளியபோதுதான் நால்வரும் விழித்துக்கொண்டு சுற்று முற்றும் பார்த்தார்கள். கடுமையான புயல் காற்று அடிப்பதையும் ஏரி கொந்தளித்துப் பேரலைகள் 'ஓ' என்ற இரைச்சலுடன் எழுந்து விழுவதையும் பார்த்தார்கள்.

திடீரென்று நந்தினி, "ஐயோ! படகு எங்கே?" என்று அலறினாள்.

கட்டிப் போட்டிருந்த இடத்தில் படகைக் காணவில்லை. உற்றுப் பார்த்தபோது வெகு தூரத்தில் படகு அலைகளால் மொத்துண்டு நகர்ந்து நகர்ந்து போய்க்கொண்டிருந்தது.

"ஐயோ! இப்போது என்ன செய்வது?" என்று நந்தினி அலறினாள்.

"உங்கள் இருவருக்கும் குதிரை ஏறத் தெரிந்தால் ஏறிப் போய் விடுங்கள். நாங்கள் சமாளித்துக்கொள்கிறோம்" என்றான் வந்தியத்தேவன்.

"இந்தப் புயல் காற்றில் காட்டு மரங்கள் பெயர்ந்து விழுந்து எங்களைச் சாக அடிப்பதற்கு வழி செய்கிறீர்களா?" என்று நந்தினி கேட்டாள்.

"அதெல்லாம் வேண்டாம். புயலின் வேகம் தணியும் வரையில் இங்கேயே இருந்து விடுவோம். அங்கே போய் என்ன செய்யப் போகிறோம்? சமையலுக்குப் பண்டங்கள் இருக்கின்றன; பாடுவதற்கு மணிமேகலை இருக்கிறாள். இவ்வளவு சந்தோஷமாகச் சமீபத்தில் நான் இருந்ததில்லை!" என்றார் கரிகாலர்.

"இளவரசே! அது சரியல்ல! சம்புவரையரும் கந்தமாறனும் என்ன நினைப்பார்கள்?" என்றான் வல்லவரையன்.

"இவரே புலியைத் தேடிச் சென்றபோது படகை அவிழ்த்துவிட்டு விட்டார் போலிருக்கிறது!" என்றாள் நந்தினி.

"அக்கா! ஏன் வீண் பழி சொல்கிறீர்கள்? இவர் வந்தபோது படகு கரையோரமாகத்தானே இருந்தது. யாரும் கவலைப்பட வேண்டாம். என் தந்தை இந்தப் புயல் காற்றைப் பார்த்ததும் நம் துணைக்குப் பெரிய படகுகளை அனுப்பி வைப்பார்!" என்றாள் மணிமேகலை.

அவள் கூறியது சற்று நேரத்துக்கெல்லாம் உண்மையாயிற்று. ஏறக்குறைய கப்பல் என்று சொல்லத் தக்க இரு பெரும் படகுகள் அத்தீவை நோக்கி வந்தன. அவற்றில் ஒன்றில் பெரிய சம்புவரையரே இருந்தார். நாலுபேரும் பத்திரமாய் இருப்பதைக் கண்டு மிக்க மகிழ்ச்சி அடைந்தார்.

அவர்களை ஏற்றிக்கொண்டு அலை கடல் போல் பொங்கிக் கொந்தளித்த ஏரியில் இரண்டு படகுகளும் திரும்பிச் சென்றன. சம்புவரையரைத் தவிர, மற்ற நால்வரின் உள்ளங்களிலும் கடும் புயல் வீசிக் கொந்தளிப்பை உண்டாக்கிக் கொண்டிருந்தது.

**"பொன்னியின் செல்வன்" நாலாம் பாகம் முடிவுற்றது. கடைசிப் பகுதியான ஐந்தாம் பாகம் அடுத்த இதழில் தொடரும்.**

# குழந்தைப்பேறு பெற முக்கூட்டு மருத்துவம்

மருத்துவத்தில் இன்று எத்தனையோ விஞ்ஞான முன்னேற்றங்கள் இருந்தாலும், குழந்தைச் செல்வம் உண்டாவது என்பது 'இறைவன் கொடுத்த வரம்' போல் ஆகி விட்டது.

''குழந்தைப்பேறு இல்லாத தம்பதியரில், குறை பாடு கணவனிடம் இருந்தாலும் சரி, மனைவியிடம் இருந்தாலும் சரி, அவர்களை இயற்கையாகவே குழந்தைபேற்றுக்கு தகுதி உள்ளவர்களாக ஆக்கும் – பக்கவிளைவுகள் இல்லாத சிகிச்சை, நாங்கள் கடைப்பிடிக்கும் 'ஹோமியோபதி – சித்தா – ஆயுர் வேதம்' என்ற முக்கூட்டு மருத்துவ முறையாகும்'' என்று கூறுகிறார், 'நவீன வைத்தியாலயா' என்ற பெயரில் வந்தவாசியிலும், சென்னையிலும் சிகிச்சை நிலையங்கள் நடத்தி வரும் டாக்டர் ஏ. அர்ஜுனா.

''கடந்த 40 ஆண்டுகளுக்கும் மேலான என் மருத்துவ அனுபவத்தில் ஆயிரக்கணக்கான தம்பதி யர்களுக்கு சிகிச்சையளித் திருக்கிறேன்.



உயிரணு உற்பத்தி ஆகியும், கருக்குழாய் அடைப்பு நீங்கியும் குழந்தை பெற்ற சென்னை மயிலாப்பூரைச் சேர்ந்த பாலு-சித்ரா தம்பதிகள்

என்னிடம் வரும் தம்பதி யரில் ஆண்களில் 70 சதவிகி தம் பேரும், பெண்களில் 30 சதவிகிதம் பேரும் குறைபாடு உடையவர்களாக இருக்கிறார் கள்'' என்று விவரம் தெரிவித் தார் அர்ஜுனா.

குழந்தைப்பேறு இல்லாமல், குடும்பத்தில் பிரச்னைகள் ஏற் பட்ட காரணத்தால் தற் கொலைக்கு முயன்ற பெண் களை, தனது சிகிச்சை முறை யில் தடுத்து நிறுத்தியிருப்பதாகக் கூறுகிறார் டாக்டர் அர்ஜுனா. அது போல், ''மனைவிக்குக் குழந்தை இல்லை என்பதற்காக மறுமணம் புரியவிருந்த கணவன் மார்களுக்கு நம்பிக்கையூட்டி, அவர்கள் குடும்பத்தில் குழந்தைச் செல்வம் உண்டாக்கி மகிழ்ச்சியூட்டியிருக் கிறேன்'' என்கிறார் அவர்.

தனது சிகிச்சை முறைகளைப் பொறுத்தவரையில், பிற மருத்துவர்களோடு ஒப்பிடுகையில், சேவை மனப்பான்மையோடு மருத்துவம் செய்வதாகக் குறிப் பிட்டார்.

''எங்களிடம் வரும் தம்பதியரிடம் சிகிச்சைத் தொடங்கும் முன் கணவனின் உயிரணு உற்பத்தி சரியாக இருக்கிறதா என்பதைக் கண்டறிய விந்துப் பரிசோதனை செய்யச் சொல்வோம். அதில் குறை பாடு இருந்தால் எங்களது முக்கூட்டு மருந்துகள் மூலம் சரியாகும் வரை அவர்களுக்கு சில கட்டுப் பாடுகளுடன் சிகிச்சை அளித்து, உயிரணுக்கள் உற்பத்தி செய்து அணுக்களின் எண்ணிக்கை – உயிரோட்டத்தை அதிகரிக்கச் செய்து கருத்தரிக்கச் செய்கிறோம்.

பொதுவாக ஓர் ஆணின் உயிரணுக்களின் எண்ணிக்கை சராசரியாக 100 முதல் 150 மில்லியன் வரை இருக்கும். அந்த அணுக்களின் உயிரோட்டம் மொட்டிலிட்டி (Motility) 80 சதவிகிதத்திற்கு மேல் இருக்க வேண்டும்.

நாங்கள் சராசரிக்கும் குறைவாக உள்ளவர் களைக்கூட புத்திர பாக்கியத்திற்குத் தகுதி உடைய வர்களாக ஆக்கியிருக்கிறோம். ஆண் தன்மை அறவே இல்லாத ஆண் மகனுக்கு ஆண் தன்மை உண்டாக்கி புத்திரபாக்கியம் உண்டாக்கியிருக் கிறோம்.

எங்களிடம் 4.12.99ல் செமன் டெஸ்ட் செய்து, சிகிச்சைக்கு வந்த ஒரு ஆண் மகனுக்கு மொட்டிலிட்டி 5%ம், கவுண்ட் 2 மில்லியனும் இருந்தது. அதே ஆண் மகன் ஒரு மாத காலம் எங்களிடம் சிகிச்சை பெற்றதில் 26.1.2000ல் மொட்டிலிட்டி 60%ம், டோட்டல் கவுண்ட் 128 மில்லியனும் சிசல்ட் உயர்ந்து இருந்தது. இந்த நபர் இதைக் கண்டு சந்தோஷமும், ஆச்சரிய மும் அடைந்தார்.

எங்களிடம் சென்னையில் சிகிச்சைக்கு வந்த இன்னொரு ஆணுக்கு 3.2.2000ல் கவுண்ட் 6 லட்சமும், மொட்டிலிட்டி 50%ம் இருந்தது. அவர் மருந்து சாப்பிட்டு ஒரு மாதத்திற்குள் செமன் டெஸ்ட் பரிசோதித்ததில் 26.2.2000ல் மொட்டிலிட்டி 80%ம் கவுண்ட் 50 மில்லியன் உயர்ந்திருக்கிறது. அடுத்து மருந்து சாப்பிட்டதில் மீண்டும் 31.3.2000 கவுண்ட் 110 மில்லியன் உயர்ந்திருக்கிறது. வேறு எங்கும் காண முடியாத இது ஒரு உலக சாதனை யாகும்.

**ஆண் மலட்டுத்தன்மைக்கான காரணங்கள் :**

ஆண்களுக்கு இளம் வயதிலேயே புட்டாளம்மை வந்தாலும், அம்மை வந்திருந்தாலும், மஞ்சள் காமாலை, டைபாய்டு ஜுரத்தால் பாதிக்கப்பட்டிருந் தாலும், விதைகளில் அடிபட்டிருந்தாலும், வெப்பம் அதிகமுள்ள இடங்களில் வேலை செய்வதாலும், இந்திரிய நரம்புகள் இல்லாமல் பிறந்திருந்தாலும், அவர்களால் புத்திர பாக்கியம் அடைய முடியாத நிலை உள்ளது.

சில ஆண்களுக்கு முறையற்ற சிற்றின்ப பழக்கங் கள், அதிகமான போதைப் பொருட்களின் பழக்கம், மற்றும் நீரிழிவு நோய் இருந்தாலும் குழந்தை பிறக்கச் செய்வதற்கான தகுதி இழந்து போகிறார்கள். அவர்

களுக்கு எங்கள் முக்கூட்டு மருத்துவ சிகிச்சையால் உயிரணு உற்பத்தி செய்து புத்திரபாக்கியம் அடையச் செய்ய முடியும்.

**பெண் மலட்டுத்தன்மைக்கான காரணங்கள்:**

பெண்களின் பிரச்னைகளைப் பொறுத்தவரையில், கர்ப்பப்பை வளர்ச்சியே இல்லாமல் இருக்கும் பெண்களின் கர்ப்பப் பையை வளர்ச்சியடையச் செய்கிறோம். சில பெண்களுக்கு வீட்டு விலக்கு ஒழுங்கில்லாமல் இருக்கும். அதை ஒழுங்குபடுத்துகிறோம். சில பெண்களுக்கு மாதந்தோறும் வீட்டு விலக்கின் போது சூதக வயிற்று வலி வரும். இதனால் கருத்தரிக்க வாய்ப்பில்லாமல் போகும். இந்தக் குறையையும் எங்கள் முக்கூட்டு மருந்துகளால் குறைபாடுகளை நீக்கி கருத்தரிக்கச் செய்கிறோம்.

சில பெண்களுக்கு கருமுட்டை உற்பத்தி இருக்காது. எங்கள் முக்கூட்டு மருத்துவத்தால் கருமுட்டை உண்டாக்கி, கருவுறச் செய்கிறோம். இத்தகையவர்களை ஸ்கேன் மூலம் பரிசோதிக்கச் செய்து, கருமுட்டை உற்பத்தி நிலையை அறிந்து கருத்தரிக்கச் செய்கிறோம்.

பெண்களுக்குள்ள பிரதான பெரிய பிரச்னை, கருக்குழாயில் சதை அடைப்பு ஏற்படுவது. அதை முக்கூட்டு மருந்துகளால் கரைத்து அடைப்பை நீக்கி விடுகிறோம்.

இப்படி கருக்குழாய் அடைப்பு பிரச்னை ஏற்பட்டதால் ஈரோடு அருகிலுள்ள நசியனூரைச் சேர்ந்த சம்பூர்ணத்திற்கு – சின்னசாமியை மணம்புரிந்து ஏழு ஆண்டுகளாகியும் குழந்தையில்லை. மருத்துவர்களிடம் பரிசோதனை செய்து பார்க்கையில் கருக்குழாய் அடைப்பு இருப்பது தெரியவந்தது. அதை நீக்கி, குழந்தைபேறுக்கு சிகிச்சை மேற்கொள்வதானால் அதற்குரிய செலவு லட்ச ரூபாய்க்கு மேலாகும் என்று தெரிந்து பயந்து போனார்கள். அதற்கப்புறம்தான் என்னைப் பற்றி பத்திரிகைகள் வாயிலாக கேள்விப்பட்டும், ஈரோடு பகுதியிலிருந்து என்னிடம் சிகிச்சை பெற்றவர்கள் வாயிலாகவும் அறிந்து என்னைக் காண வந்தவாசி வந்தார்கள். சம்பூர்ணத்திற்கு நான் முக்கூட்டு மருந்து கொடுத்த 4–வது மாதத்திலேயே அவருக்கு கருக்குழாய் அடைப்பு நீங்கி, கர்ப்பம் உண்டானது. அவருக்கு அழகிய ஆண் குழந்தை பிறந்தது.

கடந்த ஆண்டு துபாயில், தமிழ்நாட்டைச் சேர்ந்த ஒருவருக்கு ஆண் குழந்தை பிறந்துள்ளது. ராமேஸ்வரத்தில் சைக்கிள் கடை உரிமையாளர் ஒருவருக்கு ஆண் குழந்தை பிறந்துள்ளது.

சென்னையில் எங்களிடம் முக்கூட்டு மருத்துவ சிகிச்சை பெற்ற ஒரு தம்பதியில், அந்தப் பெண் தற்போது 4 மாத கர்ப்பிணியாக இருக்கிறார்.

லண்டனைச் சேர்ந்த் ஒரு தம்பதியர் குழந்தையில்லாதிருந்து எங்களிடம் வந்து சிகிச்சை பெற்றதில் முக்கூட்டு மருத்துவத்தால் ஆணுக்கு உயிரணு உற்பத்தி ஆகியும், பெண்ணுக்கு கருக்குழாய் அடைப்பு நீங்கியும் இப்போது அந்தப் பெண் கருத்தரித்துள்ளதாக முதலில் தொலைபேசியில் தகவல் தெரிவித்தார்கள். அடுத்து கடிதமும் எழுதியிருந்தார்கள்.

எங்கள் மருத்துவமனையில், தமிழ்நாட்டில் எல்லா மாவட்டங்களிலிருந்தும், இந்தியாவின் அனைத்து மாநிலங்களிலிருந்து வந்தும்; அயல்நாடுகளில் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்ஸ், கனடா, சுவிட்சர்லாந்து, நியூசிலாந்து, சவுதி அரேபியா, துபாய், குவைத், பக்ரைன், சியாத், ஓமன், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஜெர்மனி போன்ற வெளிநாடுகளில் இருந்து வந்தும் சிகிச்சை பெற்று பயனடைந்து வருகிறார்கள்.

என்னிடம் சிகிச்சை பெற்று கர்ப்பமடைந்தவர்கள் கர்ப்பமடைந்த பின் 6மாதம் வரை ஆங்கில மருத்துவர்களிடம் சென்று ஆங்கில மருந்து சாப்பிடக் கூடாது. அப்படி ஆங்கில மருந்துகளைச் சாப்பிட்டால் கருச்சிதைவு ஏற்படவும் வாய்ப்புண்டு.

ஒரு ஜாதி மருந்துகளால் உருவாகும் கரு, வேறொரு ஜாதி மருந்தினால் பாதிக்கப்பட வாய்ப்புண்டு. அதனால் பிரசவம் ஆகும் வரை உஷாராக இருக்க வேண்டும். அப்போதுதான் சுகப் பிரசவம் ஏற்படும்'' என்றார் டாக்டர் **அர்ஜுனா**. சுகப்பிரசவத்திற்கும் மருந்து உண்டு என்கிறார் அவர்.

நீங்களும் குறைந்த செலவில் புத்திர பாக்கியம் அடைய டாக்டர். **ஏ. அர்ஜுனா**, அவரது மனைவி டாக்டர். **வி.ஏ. ஆண்டாள்** அவர்களை அணுகவும்:



• டாக்டர் அர்ஜுனா, டாக்டர் V.A. ஆண்டாள் அர்ஜுனா

**நவீன வைத்தியாலயா ஹோமியோபதி – சித்தா – ஆயுர்வேத மலடு நீக்கும் ஆஸ்பத்திரி**

**சென்னையில் சனி, ஞாயிறு, திங்கள் ஆகிய தினங்களில் டாக்டரை சந்திக்குமிடம் நெ.9 நெற்குன்றம் பாதை, (டிஎஸ். கவுரி சங்கர் கல்யாண மண்டபம் எதிரில்) 100 அடி ரிங் ரோடு, வடபழனி, சென்னை – 600 026 போன் : 4833464 எஸ்டிடி. 044**

**செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய தினங்களில் டாக்டரை சந்திக்குமிடம் நெ. 7 இராமய்யர் தெரு, வந்தவாசி, வீடு : நெ. 30, பிராமணர் தெரு, வந்தவாசி,**

**திருவண்ணாமலை மாவட்டம் – 604 408**

**போன் : 25208 எஸ்டிடி. 04183**

Visit us at :
www.naveenainfertility hospital.com.
www. gemsassociates.com/infertility
e-mail.doctorarjuna @naveena infertility hospital.com
e-mail.doctorandal @ naveena infertility hospital.com.










ஜோக்ஸ் : **எஸ். பட்னிஸ்**

(ஈமெயிலில் நமக்கு
இதை அனுப்பி வைத்த
அநாமதேயர்களுக்கு நன்றி!)

மும்பை என்று எடுத்துக் கொண்டால், ஷாருக், ஆமீருடன் மூன்று மணி நேரத்தைக் கழித்துவிட்டு, 'சௌபாத்தி ஜாயேங்கே பேல் பூரி காயேங்கே' (பீச்சுக்குப் போவோம் பேல்பூரி சாப்பிடுவோம்) என்றிருந்தவர்களை, அள்ளிக் கொண்டு போய் 'அம்யூஸ்மெண்ட் பார்க்'கில் 'டவுன்லோட்' பண்ணுவ தென்பதொன்றும் அவ்வளவு எளிதான காரியமில்லை.

அதனை ஒரு சவாலாகவே ஏற்று, பெரு மளவு வெற்றியும் பெற்றிருக்கும் அஷோக் கோயல் (இயக்குனர், எஸ்ஸெல் வேர்ல்டு, வாட்டர் கிங்டம்) தான் கடந்து வந்த பாதை யைத் திரும்பிப் பார்த்து, 'அ'விலிருந்து 'ஃ'வரை அலசியதில் முடிச்சவிழ்ந்த

**கோராய் பீச்சருகே, 42 ஏக்கர் நிலப்பரப்பில் எழுந்து நிற்கும் எஸ்ஸெல் வேர்ல்டும், அருகிலேயே 24 ஏக்கர்களைக் கொண்ட 'வாட்டர் கிங்டமும்' ஆரோக்கியமான அதிர்ச்சிகள்; கலகலப்பான கலக்கல்கள்; ஜாலியான 'ஜில்'கள்; சில்லிட வைக்கும் 'த்ரில்'கள்!**

ஆச்சர்யங்களை, வாசகர்களுடன் பகிர்ந்து கொள்வதே ஒரு 'த்ரில்'தான்!

முதல் ஆச்சர்யம், அஷோக் கோயலின் எளிமை; 'ஜீ' டெலிஃபிலிம்ஸின் நிறுவனர் சுபாஷ் சந்த்ர கோயலின் தம்பி இவர்.

"நான் வெளிநாடு செல்லும்போதெல்லாம், அங்குள்ள குழந்தைகள் அனுபவிக்கும் 'ஃபன்', 'அட்வென்சர்', இரண்டையும் பார்த்து, 'நம்மூரிலும் இவற்றை அறிமுகப் படுத்தினால் என்ன?' என்று அடிக்கடி எழுந்த ஆசைதான் எஸ்ஸெல்வர்ல்டின் வித்து" என ஆரம்பித்தார் கோயல்.

"போர்விலியிலிருந்து சற்றுத் தூரத்திலுள்ள கோராய் பீச் பகுதியில் இந்த நிலம் கிடைத்தது. இடம் வாய்த்ததும், 'அடிப்படை கட்டமைப்பு' என்று சொல்லப்படும் கேளிக்கை சாதனங்களுள், பெரும்பான்மையானவை இறக்குமதித்தவையே! தற்சமயம் சிறு சிறு பாகங்கள் மட்டும் இங்கேயே உற்பத்தி செய்கிறோம்; 'ரைடுகள்' தயாரானபின்னும், அவற்றை இயக்கவோ, ரிப்பேர் செய்யவோ, மெயின்டெய்ன் பண்ணவோ யாருக்கும் தேர்ச்சி இருக்கவில்லை; அதனால் இங்கிருந்து, ஆர்கிடெக்டுகள், நிர்வாகிகள், அதிகாரிகள், ட்ராஜிடிமானேஜர்கள் என்று பல குழுக்களை



வெளிநாடுகளுக்கு அனுப்பி பயிற்சி அளித்தோம். இன்று, அங்கிருந்து பயிற்சியாளர்களை இங்கு வரவழைக்கிறோம்; ஏனென்றால் இந்தத் துறையில் தினம் ஒரு புதுமைதான். கற்றல் என்பது தொடர்கதைதானே..."

# ஆட்டம்,

இவையெல்லாம் சும்மா வந்து விடுமா? முதல் கட்ட முதலீடே 24 கோடிகளாம்! இன்றைய இன்வெஸ்ட்மெண்டுகளின் மதிப்பு 70 கோடிகள்! எந்த தைரியத்தில் இத்தனை கோடிகளை முதலீடு செய்தார்கள்?

"இன்று 1000 பேர் வந்தார்களா? 1000 X 225 (நுழைவுக் கட்டணம்) என்று பெருக்கி, இவ்வளவு லாபம் என்று சொல்ல முடியாத தொழில் இது; லாபம் வர வர, அதை மீண்டும் புதிய சாதனங்கள் வாங்குவதிலும், புதிய கான்செப்டுகளை அறிமுகப்படுத்துவதிலும் தான் செலவிட்டுக் கொண்டிருப்போம். 89-ல் ஆரம்பித்தது எஸ்ஸெல் வால்ட்; 98ல் பிறந்தது வாட்டர் கிங்டம். ஒன்றின் லாபத்தை மற்றொன்று விழுங்கிக் கொண்டிருக்கும்! தவிர அறுநூற்று சொச்ச தொழிலாளர்களின் சம்பளம், தங்கும் வசதி, ஆபீஸ் மெயின்



டெனன்ஸ், மார்க்கெட்டிங் செலவுகள்.. இத்யாதிகள்'' என்ற நீண்ட பட்டியலை அவிழ்த்து விட்டார் கோயல்.

''இங்கே எல்லாவற்றையுமே நாங்கள் சர்வதேச தரத்தில் தான் அமைத்துள்ளோம். உலகின் மிகப் பெரிய 'வேவ் பூல்' (Wave pool) ஆன 'வெட்லேண்டிங்' இங்கே தானிருக்கிறது; பார்க்கிலுள்ள நீரெல்லாம் ஒன்றே கால் மணிக்கொருமுறை ஃபில்டர் செய்யப்பட்டுவிடும். அண்மையில் இந்தியன் மெடிக்கல் அசோசியேஷனிலிருந்து சிலர் இங்கே ஆய்வுக்கு வந்திருந்தனர். சுற்று வட்டாரத்தில் நாங்கள் 1,28,000 மரங்கள் நட்டிருக்கிறோமே? இங்கே சுற்றுச்சூழல் மாசு நஹி! ரைடுகளெல்லாம் பாதுகாப்பானவை, அவற்றால் இரத்த ஓட்டம் அதிகரித்து, ஆக்ஸிஜன் உள்வாங்கலும் அதிகரிப்பதாக சான்றிதழ் வழங்கியுள்ளனர். இப்படி இயன்ற அளவு பாதுகாப்பு செய்து கொண்டேயிருக்கிறோம்'' என்றார் கோயல்.





அசோக்கோயல்

# பாட்டம், ஆக்ஸிஜன்!

**எ**ல்லாம் சரிதான்; ஆனால் இந்த அல்லோலகல்லோலங்களுக்கென்று மக்கள் திரும்பத் திரும்ப வந்து கொண்டிருப்பார்களா?

''கஷ்டம்தான்'' என ஒப்புக் கொள்கிறார் மார்கெடிங் எக்ஸிக்யூடிவ்வான ஷிரீஷ் தேஷ் பாண்டே. ''அவ்வப்போது ரைடுகளின் ஸ்பீடை மாற்றுவோம், புதிய ரைடுகளை அறிமுகப்படுத்துவோம் - தண்டர், எண்டர்ப்ரைஸ், க்ரேஸிகப், ப்ளே போர்ட் எல்லாமே ஸூப்பர் ஹிட்கள்! முதலில் குழந்தைகளுக்கு மட்டுமிருந்தது; இப்போது குடும்பத்தாருக்கென்றாகி விட்டது; வருட ஆரம்பத்தில் ஈவன்ட் காலண்டர் ஒன்று போட்டு விடுவோம்; முக்கியமான தினங்களில் ஷாருக்கான், ஷீபா முட்கல், ஷங்கர் மகாதேவன், ஹேமா சர்தேசாய்... போன்ற பிரபலங்கள் வந்து, ஆடிப் பாடி தூள் கிளப்புவார்கள். 'டிஸ்னி'யிலுள்ளது போல் "ஃபன் கேரக்டர்கள் உண்டு! வெல்கம் ட்ரிங், குட்டீஸ் பேக், புதிய கேம்ஸ், ஸ்கூல் டீச்சரோடு யூனிஃபார்மில் குழந்தைகள் வந்தால் நூறு ரூபாய் என்று டிஸ்கவுண்ட்... இப்படி எதை யாவது செய்து கொண்டிருப்போம்'' என்றார் சிரித்துக் கொண்டே...

**போ**ட்டியாளர்களைப் பற்றி கவலையில்லையா என்று நாம் கவலைப்பட, ''தற்சமயம் இல்லை; இந்தத் துறையில் வளர்ச்சித் தடைகள் அதிகம்; புதியவர்கள் தடுமாறுவார்கள். அதற்காக கவலையேயில்லை என்று மெத்தனமாக இருக்க முடியாது; என் பார்வையில், ஒரு மனிதனின் ஓய்வு நேரத்தைக் கவர முனைக்கும் எந்த ஒரு புதிய பொழுதுபோக்கையும் நான் எனது கடும் போட்டியாகக் கருதுவேன்'' என புத்திசாலித்தனமாகப் பதிலிறுத்தார் கோயல்.

இப்போதைக்கு,- மும்பையின் 'டூரிஸ்ட் அஜெண்டாவில்' முக்கிய இடம் பெற்றிருக்கிறது எஸ்ஸெல் வர்ல்ட்.

**— ஜெ.ஆர்.**

**17** வீட்டு வாசலில் உயர்ந்து வளர்ந்திருந்த முருங்கை மரத்தின் கீழ் நின்றிருந்த பிரசாத், ராஜ்குமார் வீட்டிலிருந்து காரில் வந்திறங்கிய சுவாதியைப் பார்த்ததும் அவளருகே வந்தான். அவளது தோள்களை மாறி மாறிப் பார்த்தான். "நான் என்ன பார்க்கிறேன் தெரியுதா?" என்றும் கேட்டான்.

சுவாதிக்கு எந்த பதிலையும் அளிக்கத் தோன்றவில்லை. தன் பெற்றோரின் பூர்வ கதையைக் கேட்ட அதிர்ச்சியும், அது மனத்தில் ஏற்படுத்திய பாரமும் இன்னமும் நீங்கவில்லை. தன் போர்ஷனை நோக்கி நடக்கத் தொடங்கியபோது, பின்னாலேயே ஓடிவந்த ராஜ்குமாரின் கார் டிரைவர் ஒரு சிறிய துணிப்பையை அவளிடம் நீட்டினான்.

"ஐயா வீட்டிலே பழுத்த மாம்பழம்மா. நீங்க வீட்டுக்குச் சாப்பிட வந்தப்பவே இதை பார்சல் பண்ணி வைக்கச் சொன்னாரு. நான்தான் உடனே கொடுக்க மறந்துட்டேன்'' என்று மன்னிப்புக் கேட்கும் விதமாகக் கூறிவிட்டுக் கிளம்பிச் சென்றான்.

''ஓ, பத்திரிகை ஆசிரியரின் வீட்டில் பலமான விருந்தோ?'' என்ற பிரசாத்தின் குரலில் சற்றே கருத்துபேதம் தெரிந்தது. அவனும், அவளது பெற்றோரும் பலமுறை அழைத்தும் இன்னும் அவள் அவர்களது வீட்டில் சாப்பிடவில்லை என்பது நினைவுக்கு வந்தது.

பூட்டைத் திறந்து கொண்டு அவள் வீட்டுக்குள் நுழைய, பிரசாத்தும் பின்னாலேயே நுழைந்தான். அவன் முகம் தொங்கிப் போயிருந்தது. 'கொஞ்சம் இரக்கம் காண்பிக்க மாட்டாயா?' என்ற பரிதாபம் அதில் தெரிந்தது.

"சுவாதி, நமக்குத் திருமணமானவுடன் நான் உன்னை ராணி போல வைத்துக் கொள்வேன். அந்தக் கால அந்தப்புர ராணியில்லை. சர்வாதிகார ராணியாகக் கூட நீ இருக்கலாம். எலிசபெத் மகாராணி மாதிரி. நான் ஒரு சாதாரணக் கோமகனாக உன்னோடு இருந்து காலம் தள்ளுகிறேன்."

எப்படி சீரியஸாக ஆரம்பித்தாலும் ஏதோ ஒரு கிண்டல் தானாகக் கலந்து விடும் படி பேச்சு அமைந்த அவனை ஒருகணம் உற்றுப் பார்த்தாள் சுவாதி. என்ன குறை இந்த இளைஞனுக்கு? ஆரோக்கியமில்லையா? முகக்களை இல்லையா? நல்லதொரு குடும்பப் பின்னணி இல்லையா? தவிர, பாதுகாப்பானதொரு வேலை, ஏற்கெனவே அம்மாவுக்குத் தெரிந்தவன் என்ற பல கூடுதல் தகுதிகள் வேறு.



தராசு முள் சாயும்போதே சுவாதியின் உள்மனம் எச்சரித்தது. 'இவை எல்லாவற்றையும் விட உன் மூளையை மழுங்கடித்தது ஸ்டூல் சரிந்த அன்று ஏற்பட்ட அந்த ஆலிங்கன மயக்கம்'. தூக்கத்திலிருந்து விழித்தவள் போல் தன்னை வேகமாக உலுக்கிக் கொண்டாள் சுவாதி. இதே போன்றதொரு மயக்கம்தான் அம்மாவையும் காதலிலும், கல்யாணத்திலும் தள்ளியிருக்-

கிறது. தனது லட்சியத்தை விட்டு அதலபாதாளத்தில் வீழ்த்தியிருக்கிறது. தீர்மானிக்கும் திறமையை திசை திருப்பி யிருக்கிறது.

இந்த பிரசாத் என்ன செய்வான்? திருமணத் திற்குப் பிறகு தன்



## அருண் சரண்யா

தோளில் தாங்கக்கூடும். ஆனால் என் சுயகாலில் நிற்பேன் என்று கூறி அதை செயல்படுத்தினால் அதை எந்த அளவு ஏற்பான்? வானத்தை நோக்கியே இப்போது என் குறி. கீழே இறங்கும் எந்த சக்திக்கும் நான் இடம் கொடுக்கக் கூடாது.

தான் நேற்று கடையிலிருந்து வாங்கி வந்திருந்த மிக்ஸரை ஒரு தட்டில் போட்டு அவனிடம் நீட்டினாள். ''சாப்பிடுங்க பிரசாத்'' என்றாள்.

''நான் எதிர்பார்த்தது ஸ்வீட்டை. ஸ்வீட்டான பதிலை.''

''வாழ்க்கை என்பதே எல்லாம் கலந்த மிக்ஸர்தான். எதற்கும் தயாராக இருப்பது தான் வாழ்க்கை. நான் என்ன சொல்ல வரேன்னா...''

''புரியுது. என்னைக் கல்யாணம் செய் துக்கவும் நீ தயார்னு சொல்ல வரே. ஏன்னா நீ வாழ்க்கையிலே எதற்கும் தயாராயிருக்கே இல்லையா?''

''நீங்க எனக்குப் பல உதவிகள் செய் திருக்கீங்க, மறுக்கலே'' என்று தொடங் கினாள்.

"உங்கம்மா எனக்கும், என் குடும்பத்துக்கும் செய்ததை விடவா?"

''பிரசாத், கடவுள் எதற்காக ஒரு வாய்யையும், இரண்டு காதுகளையும் படைத்தார்ன்னு கொஞ்சமாவது யோசிச்சிருக்கிங்களா? பிறர் சொல்வதைக் கொஞ்சம் காது கொடுத்துக் கேட்கப் பழகிக்குங்க.''

இந்தக் கண்ணாமூச்சி விளையாட்டு தனக்குப் பிடிக்கிறதா இல்லையா என்று சுவாதியால் தீர்மானிக்க முடியவில்லை.

இளமையில் தனிமை என்பது கொடூரமானதாக இருந்தது. கோமளா ஆன்ட்டி அக்கறை எடுத்துக் கொள்கிறாள். இரவில் கூடத் துணைக்குப் படுத்துக் கொள்கிறாள். ஆனால் பிரசாத்தின் கவனிப்பில் ஓர் ஆகர்ஷணம் இருந்தது. வார்த்தைகளில் சீண்டல் இருந்தாலும் பலவித உதவிகள் செய்கிறான். அவளுக்கு சரியாகத் தூக்கம் வரவில்லை என்பதை அறிந்து கொண்டு மெத்துமெத்தென்ற ஒரு தலையணையை வாங்கி வந்து கோமளா ஆன்ட்டியின் மூலமாகவே கொடுத்தான். அன்றிரவு இந்தத் தலையணையில் தலைவைத்துப் படுத்த போது ஆழ்ந்த உறக்கம் வந்தது. காலையில் புத்துணர்வோடு எழுந்தாள். லேசான சிலிர்ப்பு ஏற்பட்டது. அம்மாவைப் பற்றிய பல விவரங்கள் அவனுக்குத் தெரிந்திருந்தன. அவற்றில் அப்பா தொடர்பானதை மட்டும் தவிர்த்து விட்டு பிறவற்றை அவ்வப்போது கூறினான். தானும் பிரசாத்தை விரும்புவது புரிந்தாலும் வெளிக்காட்டிக் கொள்ளத் தயக்கம் ஏற்பட்டது. வருங்கால பயம். அம்மா வந்துவிடேன், வழிகாட்டேன் என்று மனத்திற்குள் கெஞ்சிக் கொண்டாள்.

''என்னைக் காதலிப்பதாகவோ, கல்யாணம் செய்து கொள்வதாகவோ எண்ணம் கொள்ள வேண்டாம். நீங்கள் எனக்கு ஒரு நண்பர், அவ்வளவுதான்'' என்று கூறி இந்தப் பிரச்னையிலிருந்து தப்பிக்கலாம் என்றால் அதையும் செயல்படுத்த முடியவில்லை.

வீட்டை ஒழிப்பதில் சுவாதி ஈடுபட, வாசலில் கார் சப்தம் கேட்டது. ராஜ்குமாரின் கார் டிரைவர் வந்து கொண்டிருந்தான்.

''ஐயா உங்களை உடனே அழைச்சிக்கிட்டு வரச் சொன்னார்'' என்று அவன் கூற, எதுவும் புரியாமல் சுவாதி கிளம்பத் தயாரானாள். பிரசாத் கண்களில் அனல் தெறிக்க வெளியேறினான்.

"என்ன விஷயம்னு தெரியுமா? எதற்காக எடிட்டர் அதுக்குள்ளே கூப்பிட்டு அனுப்பியிருக்கிறார்?" என்று டிரைவரைக் கேட்டாள்.

''சரியாத் தெரியல்லேம்மா. ஆந்திராவுக்குப் போன சமூக சேவகிகள் சென்னை சென்ட்ரல் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்துட்டாங்களாம். அங்கேயிருந்து நேரே நம்ம பத்திரிகை ஆபீஸுக்குத்தான் வரப் போறாங்களாம்.''

"அம்மா!'' சுவாதியின் உடலெங்கும் மின்சாரம் பாய்ந்தது. பரவச விளக்குகள் எரிந்தன. ஆனந்த மின்விசிறிகள் சுழன்றன. ஒருவழியாக பதினெட்டு வருடக் கேள்விக்கு விடை கிடைக்கப் போகிறது.

பத்திரிகை அலுவலகத்தில் கார் நின்றவுடனேயே காரின் கதவைத் திறந்து கொண்டு ஓட்டமும் நடையுமாக உள்ளே புகுந்த சுவாதியைக் கொஞ்சம் வியப்போடு கவனித்தார் அந்த விவரம் புரியாத டிரைவர்.

**"வா** சுவாதி. ஒரு வி.ஐ.பி. வந்துட்டே. இப்போ இன்னொரு வி.ஐ.பி. வரவேண்டியதுதான் பாக்கி. என்ன பார்க்கறே, நாங்க எல்லாருமே பசுவும், கன்றும் இணையப் போகிற அந்தக் காட்சியைப் பார்க்கத்தான் காத்திருக்கோம்'' என்றாள் சங்கீதா, பாதி கிண்டலும் பாதி நெகிழ்ச்சியுமாக. சுவாதியை அழைத்துத் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள்.

''சுவாதி, ஒரு சின்ன பெட் வச்சுப் போமா? சத்யா மேடம் என்ன கலர் புடைவை உடுத்திக்கிட்டு இப்ப வருவாங்க சொல்லு.''



• விஜி நாகேஸ்வரன்

**நூறு ஓவியர்கள்! முந்நூறு ஓவியங்கள்!**

**'பதினைந்து ரூபாய்க்கு ஓவியம் கிடைக்குமா?' என்று கேள்வி கேட்டால், 'யெஸ், கிடைக்கும். அழகான ஓவியம்' என்று ஜ-ஹான் தமிழில் பதில் சொல்கிறார் சென்னை மியூசிக் அகாதமி அருகிலுள்ள வின்யாசா ஆர்ட் காலரியின் விஜி நாகேஸ்வரன்.**

ஓவியர்கள் அச்சுதன், ஆதிமூலம், சேனாதிபதி எம்.எஃப். உசேன், கோபிநாத், மறைந்த ஓவியர் விட்டல் உள்ளிட்ட சிறந்த நூறு இந்திய ஓவியர்களின் ஓவியக் கண்காட்சியை இங்கு நடத்தும் இவர் "ஓவியம்னா அது குறிப்பிட்ட சிலருக்கு மட்டுமல்ல; எல்லாருக்குமானதுதான். அதனாலதான் யாரும் நம்ப முடியாத குறைந்த விலையில் ஓவியங்களை விற்பது என்று தீர்மானித்தோம்'' என்கிறார். ஜூன் 10ம் தேதி வரை நடக்கும் இந்தக் கண்காட்சியில் இருக்கும் பல எக்ஸ்பரிமெண்ட் ஓவியங்கள் ஈர்க்கின்றன.

## இது மண்வாசனை

லலித்கலா அகாடமியில் கடந்த 2ம் தேதியிலிருந்து ஆறாம்தேதி வரை நடந்த ஓவியக் கண்காட்சிதான் ஓவியர் திருநாவுக்கரசுக்குப் பிள்ளையார் சுழி!

கும்பகோணம் ஓவியக் கல்லூரியில் எம்.எஃப்.ஏ முடித்திருக்கும் இவரின் ஓவியங்கள்



ஓவியர் ஆதிமூலத்துடன் திருநாவுக்கரசு

அனைத்தும் கிராமத்துப் பின்னணி கொண்டவை.

"கிராமம்தான் ஊற ஊற வரும் கேணி. இதுல நிறைய விஷயம் இருக்கு. மாட்டு வண்டி, ஆலமரத்து நிழல், பனை மரம், மண் சுமக்கும் தொழிலாளி, இடிந்த குடிசை... இப்படி ஒவ்வொண்ணுலயும் எதையோ நான் தேடறேன். இன்னும் ஆழமா பார்க்கிறேன். நானும் கிராமத்தான்ங்கறதாலயோ என்னமோ இந்தத் தீம் என்னை அதிகம் பாதிச்சிருக்கலாம்'' என்கிறார் திருநாவுக்கரசு. தேடல்தானே வாழ்க்கை!

–ஏக்நாத்
படங்கள்: ஜரில்

---

"வெள்ளை நிறச் சேலையில் பச்சை குறுக்குக் கோடுகள் போட்ட கதர்ப் புடைவை." சட்டென்று தான் ஏன் அப்படிச் சொன்னோம் என்பது சுவாதிக்கே விளங்கவில்லை.

"எனக்கென்னவோ அவங்க ஆகாயநீல கலர்ப் புடைவையைத்தான் கட்டியிருப்பாங்கன்னு தோணுது. சரி, கழுத்திலே என்ன போட்டிருப்பாங்க சொல்லு பார்க்கலாம்."

கோமளா ஆன்ட்டியின் கடையில் தான் பார்த்த அம்மாவின் புகைப்படம் ஞாபகத்துக்கு வந்தது. "மெல்லிய சங்கிலி" என்றாள்.

"ஊஹூம். டாலர் வச்ச ரெட்டை வட சங்கிலிதான் போட்டிருப்பாங்க. சரி, ஒற்றை ஜடையா இல்லே கொண்டை போட்டிருப்பாங்களா?"

"ஒற்றை ஜடைதான். தலையில் சின்னதாக ஒரு மல்லிகைப்பூச்சரக் கின்னல்" என்றாள் சுவாதி பரவசத்துடன்.

"அடேடே, கேட்காததையெல்லாம் கூடச் சொல்றியே, அப்படிப் போடு" என்று சங்கீதா புன்னகைத்தபோதே, இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த ராஜ்குமார் "விட் அடிக்கிறேன் பேர்வழி என்று விஷயத்தைக் கோட்டை விடுகிறாயே சங்கீதா'' என்று கடிந்து கொண்டார். பிறகு சுவாதியைத் தன் அறைக்கு ஒரு நிமிடம் வந்து போகச் சொன்னார்.

சுவாதிக்கு மனமில்லை. இங்கிருந்தே பால்கனி வழியாகப் பார்த்தால் அம்மாவை ஒரு நிமிடம் முன்னதாகவே பார்க்கலாம். ராஜ்குமாரின் அறைக்குள் போனால் அந்த தரிசனம் கொஞ்சம் தாமதம் ஆகும். இருந்தாலும் வேறுவழியின்றி உள்ளே போனாள்.

"ஒரு சின்ன வேண்டுகோள் சுவாதி'' என்றவாறு தயங்கினார்.

"சொல்லுங்க சார்."

"உன் அம்மா வந்தவுடன் உணர்ச்சிப் பெருக்கிலே உங்கப்பா இறந்த விவரத்தை உடனடியாகச் சொல்லிடாதே. முதலிலே உன்னைப் பார்த்த ஆனந்த அதிர்ச்சியிலேயிருந்து அவள் மனம் சமநிலைக்கு வரட்டும். அப்புறம் மீதி விஷயங்களை சொல்லிக் கொள்ளலாம்'' என்றார் பார்வையைச் சற்றே தழைத்தபடி.

நியாயம்தான் என்று தோன்றியது சுவாதிக்கு. அதற்குப் பிறகு ஒரு நிமிடம் கூடத் தாமதிக்காமல் வேகமாக பால்கனிக்குச் சென்றாள்.

சில நிமிடங்கள்தான். வாசலில் ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து ஐந்து பெண்மணிகள் இறங்கினார்கள். யார்? இவர்களில் யார் என் அம்மா? வெள்ளையில் பச்சைக் கோடுகள் போட்ட புடைவையும், கொண்டைத் தலையும், தோளில் சிறு பையுமாக இறங்கி அதுவரை எதிர்ப்புறமாகத் திரும்பிக் கொண்டிருந்த அந்தப் பெண்மணி இவள் புறமாகத் திரும்ப சுவாதிக்குக் கண்களில் நீர் கரைபுரண்டு விழத் தொடங்கியது.

சங்கீதாவின் தோளில் சாய்ந்து கொண்டு விம்மி அழத் தொடங்கினாள் சுவாதி.

(தொடர்ந்து பறக்கும்)



# 'ஜெ' பேரவை தொண்டு நிறுவனமாகச் செயல்படுமாமே?

● க. பூங்கொடி, சித்தோடு
*? காங்கிரஸ் - த.மா.கா ஆதரவு இல்லாமல் யாரும் ஆட்சி அமைக்க முடியாது என திண்டிவனம் ராமமூர்த்தி கூறியுள்ளாரே?*
! இவர் 'பஞ்ச்' பண்ணலாம்; ஆனால் கூட்டணி ஆட்சியெல்லாம் காங்கிரஸ் - த.மா.காவின் பகல் கனவுதான் என்று அந்த அம்மா 'நாக் அவுட்' கொடுத்து விட்டாரே!

● ச. பாரதிராஜா, குரும்பகரம்.
*? பெரியார் அணை பிரச்னை, காவிரி பிரச்னை, கிருஷ்ணா நீர்ப் பிரச்னை - இப்படி அண்டை மாநிலங்கள் மூலம் தண்ணீர்ப் பிரச்னை தமிழகத்தைத் தொடர்ந்து கொண்டிருப்பது பற்றி...?*
! என்ன பண்றது சாரே! மேற்கு நோக்கி ஓடுகிற நதிங்க தமிழ்நாட்டில் இல்லியே!

● சி. மகேஷ்,
சென்னை - 26 ☐
*? சினிமா விளம்பரங்கள் போல் பத்திரிகைகளில் சின்னத்திரை சீரியல்கள் தொடர்பான விளம்பரங்கள் வருவது பற்றி என்ன சொல்ல விரும்புகிறீர்கள்?*
! ப்ரிண்ட் மீடியாவின் வலிமையை நிரூபிக்கும் சிறந்த அறிகுறி.

● எம். அசோக்ராஜா,
அரவக்குறிச்சிப்பட்டி.
*? யாழ்...?*
! 'மீட்டும்' சோக கீதம் நெஞ்சைப் பிழிகிறது!

● சக்தி சரவணன், மோகனூர்.
*? அழகிரிக்கு அமெரிக்காவில் நூறு கோடி ரூபாய் சொத்து உள்ளது என சுப்ரமண்ய சுவாமி கூறியிருப்பது பற்றி...?*
! கண்டுக்காம போயிருங்க. ஆதாரம் கேட்டா உங்களுக்குக்கூட ஸ்விஸ் வங்கியில் ஆயிரம் கோடி இருக்குன்னு சொல்லிடுவாரு!

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை - 84
*? தமிழ்நாடு மாதிரி மோசமான காங்கிரஸ் தலைவர்களை என் அரசியல் வாழ்க்கையில் இதுவரை பார்த்தது இல்லை என்கிறாரே குலாம் நபி ஆசாத்?*
! மற்ற மாநிலங்களில் மட்டும் என்ன வாழ்கிறதாம்? மையத் தலைமைக்கே எதிர்ப்பு கிளம்பியுள்ளதே! இத்தனையும் மீறி காங்கிரஸ் சுவாசிப்பது அதன் முன்னோர்கள்

**நீங்கள் கேட்டவை - தராசு**



• உரிமை உண்டு!



• ஆட்சி அலசல்

செய்த புண்ணியத்தால்தான்! – அதாவது மறைந்த தலைவர்கள் ஆற்றிய தேசத் தொண்டுக்காக.

● எம். சம்பத், வேலாயுதம்பாளையம்.

*? ஏழை – எளியவர்களின் துயர் துடைக்கும் தொண்டு நிறுவனமாக ஜெயலலிதா பேரவை செயல்படும் என்று டி.டி.வி. தினகரன் கூறியுள்ளாரே?*

! கூறினால் என்ன தப்பு? அவருக்கு மட்டும் ஜோக்கடிக்கும் உரிமை இல்லையா என்ன...!

● வி. சிவா, மதுரை.

*? வருடா வருடம் பிளஸ் டூ, பத்தாம் வகுப்பு விடைத்தாள் திருத்தும் நேரத்தில் ஆசிரியர்கள் ஸ்டிரைக் செய்து வருவது பற்றி?*

! 'பாட்டில்நெக்' எனப்படும் இக்கட்டான சந்தர்ப்பத்தில் போராடினால்தான் கோரிக்கைகள் கவனிக்கப்படுமாம்!

● இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

*? கிருஷ்ணா நீர் வந்துவிட்டது போலிருக்கிறதே?*

! வழிப்பறியானது; வறண்ட நிலம் உறிஞ்சிக் கொண்டது; நீராவியானது; உடைப்பெடுத்துப் போனது; எல்லாம் போக இரண்டு குடமாவது நமக்கு மிஞ்சினால் சரி!

● எம். டி. ரவிகாந்த், காஞ்சிபுரம் – 1

*? விடுதலைப் புலிகளுக்கு ஆதரவளிக்கும் போஸ்டர்கள் சென்னையில் பல இடங்களில் ஒட்டப்படுவது குறித்து...?*

! முதல்வருக்கும் பிரதமருக்கும் ஆதரவு தரும் சில அரசியல் தலைவர்களின் பகிரங்க ஈழ ஆதரவுப் பிரகடனங்கள் தரும் தைரியமே காரணம்!

● கே. வி. ராமன், சென்னை – 73.

*? கம்ப்யூட்டரில் காதல் வைரசால் 'பல கோடிகள் இழப்பாமே?*

! இப்படியொரு கூத்தடித்த பிலிபைன்ஸ் நாட்டு இளைஞர், குறைந்தபட்சம் காதல் என்ற சொல்லை இழிவு படுத்தாமலிருந்திருக்கலாம்.

● தேவந்தி துரைராஜ், திருவண்ணாமலை.

*? நாளும் பெருகி வரும் பல்துறைப் போராட்டங்களின் பின்னணி என்ன?*

! நெருங்கும் தேர்தல்கள்.

● எஸ். ரஜினிப்பிரியன், ஈரோடு.

*? நாலு வருட தி.மு.க. ஆட்சிக்குத் தராசு வழங்கும் தீர்ப்பு good-ஆ? Very good-ஆ? அல்லது not bad-ஆ?*

! தொழில்துறை முன்னேற்றம் – very good; மாநில நிர்வாகம் – good; பிரச்னை சமாளிப்பு – not bad; உள்ளாட்சி நிர்வாகம்... வேண்டாமே!

● கே. ரமேஷ், பள்ளிபாளையம்.

*? இதயத்தைக் கரைக்கக்கூடிய தேன் மதுர சங்கீதம் கர்னாடக இசையில் மட்டுமே சாத்தியமாவது எப்படி....?*

! அதில் எப்போதுமே ஆன்மத் தேடல் இணைந்திருப்பதால்.

● கே.பி. மகேந்திரன், நல்லிபாளையம்

*? சமீபத்தில் திரைப்படங்கள் சமுதாயத்துக்கு என்னதான் சொல்கின்றன?*

! சமுதாய மேம்பாட்டு சமாசாரங்களை எங்களிடம் எதிர்பார்க்காதீர்கள் என்றுதான்!

● ப. இராம் முருகன், சிவகங்கை

*? மன்சூர் அலிகான், ராதாரவி, எஸ்.எஸ். சந்திரன் – இவர்கள் அரசியலில் இருப்பதால் யாருக்கு என்ன லாபம்?*

! அவரவர் கட்சிக்கு அறிக்கைகள்; பத்திரிகைகளுக்கு side lights; வாசகர்களுக்குக் கேள்வி கேட்க வாய்ப்பு!

● ஷ்யாமளா சுவாமிநாதன், திருவனந்தபுரம் – 8 ✱

*? அரசியல்வாதிகள் தாதாக்கள் பலத்தில் வாழ்கிறார்கள். தாதாக்கள் யார் பலத்தில் வளைய வருகிறார்கள்?*

! அரசியல்வாதிகள் செய்யும் தவறுகளின் பலத்தில்.

☐ ரூ. 50 பரிசு பெறுபவர்:
சி. மகேஷ்,
'கேன் ஜோதி'
155/1பி, மேற்கு சிவன் கோயில் தெரு,
வடபழனி,
சென்னை – 26

✱ ரூ. 25 பரிசு பெறுபவர்
ஷ்யாமளா சுவாமிநாதன்
42/902 (5) செப்பில் தெரு,
ஸ்ரீவராஹம்,
வல்லக்கடவு அஞ்சல்
திருவனந்தபுரம் 695 008

**தங்கச்சங்கிலி பரிசு!**

**இத் தொடர்கதையை வாரம் ஒரு எழுத்தாளர் என்று பத்து எழுத்தாளர்கள் எழுதுகிறார்கள். கவனமாகப் படித்து வாருங்கள். கடைசி வாரத்தில் ஒரு கேள்வி உங்களுக்காகவே தயாராக இருக்கிறது. சரியாக பதிலளிப்பவர்களுக்குப் பரிசாகக் காத்திருக்கிறது தங்கச் சங்கிலி! பலர் சரியாக எழுதியிருந்தால் குலுக்கலில் ஒருவர்! பரிசளிப்பு விஷயத்தில் ஆசிரியர் தீர்ப்பே இறுதி.**



அறைக்குள் நுழைந்தான் அசோக். கோவிந்து கண்டு கொள்ளவில்லை. இப்போதெல்லாம் கோவிந்து முகத்தில் பெருத்த மாறுதல். சதா உம்மென்ற முகம். ஆர்ட் பட நாயகன் போல் விட்டத்தை வெறிக்கிறான். மணிரத்னம் சினி பாத்திரம் போல் 'உம். ஆம்ம்' என்று ஒற்றை வார்த்தைப் பதில். டீ.வி மெகா சீரியல் போல் நெடியப் பெரு மூச்சுகளாக விடுகிறான். இப்போதும் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டிருந்தான்.

"ஏன் கோவிந்து பேசலை?"

"பரவாயில்லையே. என் பேரை கூட ஞாபகம் வெச்சிருக்கே."

"யெப்பா! என்ன கோபம்! உன் பேர் இனி கோவிந்து இல்லை. கோபிந்து. சரி. ஏண்டா கோவிந்து லேட்டு?"

"எனக்கும் வேலை இருக்குப்பா!" நிறுத்திய அவன் முகத்தில் ஒரு வெறுமைச் சிரிப்பு. "ஆனா உருப்படியான வேலை!"

அன்புச்செல்வியின் காதல் தனக்குக் கிடைத்ததில் இவனுக்குப் பொறாமையா? கோவிந்துதான் கமுக்கமான வில்லனா? ஆனால் ஆத்தா சத்தியமாக மறுக்கிறானே? இவன் பேரில் தவறு எதுவும் இல்லை எனில், அனாவசியமாக நல்ல நட்பைக் கெடுத்து விடக் கூடாது. கோவிந்து படு அழுத்தக்காரன்தான். அதில் சந்தேகமில்லை.

"நேத்து ஒரு கதை படிச்சேன். அதுலயும் ஒரு மொட்டைக் கடுதாசியால, ஆபீஸ் பாத்ரூம்ல எழுதினக் கிறுக்கலால ரெண்டு பேரு லைஃபே திசை திரும்பி ஸ்பாயில் ஆவுது. இந்த மாதிரி அக்கிரமமான வக்கரத்தைப் பத்தி நீ என்னடா நினைக்கறே?"

வேண்டுமென்றே திடீரென்று கேட்டு விட்டுக் கோவிந்தை உற்றுப் பார்த்தான்.

"இதெல்லாம் கத்தக் கோழைத்தனம்!" என்று சட்டென்று சொன்ன கோவிந்துவின் முகம் சாதாரணமாகத்தான் இருந்தது. எமகாதகன், நடிக்கிறானா?

மறுநாள் காலை. கோவிந்து கல்லூரிக்குக் கிளம்பத் தயாராகி விட்டான். அசோக் கட்டிலில் படுத்திருந்தான்.



ஆர். வெங்கடேஷ்

# 6

"ஏண்டா அசோக் இளாகக்குக் இளம் பலையா?"

''வயிறு அப்செட்!'' – பொய் அவிழ்த்தான் அசோக்.

''முடிஞ்சா மதியம் வர்றேண்டா.''

கோவிந்து புறப்பட்டுச் சென்ற ஐந்தாம் நிமிடம் அசோக் எழுந்து கொண்டான். அறையில் தேடத் தொடங்கினான். மொட்டைக் கடிதத்திற்கு ஆதாரம் ஏதும் சிக்குமா? ஜெராக்ஸ் பிரதி எடுத்ததற்கு பில் எதுவும் இருக்குமா? எதையும் கலைக்காமல் ஜாக்கிரதையாகத் தேடினான்.

அலமாரியில், மேசை டிராயரில் எதுவும் கிடைக்கவில்லை. ஒவ்வொரு நோட்டுப் புத்தகத்தின் தலையிலும் 'மடோனா! ஐ லவ் யூ!' என்று எழுதியிருந்தான். அசோக் முறுவலித்தான். ஆங்காங்கே சித்திரங்கள். கடுகடுவென வரைந்திருந்த முகத்தின் கீழ் 'புரபசர், மிக மகிழ்ச்சியான தருணத்தில்!' என்று எழுதியிருந்தான். இதுவரை சந்தேகப்படும்படி எதுவும் சிக்கவில்லை. கடைசியாக ஒரு நோட்டுப் புத்தகம் எதுவுமே எழுதப்படாமல் இருந்தது. அசுவாரசியமுடன் திரும்ப முதல் பக்கம் வந்தான். ஹலோ, இது என்ன?

முதல் பக்கத்தில் ஏதோ எழுத்துக்களின் பதிவு தென்பட்டது. அது என்ன? அந்தத் தாளுக்கு முன்தாளும் இருந்திருக்க வேண்டும். அது கிழிக்கப்பட்ட அடையாளப் பிசிறும் தெரிந்தது. அசோக் பர்பரப்பானான்.



ஒரு பென்சில் எடுத்துத் தரை மீது வைத்துத் தேய்த்தான். கிடைத்த கிராஃபைட் கருமையைத் தன் ஆட்காட்டி விரலில் ஏற்றிக் கொண்டான். விரலால் அந்தப் புத்தகத் தாளில் கவனமுடன் மெல்லத் தடவினான். ஆரம்ப எழுத்துக்கள் பளிச்சென்று உதயமாகின. அசோக் திடுக்கிட்டான். அதில் –

'ஏமாளித் தகப்பனார்களே! உஷார்! பேரிளம் பேரழகி அன்புச் செல்வியும், கூடலூர் அசோக்கும் கூடிக் காதல் பாடம் படிக்கிறார்கள்...'

மேலும் தடவ, கடிதம் தொடர்ந்தது. அடே பாவி! கோவிந்து! கடைசியில் நீதான் அந்த மொட்டைக் கடித மகனா?

# அருள்வாக்கு

**சா**ஸ்த்ர கர்மா என்று ஹோன்கள் வகுத்துக் கொடுத்திருப்பவை இரண்டு விதத்தில் நல்லது பண்ணுகின்றன. மற்ற காரியங்கள் அவசியமற்றதிலோ, தப்பான திலோகூட மனஸை நிறுத்துகின்றனவென்றால், சாஸ்த்ர கர்மா எண்ணங்களில் நல்லவை யானவற்றிலேயே மனஸ் போகும்படிச் செய்கின்றன. இது ஒன்று. கெட்டவையான எல்லாவற்றிலிருந்தும் அவை மனஸைத் திருப்பி விடுகின்றன. இது இரண்டாவது நன்மை.

கார்யத்திலேயே கண் என்கிறபோது மனஸ் இரண்டாம் பக்ஷமாகிறது. ஆனாலும் மனஸுக்கும் இப்படிக் கார்யத்தினால் நன்மை உண்டாகிறது. நம்மளவிலே நமக்கு என்ன தெரிகிறதென்றால், ஒரு ஸத்கார்யத்திலே நாம் ஈடுபட்டிருக்கிறபோது அது எந்த அளவுக்கு நம்மை ஸச்சிந்தனையில் செலுத்தினாலும் ஸரி, அல்லது செலுத்தாமலே போனாலும் ஸரி, நிச்சயமாக நம்மைக் கெட்ட நினைப்பு **நினைக்கவொட்டாமலும்**, அதைவிட ஸர்வ நிச்சயமாக, கெட்ட கார்யம் **செய்யவொட்டாமலும்** தடுத்துப் பெரிய உபகாரம் பண்ணுகின்றன.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திர சேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**




**(வைகாசி அனுஷம் (19.5.2000) காஞ்சி மகா பெரியவர் ஜெயந்தியையொட்டி இவ்விதழுடன் 'எந்நேரமும் உன் சந்நிதியில்' என்ற இணைப்புப் புத்தகம் வழங்கப்படுகிறது.)**

ச்சே! 'நண்பன்' கோவிந்து இவ்வளவு கீழ்த்தரமானவனா?

அந்த எழுத்துக்களை ஆழ்ந்து ஆராய்ந்தான். இது, அதே மொட்டைக் கடிதம்தான். ஆனால், இது கோவிந்துவின் கையெழுத்தில்லை. வேறு எவரையாவது விட்டு எழுதச் சொல்லியிருப்பானா? இருக்காது.

அல்லது, வேறு எவனாவது வந்து கோவிந்துவின் நோட் புக்கைப் பயன்படுத்தியிருப்பானா? யார் அந்த வில்லன்? கோவிந்து வில்லனா? அப்பாவியா? அசோக் குழம்பினான். அந்தப் புத்தகத்தைப் பத்திரப்படுத்திக் கொண்டான்.

**ம**திய வகுப்பு ஓய்ந்ததும் ஓடி வந்தான் அசோக். பரபரப்பாகக் குளித்தான். இந்நேரம் அன்பு என்ன செய்வாள்? பவுடர் பூசினான். கிளம்பியிருப்பாளா? மாலை அவளைப் பார்க்கில் பார்க்க, பகல் முழுவதும் இனிய ஏக்கம். பரவசமுடன் கிளம்பிய அசோக் ஷாக்கானான்! எதிரே சோமன். அன்புச்செல்வியின் மக்கு மாமன் கையில் நோட்டுப் புத்தகங்கள்!

"உன்னைப் பார்க்கத்தான் வந்தேன் அசோக்."

"எ... என்ன விஷயம்?"

"லெசன்ஸ்ல சந்தேகம். சொல்லித் தர்றியா அசோக்?"

நெட்டையன் நல்ல நேரம் பார்த்தான். சோமனுக்குப் பாடத்தில்தான் சந்தேகமா? 'சந்திப்பு' பற்றிச் சந்தேகம் ஏதும் வந்து தாம் புறப்படுவதைத் தடுக்க வந்திருப்பானா?

"சாரி சோமன்! அவசரமா செந்தில்குமரன் நகர் வரை போகணும்!" என்றான் வாய்க்கு வந்தபடி.

"என்னப்பா விஷயம்?"

"ஒன்றுவிட்ட அத்தைக்கு சீரியஸ். உயிரை விட்ட அத்தை ஆகறதுக்குள்ள போய்ப் பார்க்கணும்."

"ஐயோ! உடனே கிளம்புப்பா!" என்றான் சோமன் அப்பாவித்தனமாக.

**பா**ர்க். கவியும் மெகா மேகங்கள்.

"ஏய் அன்பு! இப்ப பளிச்சுனு ஒரு வெளிச்சம் தெரியலை?"

"சரி, ஏன் பதறப்படறே?"

"மின்னியது காமரா ஃப்ளாஷா இருந்தா?"

"மைகாட்! நம்ம காதலைக் கெடுக்க, ஊருக்கு அனுப்ப இன்னொரு ஆதாரம் சிக்கிடும்!"

"காமரான்னு உறுதியாகவும் சொல்ல முடியாது. மேல பார். மேகம். மின்னலா இருக்கலாம். என் மனப் பிரமையா இருக்கலாம்."

"பக் பக்னு இருக்கு. நாளை வேற இடத்துல



**கலங்கும் (தொழிற் சங்க) காங்கிரஸ்!**

**இந்திய தேசிய தொழிற்சங்க காங்கிரஸான ஐ.என்.டி.யு.சி.யில் புயல் வீசிக் கொண்டிருக்கிறது. இதன் தமிழ்நாட்டுக் கிளையின் தலைவராக இருப்பவர் டி.எல். கப்பையா. கோர்ட் உத்தரவுப்படி தேர்தல் நடத்தி தலைவரைத் தேர்ந்தெடுக்க இருக்கிறார்கள். தொடக்க காலத்திலிருந்தே இந்தத் தொழிற்சங்கத்தில் ஆதிக்கம் செய்து வரும் வாழப்பாடியார், கப்பையாவை எப்படியும் தூக்கி விடுவது என்று செயல்பட்டுக் கொண்டிருக்கிறார். ஆனால் கப்பையா, புத்திசாலித்தனமாக மூப்பனார் மற்றும் இண்டிவனத்தாரின் ஆதரவைப் பெற்றுவிட, இப்போது போட்டி வாழப்பாடிக்கும் மூப்பனார் + காங்கிரஸுக்கும் என்றாகி விட்டது!**

**— கௌசி**

**படம்: ராஜன்**

சந்திக்கலாம் அசோக். நேரமாச்சு. கிளம்பலாம்."

"இருடா அன்பு. தினப்படி காதல் சம்பிரதாயம் பூர்த்தியாக வேணாமா?"

ஒரு டிரிங்க், இரு ஸ்டிராக்கள் வாங்கினார்கள்.

"இது சிம்பாலிக்கா எதைக் குறிக்குது தெரியுமா? ஈருடல்; ஒரு மனம். ஓர் உயிர்னும் வெச்சுக்கலாம்."

"அட! அட!"

"ஐயோ அன்பு! அங்கே பாரு."

அவன் சுட்டிக் காண்பித்த இடம், பார்க்கின் மற்றொரு மூலை. அங்கே, சுரேஷ் நின்றிருந்தான். அவன் எம்.காம்., முதல் வருடம். புரொபசர் பிச்சைமணியின் மகன். இங்கே என்ன செய்கிறான்? மொட்டைக் கடிதப் பயலுக்காக உளவு பார்க்க வந்திருப்பானோ?

"மொட்டைக் கடுதாசிக்கு மிரண்டு போய்க் காதல்ல பின்வாங்கறமான்னு பார்க்க சுரேஷை அனுப்பியிருப்பானோ?"

"யாருகண்டா... சுரேஷும் தன் காதலிக்காகக் காத்திருக்கிறானோ, என்னவோ..."

இருவரும் கவலையுடன் கிளம்பினர்.

அடுத்த நாள் காலை. அசோக்குக்கு இன்னமும் மூடு சரியாகவில்லை.

கோவிந்து கிளம்பும்போது, "இன்னிக்கும் வரலையாடா?" என்றான்.

"இல்லை!" என்றான். கோவிந்து காரணம் கேட்கவில்லை. அசோக்கும் சொல்லவில்லை. கோவிந்துவுடனான நட்பு எங்கே செல்கிறது...?

அசோக் பெருமூச்சுடன் எழுந்து கொண்டான். அப்பாவுக்குப் பதில் எழுத பேனா எடுத்தான். அதேசமயம் –

அந்த உருவம் சுற்றும் முற்றும் பார்த்தது. பிரதேசம் வெறிச்சோடியிருந்தது. அந்த உருவமும் கல்லூரி வகுப்பை 'கட்' அடித்திருந்தது. நேராக ஹாஸ்டல் குளியலறை நோக்கி நிதானமாக நடந்தது. அந்த உருவத்தின் கையில் ஒரு கரித்துண்டு. அதே சமயம் –

வார்டன், தன் அறை டெலிபோனில் பேசினார்.

"ஹலோ! காண்ட்ராக்டர் சோமுவா? நான் வார்டன் பேசறேன்... ஹாஸ்டல்ல சுண்ணாம்பு அடிக்க உங்க ஆளுங்களை இன்னும் காணோமே... என்ன... இப்ப வருவாங்களா... வந்ததும் முதல்ல குளியலறையிலிருந்து ஆரம்பிக்கட்டும்..." என்று போனை வைத்தார். அதே சமயம் –

அசோக் கடிதம் எழுதத் துவங்கினான்.

'அன்புள்ள அப்பா,

உங்கள் கடிதம் கண்டேன். நான் உங்கள் பிள்ளை. எந்த மூதேவியையும் காதலிக்கவில்லை. தற்சமயம் நான் காதலிப்பது என் காமர்ஸ் படிப்பைத்தான். அதற்கு சாட்சி, நான் வாங்கும் நல்ல மார்க்குகள். மொட்டைக் கடிதங்களை நம்பாதே. சில புத்தகங்கள் அவசரமாகத் தேவை. உடனே முந்நூறு ரூபாய் அனுப்பவும். அம்மாவுக்கு என் அன்பைச் சொல்லவும்.

அடுத்தக் கடிதம் எழுதத் துவங்கினான். இன்றைய காதல் கடிதக் கோட்டா!

'கண்ணே அன்புச் செல்வி.

கலங்காதே. நம்முடையது அமரக் காதல். அமராது நம் காதல். நீ கிரிக்கெட் என்றால், நான் பெட்டிங். நீ அரசியல் என்றால், நான் ஊழல். எந்த வக்கிர மொட்டையனும் நம்மைப் பிரிக்க முடியாது! மீதம், இரவு வரும் கனவில்! ப்ரியமுடன், உன் அசோக். அதே சமயம் –

ஹாஸ்டல் குளியலறைக்குச் சுண்ணாம்பு அடிக்கப்படுவதை வார்டன் பார்த்துக் கொண்டிருந்தார். திருப்தியாக உணர்ந்தார்.

குளியலறையின் உட்பக்கம் சென்று பார்த்த வார்டன் திடுக்கிட்டார். சுவரில் கரித்துண்டு எழுத்துக்களில் –

'அன்புவைக் காதலிக்கும் அசோக் ஒழிக!'

(தொடரும்)

# நடக்குமென்பார்

**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

சோம்பலை விரட்டுங்க. கவனத்தை சிதற விடாதீங்க. பேசும்போது பதட்டம் கூடாது. எடுத்த காரியத்தை இந்த வாரம் முடிச்சிடலாம். வியாபாரிகள், கலைத்துறை, கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ் துறையைச் சேர்ந்தவர்களுக்குத் தடைகள், மந்தநிலை விலகுது. பயணம் வேண்டாம். அலுவலகப் பணியாளர்கள், தொழிலாளர்களுக்குப் பொறுப்பும், உழைப்பும் கூடும். ஆன்மீக ஈடுபாடு அவசியம். பணம் பல வழிகளில் வரும்.

**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

எந்தக் காரியத்தையும் திட்டமிட்டுச் செய்யுங்க. அலட்சியம் தோல்வியில் முடியும். வீண் செலவைத் தவிர்த்துடுங்க. பணம், பொருள் இழப்பு ஏற்படலாம். இயந்திரப் பணியாளர்கள் வேலை நேரத்துல கவனமா இருங்க... புதியவர்கள் உதவுவாங்க. கலைத்துறையினருக்கு லாபம் உண்டு. வெளிநாட்டிலேர்ந்து நல்ல செய்தி வரும். வீடு, நிலம், சொத்துக்கள் வாங்கும் முயற்சி இந்த வாரம் வேண்டாம். வார்த்தையில் நிதானத்தைக் கடைபிடிங்க. கொஞ்சம் மந்தமான வாரம் தான்.

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

பல வகையில வருமானம் வரும். வியாபாரிகளுக்கு லாபம் கூடும். அரசு விவகாரங்களில் வெற்றி கிடைக்கும். அரசுப் பணியாளர்கள், கலைஞர்கள், எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், மருந்து, ரசாயனம் துறையைச் சேர்ந்தவர்களுக்கு ஓஹோன்னு வருமானம் வரும். அரசியல்வாதிகள் மதிப்பு உயரும். வீட்ல சந்தோஷம் பெருகும். கவலைப்படுறதை விடுங்க. பெரியவங்க சொல்றதைக் கேளுங்க. வீட்ல விரைவில் விஷேசம் நடக்கும்.

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

எல்லோரும் போட்டி போட்டுக்கிட்டு உதவுவாங்க. ஆனால் புதிய ஆட்கள்கிட்டே கவனம் தேவை. பத்திரிகை, படைப்பாளர்கள், கலைஞர்களுக்கு வெற்றி மேல் வெற்றி கிடைக்கும். பொதுச்சேவை செய்யறவங்களுக்குப் பாராட்டும் பணமும் சேரும். வியாபாரிகளுக்கு அரசாங்கச் சிக்கல் தீரும். சொத்துக்கள், வாகனம் வாங்க நேரம் வந்துடுச்சி. சந்தோஷத்துல மனைவி, குடும்பத்தைக் கவனிக்க மறந்துடாதீங்க. வார்த்தையில் நிதானமா இருங்க.

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

அரசியல்வாதிகள், நிர்வாகிகள் ஆகியோர்க்குப் புதிய பதவியும் புரோமோஷனும் கிடைக்கும். அரசாங்க விவகாரத்தில் வெற்றி உறுதி. பொறியியல், சட்டம், காவல், இராணுவம், கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக்ஸ், மின்சாரம், கலைத்துறையைச் சேர்ந்தவர்களுக்கு வெற்றிதான். போட்டி, பந்தயம் ஸ்பெகுலேஷன் லாபம் தான். வீட்டிலேயும் மகிழ்ச்சி. எதிர்பாராத செலவு வர வாய்ப்பு இருக்கு.

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

மறதிக்கு இடம் கொடுக்காதீங்க. அரசியல், நிர்வாகம், மருத்துவத்துறையைச் சேர்ந்தவங்க ரொம்ப பொறுப்பா நடந்துக்கணும். செலவு அதிகமா இருக்கும். சிக்கனம் அவசியம். உடம்பைக் கவனிக்க மறந்துடாதீங்க. கொடுக்கல், வாங்கல் போட்டிகளில் எச்சரிக்கை அவசியம். அலுவலகப் பணியாளர்கள், தொழிலாளர்கள் வேலை நேரம் கூடினாலும், பொறுமையைக் காட்டுங்க. இடமாற்றம் வரலாம். நண்பர்கள், வெளிநாட்டு உதவிகள் தெம்பைக் கொடுக்கும்.

**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

வெளிநாட்டுத் தொடர்பு, நண்பர்கள், உறவினர்கள் வகையில ஆதாயம் கிடைக்கும். கூட்டுத் தொழில் வெற்றி தரும். வாகன ஓட்டிகள், பயணம் போறவங்க



மகர ராசிக்காரரான நடிகர் சூர்யாவுக்குப் புதிய வாய்ப்புகள் தேடி வருமாம்.

கவனமா இருக்கணும்... எதிலும் அவசரம் வேணாம். விவாதத்தைத் தவிர்த்துடுங்க. சொத்துக்கள் வாங்கும்போது எச்சரிக்கை அவசியம். மருத்துவ, ரசாயானத் துறையைச் சேர்ந்தவர்களுக்கு நல்லது நடக்கும். சட்டம், போலீஸ், இராணுவம், கலைத்துறையை சேர்ந்தவங்களுக்கு சோதனை வரலாம். பணத்துக்குப் பிரச்னை இருக்காது.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

எடுத்த காரியத்துல வெற்றி தான். அரசாங்க ஆதரவு உண்டு. அலுவலகத்திலும் அனுகூலம் தான்.

# நடக்கும்!

நிர்வாகம், மருத்துவம், எலக்ட்ரானிக்ஸ், கம்ப்யூட்டர், வியாபாரத் துறையைச் சேர்ந்தவங்களுக்கு மேலும் முன்னேற்றம். எதிர்பாராத செலவுகள் வரும். சிக்கனம் அவசியம். வீட்டு நிர்வாகத்திலும் கவனம் தேவை. நண்பர்கள் மூலம் தொல்லைகள் வரும். எச்சரிக்கையாக இருங்க.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

நீண்ட நாள் கனவுகள் நிறைவேறும். மகப்பேறு கைகூடும். பண வரவு திருப்தியா இருக்கும். கலைத்துறையினருக்கு எல்லாம் வெற்றிதான். எதிரிகள் ஓடி ஒளிவாங்க. அரசியல், மருத்துவம், அறிவியல் துறையைச் சேர்ந்தவங்களுக்கும் வெற்றி கிடைக்கும். ஆன்மீகவாதிகளுக்கு அனுகூலம் உண்டு. பதவி உயர்வு, இடமாற்றம், ஊதிய உயர்வு கிடைக்கும். வீடு, மனை வாங்கலாம். குடும்பத்தில் சுபகாரியம் நடக்க நேரம் வந்துடுச்சி.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

நண்பர்கள், உறவினர்கள் உதவி உண்டு. பெண்களுக்கு எந்தக் காரியத்திலும் வெற்றி உண்டு. குடும்பத்தில் சந்தோஷம் பெருகும். வியாபாரம், பொறியியல், சட்டம், பாதுகாப்பு துறையினர் முன்னணிக்கு வருவாங்க. கலைஞர்களுக்குப் புதிய வாய்ப்புகள் தேடி வரும். நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதில் கவனம் தேவை. ஏற்றுமதி செய்றவங்க கவனமா இருக்கணும்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

உழைப்புக்குச் சரியான பலன் கிடைக்கும். வெளிநாட்டுத் தொடர்பு லாபம் தரும். அரசுப் பணியாளர்களுக்கு எதிர்பார்த்த வெற்றி நிச்சயம். அரசியல், கலைத்துறையைச் சேர்ந்தவர்களுக்குத் தடைகள் விலகுது. பெண்களுக்கு மகிழ்ச்சியும், சந்தோஷமும் கூடும். புதிய சொத்துகள், பொருட்கள் சேரும். நவீன தொழில் நுட்பத் துறையைச் சேர்ந்தவங்களுக்குத் திடீர் வியாபார வாய்ப்பு அமையும். பதட்டம் கூடாது. செலவுகள் கூடும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

சாதனைகளைச் சாதாரணமாக செய்யலாம். பல வழிகளில் பண வரவு தாராளமாக இருக்கும். எதிரிகள் விலகி ஓடுவாங்க. போட்டி பந்தயங்களில் வெற்றிதான். வியாபாரம், கலைத்துறையில் உள்ளவங்களுக்குப் புதிய வருமானம் வரும். பணியாளர்களுக்குப் பதவி உயர்வு உறுதி. திருமணம் போன்ற நல்ல காரியங்கள் நடக்கும். வாகனம் வாங்க பொருத்தமான நேரம். ●

## அக்னிசர்மா பக்கம்

# தமிழ் நடிகைகளுக்கு ஹாலிடே?

பாரதிராஜா தேடிக் கொண்டிருந்த 'கடல்பூக்களில்' ஒன்று, இங்கே, அரபிக்கடல் ஓரம் பூத்திருக்கிறது. மும்பையில் மொட்டவிழ்ந்த மலர், சென்னையில் மணம் வீசக் காத்திருக்கிறது. ரோஜா என்றோ ஜாஸ்மின் என்றோ பெயர் இருந்திருக்கலாம் – ரோஜாவின் அழகும், மல்லிகையின் மயக்கும் தன்மையும் ஒருங்கே வாய்த்திருக்கிறதே! – ஆனால் சம்பந்தமில்லாமல், ஆர்த்தி என்றொரு பெயர். திருஷ்டிக்குரியது என்பதால் இருக்குமோ?

எப்படியோ... பாரதிராஜாவின் திருஷ்டி இந்த ஆர்த்தியின் மீது பட்டிருப்பதுதான் நமக்குச் சுவையான விஷயம்! கடல் பூக்களில் தம் மகன் மனோஜுக்கு ஜோடியாக நடிக்க ஒரு புதுமுகத்தைத் தேடிக் கொண்டிருந்



• ஆர்த்தி

திருக்கிறார். அப்போது முன்னோ ஸ்வாமி (அட முனுசாமி தாங்க! ஆர்த்தி தன் கோ-ஆர்டினேட்டரை அப்படித்தான் அழைக்கிறார்) ஆர்த்தியின் படங்களை அவர் முன் வைக்க, உடனே இவர் அழைக்கப்பட்டிருக்கிறார்.

"பாரதிராஜா சும்மா என்னைப் பார்க்க விரும்புவதாகத்தான் சொன்னார்கள்; முதலில் ஒரு ஃபோட்டோ ஸெஷன்; ரொம்ப 'லைட்'டான (பேஸ் & லிப்ஸ்டிக் மட்டும்) மேக்கப்புடன், ஒரு மீனவப் பெண் வேடத்தில் படங்கள் எடுத்தார்கள்; பாரதிராஜா ஒரு சின்ன மூக்குத்தியைப் போட்டுக் கொண்டு வரச் சொன்னார். என்னை மூக்குத்தியில் பார்த்ததும் அசந்துவிட்டார். 'நீதான் கதாநாயகி; ஃபோட்டோக்களை அப்புறம் பார்த்துக் கொள்கிறேன்' என்று சொல்லி விட்டார்," என்று, தம் கம்பாலா ஹில் ஃப்ளாட்டில் உட்கார்ந்து நினைவுகளில் மலர்ந்த ஆர்த்தி, "ஹி இஸ் எ வெரி ஸ்வீட் மேன்! எவ்வளவு பெத்த பெயர் அவருக்கு; ஆனாலும் ரொம்ப அன்போடு இனிமையாகப் பழகுகிறார்" என புளகாங்கிக்கிறார்.

இது முதல்தமிழ்ப்படம், இதற்கு முன் 'Aid for Aids' என்றொரு, ரிலீசாகாத தெலுங்குப் படம் (கமர்ஷியல்அல்ல) செய்திருக்கிறாராம்.

உண்மையில் பார்ப்பதற்குச் சின்னப் பொண்ணாகத் தெரிந்தாலும், ஸ்வீட் ஸிக்ஸ்டீனைத் தாண்டி ஒன்றரை வருடங்கள் ஆகி விட்டனவாம். 'ப்ளஸ் டூ முடித்த உடன் இந்த ஆஃபர் வந்தது. அதற்காகப் படிப்பை விட்டுவிடப் போவதில்லை; எப்படியாவது பி.காம் முடிக்கப் போகிறேன்; என்னைப் படிக்காத முண்டம் என்று யாரும் நினைக்கக் கூடாதே'' என கவலைப்படுகிறார்.

சினிமா என்பது இவர் வாழ்வில் திடீரென்று நிகழ்ந்த அற்புதமெல்லாமில்லை; பிறந்த நாள் முதலே நடிகையாக வேண்டும் என்ற ஜெபம்தானாம்! அதாவது eat நடிப்பு – talk நடிப்பு – sleep நடிப்பு ரகம். மூச்சுள்ளவரை நடிகையாகவே வாழ்வாராம்.

ஹாங்... சொல்ல மறந்து விட்டோமே... அம்மணி நிறைய விளம்பரப் படங்களில் நடித்திருக்கிறார். குட்டிப் பாப்பாவாக ஃபாரெக்ஸ் விளம்பரத்தில் ஆரம்பித்து,





• முனுசாமி

பெப்ஸோ டெண்ட் (அக்கா தம்பி சண்டை நினைவில்லை?) ஆல் க்ளியர் (பரு எங்கே போச்சு?) செருப்பு விளம்பரம்... இப்படிப் பல...! 'சாஹத்' என்றொரு ம்யூசிக் வீடியோவும் செய்திருக்கிறார். அது மட்டுமா? ஜெயன்ட்ஸ் இன்டர்நேஷனல் 99, இந்தியா குயின் 2000, மிஸ் இந்தியா வேர்ல்டு வைட் 2000 – எல்லாவற்றிலும் அழகு ராணியாக மகுடம் சூட்டிக் கொண்டிருக்கிறார்.

கடைசி நிகழ்ச்சியை டி.வி.யில் பார்த்தவர்களால் அந்த 'த்ரில்'லை மறக்க முடியாது. உலகெங்கிலுமிருந்து (NRI) மிஸ் இண்டியாக்கள் (Miss India - Canada, Miss India U.S.A. இப்படி) கலந்து கொண்ட இப்போட்டியில், வெற்றி Miss India - Indiaவுக்கே என்ற தீர்ப்பு சிலிர்ப்பையே ஏற்படுத்தி விட்டது. ஆர்த்தி அதில் அழகு தேவதையாகக் காட்சி தந்து, ஜூஹி சாவ்லாவைப் போல் நடுக்கத்துடன் பேசிக் காட்டி, மிலெனிய மங்கையின் குணங்களை விவரித்து, பரிசைத் தட்டிச் சென்றார்.

அப்பா, டாக்டர் அஷோக் சாப்ரியா (இவரே மாடல் போல் தானிருக்கிறார்) ஒரு பல் வைத்தியர். அம்மா, தன் நடிப்புக் கனவுகளைப் பெண் வாயிலாக நிறைவேற்றிக் கொண்ட சராசரி பெண்மணி. அப்புறம் படு சுட்டாய் ஒரு தம்பி, அபிஷேக்! 11 வயதில், இவன் விளம்பர உலகையே கலக்கிக் கொண்டிருக்கிறான். (லேட்டஸ்ட் பெப்ஸோ டெண்ட் விளம்பரம் பார்த்தீர்களா?)

"நான் ரொம்ப frank; அதுதான் என் பலவீனம்; "தன்னம்பிக்கை"தான் என் பெரிய பலம்" என்கிறார் ஆர்த்தி, புத்துணர்ச்சியுடன். நடிப்புத் தவிர நாட்டியம் பாட்மிண்டன் (மாட்ச் ஃபிக்ஸிங் ஊழலுக்கு முன்பே கிரிக்கெட்டைத் தியாகித்தவராம்!) நீச்சல், உடற்பயிற்சி எல்லாவற்றுக்கும் நேரம் ஒதுக்குகிறார். உடல் 'ட்ரிம்'மாக இருக்கக் காரணம் "நோ ஜங்க் ஃபுட்" என்கிறார்.

'ஆர்த்திக்கு வாழைப்பழம் முட்டை தவிர, தயிர் அலர்ஜி! சென்னை வெயிலில், தயிரில்லாமல் 'spicy food'ஐ எப்படி சமாளிக்கப் போகிறாளோ' என்ற கவலை இவரின் அம்மாவுக்கு.

"எல்லாம் கன்யாகுமரிக்குச் சென்று, கடலோரம் படப்பிடிப்பில் கலந்து கொண்டால் சிட்டாய்ப் பறந்துவிடும்'' என்கிறார் கடல்பூக்களில் தன் எதிர்காலத்தை எதிர்நோக்கிக் கொண்டு காத்திருக்கும் இந்தக் குமரி! பாரதிராஜாவின் கடல்பூக்கள் பிறிதொரு செம்மீனாகுமா?

ஆர்த்தி குறிப்பிட்டிருக்கும் முனுசாமி, ஏற்கெனவே சிம்ரன், ஜெயாசீல் ஆகியோரைத் தமிழ் சினிமாவுக்கு அறிமுகம் செய்து வைத்தவர். "பெரும்பாலும் வடக்கே போய் நடிகைகளை தேடிக்கொண்டு வருகிறார்களே... தமிழ் நடிகைகளுக்கு ஹாலிடே கொடுத்து விடவா?" என்று முன்னோ ஸ்வாமி... ஸாரி முனுசாமியிடம் கேட்டோம்.

"தமிழ்ப் பொண்ணுங்க சினிமாவிலே நடிக்கிறதை கௌரவக் குறைச்சலா நினைக்கிறாங்க. இப்போதான் நிலைமை மாறி வருது. மாடலிங், டி.வி காம்ஹியர்னு கொஞ்சம் ஒத்துக்க ஆரம்பிச்சுருக்காங்க. அதே மாதிரி, இங்கேயிருந்து பாலிவுட் போய் ஜெயிக்கிற ஹீரோயின்களும் இருக்கத்தானே செய்றாங்க. இதையெல்லாம் தாண்டி, அதிர்ஷ்டம், திறமைன்னு தமிழ் சினிமாவுக்குத் தகுதிகள் வெச்சுருக்காங்க. அதுல மும்பை பொண்ணுங்க சுலபமா ஜெயிச்சுடுறாங்கன்னு சொல்லலாம் – என்கிறார் சிரித்துக் கொண்டே!"

மும்பையிலிருந்து: **ஜெயஸ்ரீ ராஜ்**

"உடனடியாக வீடு கட்டவோ அல்லது விரைவான முதலீட்டு லாபமோ"
எப்படியானாலும் இது ஒரு புத்திசாலித்தனமான முதலீடு.

# சிறந்த வீட்டு மனைகள் நியாயமான விலையில்

## சிந்து நகர், சென்னை-600 056.

(சவீதா டெண்டல் காலேஜ் அருகில்) CMDA அப்ருவ்டு மனைகள் நே. 65/99

- அமைந்துள்ள இடம் ✔
- மாநகருக்கு மிக் அருகில் ✔
- பாதுகாப்பு ✔
- முதலீடு செய்யும் பணத்துக்கு தகுந்த மதிப்பு ✔
- வேகமாக உயரும் நில மதிப்பு ✔



### சிறப்பு அம்சங்கள்

● உடனே வீடு கட்டலாம் / அருகில் வீடுகள். ● கோயம்பேட்டிலிருந்து 10 நிமிட பயணம். ● அண்ணா நகரிலிருந்து 15 நிமிட பயணம். ● சுலபமான மூன்று வழிப் பாதைகள். கிண்டி, செயிண்ட்தாமஸ் மவுண்ட் போரூர் 100 அடி சாலை. அரும்பாக்கம், கோயம்பேடு, மதுரவாயில் 100 அடி சாலை / அம்பத்தூர், ஆவடி 60 அடி சாலை. ● சென்னை-பெங்களூர் (NH4) தேசிய நெடுஞ்சாலை. ● கோயம்பேட்டில் அமைந்துவரும் பிரம்மாண்ட பஸ் நிலையம். ● தாம்பரம்-வானகரம் புறவழிச் சாலை. ● மாநகரின் அனைத்து பகுதிகளுக்கும் தாராளமான பஸ் வசதி. ● மெடிக்கல், டெண்டல், இஞ்சினியரிங், கேட்டரிங் ஆர்ட்ஸ் கல்லூரிகள் மிக அருகில். ● சுவையான / மிருதியான நிலத்தடிநீர். ● சுத்தமான பத்திரம் / நம்பகமான நிறுவனம். ● உடனடி பத்திரப் பதிவு.

### BLBயின் உறுதி செய்யப்பட்ட சேவை. (விற்பனைக்கு பின்)

● 5 வருடங்களுக்கு மனை பாதுகாப்பு சேவை. ● பத்திரப் பதிவுக்கு பின் தனிப் பட்டா ஏற்பாடு (பட்டா செலவு தனி.) ● வீடு கட்டும் பட்சத்தில் BLB மூலமாக கட்டுமானப் பணி ஏற்பு. ● வீடு கட்ட கடன் வசதி ஏற்பாடு.

**தவணை முறை கிடையாது**

**மனையை பார்வையிட இலவச வாகன வசதி தினமும்**
**காலை 7.00 மணி 11 மணி மாலை 3.00 மணி**

**Tel : 435 7721 / 31 / 61 / 81. Telefax : 4353183 Cell : 98400 44018**

## BLB Estates (P) Ltd.

S-3, "Ramana Flats", Rathna Nagar, Off : Anna Salai,
**Teynampet, Chennai - 600 018.**
(Behind Apollo Cancer Hospital)

BLB PLEDGED TO ETHICS

**வர்த்தகத்தில் நேர்மை; பணியில் பொறுப்பு**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2000

படைப்பாளிகளே, வாசக எழுத்தாளர்களே! நீங்கள் அனைவரும் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சிறுகதைப் போட்டி வந்தே விட்டது!

| | | |
|---|---|---|
| **முதல் பரிசு** | – | ரூ. 5000 |
| **இரண்டாம் பரிசு** | – | ரூ. 3000 |
| **மூன்றாம் பரிசு** | – | ரூ. 2000 |



தவிர, பிரசுரத்துக்குத் தேர்வாகும் ஒவ்வொரு கதையும் ரூ. 500 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர் எனில், வழக்கம் போல் போனஸ் உண்டு!

***விதிமுறைகள் :***

- சரித்திரம், சமூகம், மர்மம், நகைச்சுவை என எப்படிப்பட்ட கதையாகவும் இருக்கலாம். கதை உங்கள் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும்; அவ்வளவுதான்!
- கல்கியில் 4 பக்கங்களுக்கு மிகாமல் இருப்பது நல்லது.
- சொந்தக் கற்பனைதான் என்பதற்கு உறுதிமொழிக் கடிதம் வேண்டும். அது இல்லாத கதைகள் பரிசீலிக்கப்பட மாட்டா.
- அறிமுக எழுத்தாளர் எனில், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லையென்றும் போட்டி முடிவு வெளியாகும் வரை எழுதுவதில்லை என்றும் உறுதி மொழி தர வேண்டும்.
- முழு வெள்ளைத் தாளில் ஒரு பக்கத்தில் மட்டுமே எழுத வேண்டும்.
- தேர்வாகாத கதைகளைத் திரும்பப் பெற, போதிய தபால் தலைகள் ஒட்டிய அஞ்சல் உறை இணைக்கப்பட வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- பரிசுக்குரிய கதைகளை நடுவர்குழு பரிசீலித்துத் தேர்ந்தெடுக்கும். சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே இறுதி.
- முடிவு வெளியாகும் வரை, எவ்வித கடிதப் போக்குவரத்தோ, தொலைபேசி விசாரிப்புகளோ கூடாது.
- **'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி – 2000'** என்று உறையின் மேல் தவறாமல் குறிப்பிட்டு, அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆசிரியர், கல்கி, 47, ஜவாஹர்லால் நேரு சாலை,**
**ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.**

- கதைகள் வந்து சேரக் கடைசித் தேதி : **ஜூன் 15.**
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்ட் 6 ஆண்டு மலரில் வெளியாகும்.

***படைப்பாளிகள், வாசக எழுத்தாளர்கள் அனைவரும் உற்சாகத்துடன் கலந்து கொண்டு சிறப்பிக்க அழைக்கிறோம்.***

— **ஆசிரியர்**

ஸ்ரீ குருப்யோ நம :





காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அனுக்கிரஹத்தாலும், ஆக்ஞையினாலும் ஆதம்பாக்கம் நில மங்கை நகரில் கட்டப்பட்டுள்ள ஸ்ரீ சங்கரகேந்திரம் தற்சமயம் 57 அடி உயரமுள்ள கீர்த்தி ஸ்தம்பத்தையும், 1600 சதுர அடி பரப்புள்ள த்யான மண்டபத்தையும், 1500 சதுர அடி பரப்புள்ள ப்ரவசன மண்டபத்தையும் தன் அகத்தே கொண்டு விளங்குகிறது. கீர்த்தி ஸ்தம்பத்தின் அடித் தளத்தில் ஸ்ரீ காஞ்சி ஆசார்யர்களால் பூஜையில் வைத்து அனுக்கிரஹிக்கப் பெற்ற ஸ்ரீ ஆதிசங்கரரின் சலவைக் கல்லால் ஆன ஸ்ரீ பாதுகைகளும், ஸ்ரீ ஆதிசங்கர பகவத் பாதர்களும், அவரது நான்கு பிரதான சிஷ்யர்கள் ஆகியோரின் சிலைகளும் ப்ரதிஷ்டை செய்யப் பெற்று உள்ளன. கீர்த்திஸ்தம்பம் அடித்தளத்தைத் தவிர மூன்று மேல் தளங்களை உடையதாய் விளங்குகிறது. மூன்று தளங்களிலும் ஸ்ரீ ஆதிசங்கரர் நிறுவிய ஷண்மதக் கடவுளர்களின் சிலைகள் அடையப் பெற்றுள்ளன. இச் சங்கர கேந்திரத்தின் திருப்பணிகளை மயிலை வழக்கறிஞர் ஸ்ரீ ஆர். குப்புஸ்வாமி ஐயர் அவர்களின் தலைமையில் அமைந்துள்ள ஒரு கமிட்டி நடத்தி வருகிறது. காஞ்சி **ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகள்** இருவரும், பூஜ்ய **ஸ்ரீகுருஜி முரளீதர ஸ்வாமிகளும்,** அவ்வப்போது கேந்திரத்திற்கு விஜயம் செய்து நடக்கும் பணிகளை ஆசீர்வதித்து, வழிநடத்தி செல் கின்றனர். மேற்கூறிய சிலைகளின் ப்ரதிஷ்டையும், கீர்த்தி ஸ்தம்பத்தின் மஹா கும்பாபிஷேகமும் 19/1/2000 அன்று நடைபெற்றன.



ப்ரவசன மண்டபத்தின் மேலே ஒரு வேத பாடசாலையும், த்யான மண்டபத்திற்கு மேலே ஸ்ரீ காஞ்சி மஹாஸ்வாமிகளைப் பற்றிய ஒரு ஆராய்ச்சி மையமும் அமைக்கத் திட்டமிடப் பெற்று திருப்பணி நடந்து வருகிறது. இப் புனிதப் பணியில் ஈடுபட்டு பங்குபெற விரும்பும் அன்பர்கள் கீழ்க்கண்டவர்களுடன் தொடர்பு கொண்டு விவரங்களை தெரிந்து கொள்ள வேண்டுகிறோம்.

1. ஸ்ரீ. ஜி. சீதாராமன் நம்பர் 1, நான்காவது தெரு, பாலகிருஷ்ண புரம், ஆதம்பாக்கம், சென்னை – 88. ஃபோன் : 245 7322

2. ஸ்ரீ வி. கௌரி சங்கரன், 19. 13வது க்ராஸ் மஹாலக்ஷ்மி நகர், ஆதம்பாக்கம், சென்னை – 88. ஃபோன் : 245 1308. ஆதம்பாக்கம் கைங்கர்ய சபைக்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு 80 G வருமான வரி விலக்கு உண்டு.

**ஆதம்பாக்கம் கைங்கர்ய சபை.**

# வெட்டியவை ஒட்டாதவை!

✉ கூண்டுக் கிளியை உருவகப்படுத்தி, "இருக்கறதை விட்டுட்டு பறக்கறதை நினைத்து ஏக்கத்துலயே அழியறது மனித ஜாதி ஒண்ணுதான்" - என்னும் வரிகளால் மனத்தெளிவு பெறச் செய்த 'மூலதனம்' சிறுகதை அருமை!

போடிநாயக்கனூர், . பாலசுப்பிரமணியன்

✉ ராணி முகர்ஜியின் நேர்காணல் குஷி நிறைந்து குளுகுளுப்பூட்டியது! 'ரியல் லைஃப் ஹீரோ' பற்றிய கேள்விக்கு அவருடைய அப்பாவை அடையாளம் காட்டுகின்ற பதில், அவரின் பட்டறிவைப் பறை சாற்றுகிறது!

குகழுகாசலபுரம், எஸ்.ஏ.கேசவன்

✉ பிராமமூர்த்தியின் "மனித நேயம் செத்துப் போச்சு" என்ற கட்டுரை நாட்டு மக்களின் மனிதாபிமானமற்ற செயலை எடுத்துக் காட்டுவதாக அமைந்திருந்தது. "தர்மபுரி" சம்பவத்தில் கூட உதவியவர்களைவிட வேடிக்கை பார்த்த மக்களே அதிகம் என்று பத்திரிக்கைகளில் செய்தி படித்த ஞாபகம்.

பாளையங்கோட்டை, ஏ. குமாரவேலு

✉ தூத்துக்குடி மாவட்ட பஞ்சாயத்துக் கவுன்சிலர் எமியை எடுத்துக்காட்டாக வைத்து நாட்டிலுள்ள மற்ற நகராட்சி கவுன்சிலர்கள் செயல்பாட்டால், மலிந்து கிடக்கும் ஊழல்களை ஒடுக்கிவிடலாம்.

சென்னை, கி.ராமதாஸ்.

✉ தத்துப்பிள்ளையாகி இருந்தால் தமது கை கல்லிலும், காகிதத்திலும் கவிதை வடிக்கும் என்ற வார்த்தையில் பழுதி பாரதியின் கை வண்ணமும் தன்னம்பிக்கையும் மிளிர்கிறது.

பூனா, ரஜினி ராம்கி

✉ 'ராஜகாளியம்மன்' படத்தைப் பார்த்து விட்டு மிகவும் குழம்பி விட்டீர்களாக்கும். ஜோஸியராக நடித்திருப்பவர் சிவச்சந்திரன் அல்ல... சரண்ராஜ்..! உங்களைப் பற்றி குறை சொல்லக்கூடாது.. உங்களை குழப்பும் வகையில் படமெடுக்கும் தமிழ் திரைப்பட பிதாக்களைத்தான் தண்டிக்க வேண்டும்.

தேவூர், சுகந்தி நாகராஜன்

✉ "கிராஃபிக்ஸில் எம்.ஜி.ஆர்., ராஜ்கபூர்" படித்தேன். மறைந்து விட்ட சினிமா கலைஞர்களை கிராஃபிக்ஸ் மூலம் மீண்டும் நடிக்க வைப்பதை டெக்னாலஜியின் முன்னேற்றம் என்று நாசர் கூறியிருப்பது சினிமாக்காரர்களே வருத்தப்பட வேண்டிய விஷயம். இது டெக்னா லஜி முன்னேற்ற மல்ல, மக்களை ஏமாற்றும் பித்தலாட்ட வேலை!

சென்னை-5. தெய்வசிகாமணி

✉ வற்றல் குழம்பும் வராத மருமகளும் அருமையான கருவில் பின்னப்பட்டிருக்கும் வித்தியாசமான சிறுகதை.

விழுப்புரம், வை.வெங்கடேசன்

✉ தவறு செய்பவனைவிட, தவறு செய்ய தூண்டுபவன்தான் ஆபத்தானவன். இலங்கை ராணுவத்திற்கும் - புலிகளுக்கும் இடையே நடக்கும் போரை நிறுத்தவோ, அங்குள்ள மக்களின் நிம்மதியான வாழ்க்கைக் குறித்தோ யாரும் கவலைப்படுவதாயில்லை. அதற்கு மாறாக, தமிழ்நாட்டில் வசிக்கும் 'புலி ஆதரவாளர்கள்' பிரச்னையை இன்னும் தீவிரமாக்குகின்றனர். தலையங்கம் படித்ததும் வேதனைதான் மிஞ்சுகிறது. நான் பிறந்ததிலிருந்தே இருக்கும் பிரச்னை, இறப்பதற்குள்ளாவது தீருமா?

சென்னை-75, சூர்யா

✉ ஹேமங் பதானியையும், லட்சுமணனையும் அழகாகப் பாராட்டியுள்ளீர்கள். அதிலும் லட்சுமணனைப் பற்றிய கட்டுரையில் கடைசி வரியில் நீங்கள் கொடுத்த பஞ்ச் இருக்கிறதே.. அதுதானுங்க சரியான நெத்தியடி.

திருப்பரங்குன்றம், டி.கே.சுப்பிரமணியன்

"யாகூ சாட் ரூமில் உங்களுக்காக ஒருவர் காத்துக் கொண்டிருப்பார். அவருடன் சாட் செய்து அவரை யாரெனக் கண்டுபிடிக்க முடியுமா? ஸ்வர்ணமால்யா, எஸ்.வி.சேகர் இருவரிடமும் தனித்தனியே கேட்டு வைத்தோம்.

''இவ்ளோதானா'' என்று ஸ்வர்ணமால்யா சட்டைக் காலரைத் தூக்கி விட்டுக் கொள்ள...

"அப்போ உங்களுக்கு பதினாறு வயசா?"

"இன்னொரு பதினாறு வயசு கூட்டிக்கோங்க."

"அப்போ முன் மண்டையில வீடு கட்ட இடம் வாங்கிப் போட்டிருக்கணுமே?"

''அதான் இல்லே... என்னை நேரா பார்த்தா



# மார்க்கண்டேயன் மீட்ஸ் அனாமிகா!

அய்யய்யோ... 'சாட்டிங்கா' என்று எஸ்.வி. சேகரின் தொண்டை விக்கிக் கொண்டது... பிறகு நாள் பார்த்து, நேரம் பார்த்துக் குறிக்கப்பட்ட அந்த சுபமுகூர்த்த சாட் தினம் வந்தே விட்டது.

ஸ்வர்ணமால்யா சுவீகரித்துக் கொண்ட ரகசியப் பெயர் அனாமிகா. எஸ்.வி. சேகரோ மார்க்கண்டேயன் என்ற பெயரில் மறைந்து, பிள்ளையார் சுழி(!?)யுடன் சாட் வேட்டையைத் தொடங்கினார்.

"ஹாய்... அனாமி ஐ யம் இன் த சாட் ரூம்."

"வெல்கம் டு த சாட் ரூம்... வாட்... ஈஸ் யுவர் நைஸ் நேம்."

"மார்கண்டேயன்."

இருபத்தைந்து வயசுன்னு சொல்வீங்க."

"சரிசரி... எங்கேயிருந்து சாட் செய்றீங்க?"

''இண்டியா, தமிழ்நாடு, சென்னை, மயிலாப்பூர்லேர்ந்து.''

"வாவ்...! நான் மந்தவெளி... உங்க பக்கத்துலதான் இருக்கேன்."

"ஆச்சர்யமா இருக்கே! இப்போ என்ன செய்துகிட்டு இருக்கீங்க?"

''எக்ஸாமுக்குப் படிச்சிக்கிட்டு இருக்கேன்...''

''தப்பா நினைக்கலேன்னா ஒண்ணு கேக்கலாமா?''

"நீங்க ஆணா பெண்ணான்னு கேக்கப் போறீங்க-அதானே?"

"எப்படி கண்டுபிடிச்சீங்க?"

"ரெண்டு வருஷமா சாட் பண்றேன். எவ்ளோ பேரைப் பாக்குறேன்."

"நான் அந்த மாதிரி ஆள் இல்லை... கொஞ்சம் சங்கோஜப் படாமல் சாட் பண்ணலாமேன்னு கேட்டேன்."

"போனா போகுது சொல்லிடறேன்... உங்களை விட பன்னிரண்டு வயசு சின்னப் பொண்ணு."

"தாங்க்ஸ்... நான் ஒரு ஆண்தான்னு எதைவெச்சு நம்பறீங்க?"

"நூத்துக்கு தொண்ணூற்றொன்பது ஆண்கள், எதிர்முனையில சாட் பண்றது இன்னொரு ஆண்தான்னு




தெரிஞ்சா உடனே 'கட்' பண்ணிடு வாங்களே!"

"என்னையும் அந்த லிஸ்ட்ல சேர்த்துட்டீங்களா?"

"நீங்க யாருன்னு தெரிஞ்சாதானே அதைச் சொல்ல முடியும்... நீங்க யாரு?"

"மனிதன்... ஈ...ஹ...ஹ..."

"பார்த்து வாய் சுளுக்கிட போகுது..."

"சரிசரி... அது என்ன அனாமிகா?"

"பெயரில்லாதவள்னு அர்த்தம்!"

"ஆமா நீங்க என்ன படிச்சிருக்கீங்க?"

"ஏர்கண்டிஷன் எஞ்ஜினியரிங்."

"ஹய்யா! நீங்க யாருன்னு கண்டு பிடிச்சிட்டேன்!"

"ரீல்...ரீல்..."

"உங்களுக்கு ரெண்டு காலும், ரெண்டு கையும் இருக்குமே சரியா?"

"யுரேகா தாய்க்குலமே! என்னைக் கண்டு பிடிக்க ஒரு க்ளு தரேன்... டிரை பண்ணு."

"க்ளுவை வெச்சு கண்டுபிடிக்கிற அளவுக்கு நீங்க பெரிய வி.ஐ.பியா?"

"அப்படித்தான் எல்லோரும் சொல்றாங்க."

"ஐ...சி... என்ன தொழில் செய்றீங்க?"

"நடிகன்."

"நீங்க என்ன டாம்க்ரூஸ்சா... சொன்ன

உடனே தெரிஞ்சுகிறதுக்கு...''

''உங்களுக்கு நல்லா காமெடி வருதே...''

நீங்க டீ.வி. நடிகர்தானே...?

''மேடையையும் காமெடி நாடகம் போடு வேன்.''

''என்ன மாதிரியான காமெடி?''

''சீரியஸ் காமெடியும் உண்டு... காமெடியை சீரியஸா எடுத்துக்கிட்டும் போடுவேன்.''

''ரொம்ப குழப்புறீங்களே... நீங்க என்ன விசுவுக்கு பிரெண்டா?''

''ஆமா... விசுவுக்கு பிரெண்ட், வெல்விஷர், பிலாசபர், பாத் பைண்டர் எல்லாம். பெடஸ்ட்ரியன் கிராசிங் வந்தா, அவரை நான்தான் கையைப்பிடிச்சுக் கூட்டிட்டுப் போவேன்னா பார்த்துக்கோங்களேன்.''

''ஐ யம் சீரியஸ்.. இன்னும் ஒரே ஒரு ஒரு க்ளூ ப்ளீஸ்...''

''ஓ.கே... நான் சினிமாலேயும் நடிக்கிறேன்.''

''நீங்க நடிச்ச படம்... இப்போ ஏதாவது வந்திருக்கா...?

''இப்போதான் ஒண்ணு ரிலீஸ் ஆச்சு...''

''ஹலோ... எஸ்.வி.சேகர் சார்!''

''பெரிய ஆளுதான் நீங்க, கண்டுபிடிச்சிட்டீங்களே... இப்போ நீங்க க்ளூ கொடுங்க.''

''நான் நிறைய பேரைப் பேட்டி எடுப்பேன்... அடிக்கடி சிரிச்சுக்கிட்டே இருப்பேன்...''

''இதுக்கு முன்னால கீழ்ப்பாக்கத்தில் இருந்தீங்களா?''

''ஜாலி மூட் ரொம்ப பிடிக்கும் உங்களை மாதிரி.''

''தாங்க்யூ... பேட்டின்னு சொன்னீங்க... எந்த பத்திரிகை?''

''பத்திரிகை இல்லே. தனியார் டீ.விக்கு.''

''என்னை இண்டர்வியூ செய்திருக்கீங்களா?''

''இல்லை.. ரோட்ல போற வர்றவங்களை எடுப்பேன்.''

''ஆனா நம்ம ரெண்டு பேரும் ஒரு விழாவுக்கு ஸ்பெஷல் கெஸ்டா போயிருக்கோம்...''

''ஓ.கே... இப்போ என்ன செய்றீங்க...''

''ஒரே ஒரு படத்துல நடிச்சிருக்கேன்.''

''ஓ...நீங்க நம்ம ஆளா...!''

''மவுண்ட்ரோட்ல அந்தப் படம் ஓடுதா?''

''ரோட்ல ஓடலே... தேவி தியேட்டர்ல டெய்லி நாலு ஷோ போடுறாங்க...''

''அங்கே கூட்டம் அலைபாயுதுமே?''

''அதப்பத்தி எனக்குத் தெரியாது...''

''ஹாய்... ஸ்வர்ணமால்யா நீதானே அந்த வாலு.''

''கண்டுபிடிச்சிட்டீங்களே... கங்கிராட்ஸ்...''

''பார்த்துக்கோம்மா... உன்னோட கம்ப்யூட்டருக்கு ஐ லவ் யூ வைரஸ் வந்துடப் போகுது...''

''ஜாலியா சாட் செய்யும்போது ஏன் சார் பயமுறுத்தறீங்க... ஒரு ஜோக் சொல்லுங்க..''

''ஒரு அரசியல் தலைவருக்கு எந்த ஸ்டேஜில் மாலை போடக் கூடாது.''

''தெரியலியே...?''

''கோமா ஸ்டேஜில்.''

''காமெடி மன்னரே... கடிச்சது போதும்... நீங்க எந்த மாதிரியான சைட்டெல்லாம் பார்ப்பீங்க...''

''www.sveshekher.com. tamizhnaadagam.com, tamildrama.com. இது மூணுக்கும் அடிக்கடி போவேன்.''

''ஏன்?''

''இதெல்லாம் நானே உருவாக்கின வெப்சைட்கள். பம்மல் சம்பந்த முதலியார் தொடங்கி, தமிழ் நாடகம் தொடர்பான எல்லா தகவலும் தமிழ் நாடகம்.காம்ல கொடுக்க ஏற்பாடு செய்திருக்கேன்.''

''வெரிகுட்.. அதுசரி.. அது என்ன மார்கண்டேயன்ங்கிற நேம்.''

''ஸ்ரீ சுகர் முனிவருடைய சீடர்தான் மார்கண்டேயன். சுகர் முனிவர் மேலே எனக்கு ரொம்ப பக்தி உண்டு. அவருக்குக் கோயில் கூட கட்டியிருக்கேன்.''

''காட் பிளெஸ் யூ...''

''தாங்யூ... ப்ளீஸ் டொனேட் பிளட்.''

''நிச்சயமா... சி.யூ. நெக்ஸ்ட் டைம்.''

''குட்லக்.''

தொகுப்பு: **ஜெயந்தன்**

படம்: **ஸ்ரீஹரி**

**86ம் பக்க விடைகள்**

**1. சார்மினார் - 9. திருமலை வெங்கடாசலபதி கோவில் (ஆந்திரா)**
**2. காஞ்சிபுரம் - 7. சென்னை தேசியக் கலைக் கூடம் (தமிழகம்)**
**3. பேலூர் - 10. மைசூர் பிருந்தாவன் தோட்டம் (கர்நாடகம்)**
**6. ஈடன் கார்டன் மைதானம் - 11. விக்டோரியா மெமோரியல் (மேற்கு வங்காளம்)**
**4. மெரீன் டிரைவ் - 5. அஜந்தா குகைக் கோயில்**
**8. இந்தியாகேட் - 12. ஜனாதிபதி மாளிகை வாசல் (டெல்லி)**



"அம்மா, ஸ்கூல்ல எல்லாரும் எக்ஸ்கர்ஷன் போறாம்மா. எனக்கும் அறுநூற்றைம்பது ரூபாய் கொடும்மா... நாளைக்கே கொடுக்கணும். பெங்களூர், மைசூர் திப்பு சுல்தான் கோட்டை எல்லாம் கூட்டிண்டு போறா. நானும் போறேம்மா. இதோ பாரேன். எந்தெந்த டைம்ல எந்தெந்த ஊருல இருப்போம்னு சார்ட் கொடுத்திருக்கா. நாங்களெல்லாம் தங்கப் போற ஓட்டலோட போன் நம்பரும் இருக்கு. நீ போன் வேணும்னாலும் பண்ணலாம்மா. எங்க கிளாஸ்ல ஆல்மோஸ்ட் எல்லாரும் போறாம்மா. நாளைக்கே பணம் டிரா பண்ணிண்டு வந்திருமா ப்ளீஸ்.'' என்னை நடுவில் பேச விடாமல் பேசும் என் பெண் காயத்ரி.

"என் ப்ரெண்ட் ஏக்தா, பாவனா, நிர்மலா, ரஞ்சனி எல்லாரும் வராம்மா."

"உன் பவானி மிஸ் வராளோ?"

''எங்க கிளாஸ் மிஸ் ஆச்சே, வராம இருப்பாளோ?''

"சரி, புதன்கிழமை நல்ல நாள். அன்னிக்குப் பணத்தைக் கொடுத்துடு.'' பணம் கொடுப்பதாகச் சொல்லிவிட்டேனே தவிர, மனசு ஒரு பரிதவிப்பில்தான் இருக்கும். இவள் திரும்பி வந்து நான் கண்ணால் காணும்வரை இந்தத் தவிப்புதான்.

ஆபீஸில் திருச்சி என்றும், ஹைதராபாத் என்றும் எவ்வளவு டிரெயினிங் வாய்ப்புகள். அவரவர்கள் வாய்ப்பு கிடைக்காதா என்று ஏங்குகையில் நான் என் பெண்ணின் இந்தப் பன்னிரண்டு வயதுவரை ஒருமுறை கூடப் போனது இல்லை. அலுவலகம் தவிர எங்கு சென்றாலும் குழந்தையுடனேதான் செல்வேன். ஓர் இரவு கூட இவளை விட்டு இருந்தது இல்லை.

பணம் வாங்கிக் கொண்டு போய்விட்டாள். எனக்குத்தான் பதைப்பாக இருக்கிறது.

"அம்முச்சா, நீ போயிடுவே. உங்க அம்மா தான் அழுதுண்டு இருப்பா. அப்பாவும் ஊரில் இருக்க மாட்டேன்"- பெண்ணின் தலையை வருடிக் கொண்டே என் கணவர்.

"அம்மா, நீ எக்ஸ்கர்ஷன் போயிருக்கியா, சொல்லும்மா."

"ஓ.... போயிருக்கேன். ஒரே ஒரு வாட்டி. தூத்துக்குடிக்கு."

"நீ பணம் கட்டினதுல இருந்து ஊர் வீந்து சேர்ந்தவரைக்கும் சொல்லேன்... ப்ளீஸ்...

## செல்லம் ராஜு

"பாவூரிலிருந்து தூத்துக்குடி. தலைக்கு பத்து ரூபாய். பத்து ரூபாய் அப்போ ரொம்பப் பெரிசு. நான் சொல்றது முப்பது வருஷங்களுக்கு முன்பு. ஒரு கிராமத்துக் குழந்தை

களின் முதல் ரயில் பயண அனுபவம்... ஏழு குழந்தைகளும் இல்லாமையும் உள்ள வீட்டில் ஆளுக்கு ஒருமுறை எக்ஸ்கர்ஷன் அனுப்புவதே குழந்தைகள் மேல் உள்ள அளப்பரிய அன்பினாலும் வாஞ்சையினாலும்தான்.

இரவு கடைசி பஸ்ஸில் அனை



# அம்மா

வரையும் ஏற்றி பாலூர்ச்சத்திரம் கூட்டிக் கொண்டு போய் அங்கிருந்து ஏதோ ரயில், கொடுத்த காசுக்கு நீண்ட நேரம் எங்களைக் கொண்டு சென்றது. தீபாவளிக்கு வாங்கிய கறுப்பில், ஊசிவாணம் சரிகைக் கோடிட்ட சின்னாளப் பட்டுப் பாவாடை, சிவப்பில் அதேபோல் ஒரு சட்டை. தாவணி போடாத வயசு. அப்போதெல்லாம் ரயில் வண்டி நல்ல புகையும் கரியுமாய் இருக்கும். எனக்கு ஸீனியரான கோமதியும் நானும் ஒரே இருக்கையில். ஒரு மஞ்சள் துணிப் பையில் ஒரு துண்டும் கைச் செலவுக்கு இரண்டு ரூபாயும் இரண்டு வேளைச் சாப்பாடாக ஒரு பொட்டலம் புளியஞ்சாதமும், இன்னொன்று தயிர் சாதமும், வேப்பிலைக் கட்டியும்.

ரயிலின் வேகத்திற்கு எதிர்த் திசையில் ஓடும் மரங்கள், வெடித்துக் கிடந்த பூமி.. ரயிலின் மூன்றாம் வகுப்பு... இப்போதுள்ள குழந்தைகளுக்கு அந்த இருக்கை எப்படி இருந்திருக்கும் என்று தெரிந்திருக்க வாய்ப்பில்லை.

கடம்பூரில் இரண்டு போளி நாலணா. மணியாச்சியில் நான்கு முறுக்குகள் காலணா. தூத்துக்குடி வந்துவிட்டது.

எங்கள் தலைமை ஆசிரியர் கிறிஸ்துவராக இருந்ததால் ஒரு கிறிஸ்துவப் பள்ளியில் நாங்கள் தங்க அனுமதி வாங்கியிருந்தார்கள். நல்ல வெயில். அந்தப் பள்ளிக்குச் சென்று கை கால் கழுவி அவரவர் பொட்டலம் பிரித்துச் சாப்பிட்டபோது என்ன தேவாம்ருதமாக இருந்தது!

முயல் தீவுக்குப் படகில் போனால்... சில முள் மரங்கள். ஒரு முயல்கூட இல்லை! ரொம்ப ஏமாந்து போனோம். வேறு எங்கு போனோம்? ஞாபகமில்லை. சைவமும் அசைவமும் சேர்ந்த சிறு ஹோட்டலில் காய்கறி வெட்டும் ஓர் அறையில் மாணவிகள் அனைவரும் அமர்ந்து தோசை சாப்பிட்ட ஞாபகம். சாப்பிட்டு முடித்தால் அடிமைப் பெண் சினிமா. ஸெகண்ட் ஷோ பார்க்கப் போறோம். வருகிறவர்கள் வரலாம்'' என்ற ஆவுடை நாயகம் சாரின் அறிவிப்பு.

சினிமாவுக்குப் போனால்... இந்த ஊரில் டிக்கெட் ஐம்பது பைசா ஆச்சே. நம்ம கையில் ஒன்றரை ரூபாய்தானே இருக்கு. ஊருக்குப் போகும்வரை காசு வேணுமே...

''வரலை சார், தூக்கம் வருது.''

''டிக்கெட் நாங்கதான் வாங்கப் போறோம்'' என்றவுடன் எங்கள் அத்தனை பேருக்கும் தூக்கம் பறந்தோடிற்று.

மூன்றாம் நாள் வீட்டிற்கு வந்ததும் 'ரயில் கரியும் தூத்துக்குடியின் உப்புக் காற்றும் என்

ணமா ஆக்கியிருக்கு ஆளை. இலெஸ்னனை மாதிரி! நல்லா தேச்சுக்குளி' என்றாள் அம்மா.

"அம்மா, அப்போ முதல் தடவையாய் உங்க அம்மாவை விட்டுட்டுப் போனது உனக்குப் பயமா இருந்ததா?

"பயமாகத்தான் இருந்தது. அழுகை கூடத் தான் வந்தது."

"நான் சமர்த்தா இருப்பேன் அம்மா. நீ கவலைப்படாதே".

இரவு பதினொரு மணிக்கு வண்டி. "இந்தா பிஸ்கெட்ஸ், சிப்ஸ், டின்ட் கோக், ப்ரெட், கடலை உருண்டை. ஸ்கூல்ல அவா சாப்பாடு தருவதற்குள் பசித்தால் இது எதையாவது சாப்பிடு, என்ன?

"பொண்ணு கூடவே போய் ஊட்டிவிடு. உங்க அம்மா சுத்த சடை, இல்லையா அம்முச்சா?"

ஒரு ராத்திரி கூட கொசுவர்த்தி இல்லாமல் தூங்கியது இல்லை. இரண்டு காற்றாடிகள் சுற்றும். கட்டிலின் முக்கால்பாகம் ஆக்கிரமித்துப் படுத்துக் கிடக்கும் குழந்தை. பசியே பொறுக்காது. எப்படி மூன்று நாட்கள் சமாளிக்கப் போகிறாள்?

> **''கன்சல்டிங் அவர்'னு தான் கேள்விப் பட்டிருக்கேன்! இந்த டாக்டர் 'இன்சல்டிங் ஹவர்'னு போர்டு போட்டிருக்கார்?''**
>
> **''அவருக்கு ஃபீஸ் பாக்கி வைச்சிருக்கிற பேஷன்ட்களை அந்த நேரத்துல பழிச்சு சொல்லிக் காட்டுவார், அதான்!''**
>
> **— சம்பத் குமாரி**

எனக்குக் கண்கள் திரையிடுகின்றன. டிரெயின் நகரப் பார்க்கிறது. எனது கைகளை அப்படியே ஜன்னலின் மேல் வைத்து அழுத்துகிறது குழந்தை. கையும் வலிக்கிறது. "வா போகலாம். உம் பொண்ணை யாரும் தூக்கிண்டு போக முடியாது. அவ்வளவு குண்டு." சீண்டுகிறார். நாளை காலை ப்ளைட்டில் இவரும் கிளம்பி விடுவார்.

இப்போதிலிருந்தே நாளை மதியம் பன்னிரண்டுமணி எப்போது ஆகும்? அவர்கள் தங்கும் ஹோட்டலுக்குப் போன் பண்ணலாம் என்று மனசு பறக்கிறது.

செய்தித்தாளையும், தொலைக்காட்சிச் செய்திகளையும் உன்னிப்பாகக் கவனிக்கிறேன். பன்னிரண்டு மணிக்கு எஸ்.டி.டியில் பேசினால் 'இன்னும் வரலை' என்று கன்னடத்தில் பதில். பன்னிரண்டரை, ஒன்று என்று மூன்று கால் பண்ணியாச்சு. இரண்டு மணிக்கு போன் பண்ணினால் வந்துவிட்டு வெளியே கிளம்பிவிட்டார்கள் என்று செய்தி. இரவு

பத்துமணிக்குப் பண்ணுவோம் என்ற சமா தானத்தில் மீதிப் பொழுது. பத்தரை மணிக்கு ஒரு வழியாகக் குரலைக் கேட்டாச்சு.

"பத்திரமாக இருக்கோம்மா. கவலைப் படாதே. எங்க டீச்சர்ஸ் எல்லாம் நன்னா கவனிச்சுக்கறா."

மனசு மீண்டும் அவள் வரும் நாளை எதிர் நோக்கி அல்லாடி அலைபாய்கிறது. நாளைக் காலை ஐந்து மணிக்கு வண்டி வந்துவிடும். ஸ்டேஷன் போகணும்.

அம்மாடி.... வண்டி சரியான நேரத்துக்கு வந்தாச்சு. குழந்தைகளாய் இறங்குகிறார்கள். அதோ... கஷ்க்கு முஷ்க்கென்று... "கொஞ்சம் இரும்மா. சுதாக்கு இன்னும் அவ அம்மா வரலை. அவளை அனுப்பிட்டு வரேன்."

ஆட்டோவில் குழந்தையைத் தொட்டுத் தொட்டுப் பார்த்துக் கொண்டு அது கொட்டி அளப்பதைக் கேட்டுக் கொண்டே வீடு வந்



தால் என்னுடைய அம்மா வந்திருக்கிறாள்.

"வாங்கோ, நீங்க எப்ப வந்தேள்?"

"இப்பத்தான். நாளைக்கு பாவுஅத்தங்கா பிள்ளைக்குக் கல்யாணம். சத்திரத்துக்குப் போற துக்கு முன்னாடி இங்க வந்தோம். என்ன, பொண்ணு எக்ஸ்கர்ஷன் போயிட்டு வந்தாச்சா?"

"போ....ம்மா. இவள் போற பாட்டுல எனக்குத்தான் டென்ஷன் தாங்கல. தவிச்சுத் தண்ணியா உருகிட்டேன்."

"என்ன உருக்கம்? போனது போல வருவா. மனுஷா இல்லாத காட்டுக்கா அனுப்பற? இல்லை பொறுப்பான ஆட்களோட அனுப்ப லையா? நாங்கள்லாம் உங்க கூட பள்ளிக் கூடத்துக்கும் ரயில்வே ஸ்டேஷனுக்குமா வந்தோம்? எதுக்கெடுத்தாலும் ஒரு வார்த்தை கத்துண்டிருக்கேள். டென்ஷன் டென்ஷன். இரண்டு ரூபாயையும் ஒரு மஞ்சள் பையையும் கொடுத்து உன்னை நான் அனுப்பினேனே. நீ போய்விட்டு வரலியா? இப்ப வசதியா அனுப் பும்போது ஏன் கவலைப் படறே?" என்று சொல்லிக்கொண்டே, "வாடி கண்ணு, என்ன வெல்லாம் பார்த்தாய்?" என்று என் பெண்ணை வாஞ்சையுடன் மடியில் சாய்த் துக் கொள்கிறாள் என் அம்மா! ●





# அரசு மியூசியத்தில் அண்ணாச்சி!

**ஊ**ர் சுத்தறதுன்னு முடிவு பண்ணியாச்சு. இனி வெயிலைப் பத்திக் கவலைப் படலாமா? கூடாது. சட்டசபையைப் பார்க்கலாம்னு போனேங்க. அன்னைக்கு ஞாயிற்றுக்கிழமைன்னு என் மரமண்டைக்குத் தெரியாமப் போச்சு. சட்டசபை கிடையாதாமே! பக்கத்துல ஏதோ மீஜியம் (மியூசகயம்) இருக்குன்னு சொன்னாங்க. சரி ஒரு எட்டு போய்ட்டு வந்துடுவோம்னு நடை போட்டேன்.

மாட்டு வண்டிச் சக்கரம் மாதிரி சின்னதா்ன ரெண்டு சக்கரத்துல யானைத்தும்பிக்கைக் கணக்கா நீண்டுட்டு, வாசல்ல அஞ்சு, ஆறு இருந்துதுங்க. என்னடா இதுன்னு மண்டையை சொறிஞ்சுகிட்டு... யோசனைப் பண்ணிப் பார்த்தேங்க. ஆங்... இதுக்குப் பேரு பீரங்கியாம்ல... வெள்ளைக்காரன் கட்ட பீரங்கி!

**உ**ள்ளே நுழைஞ்சதும் ரெண்டு ரூபாயை வாங்கிட்டு ஒரு சீட்டு குடுத்தாங்க... எதிர்ல பார்த்தா எம்மாம் பெரிய பளிங்குச் சிலை! யாரோ கார்ன்வாலிஸ் துரைன்னு பேரு சொன்னாங்க.

பக்கத்துல திரும்பி உள்ள போனா அம்புட்டும் வெட்டுக்குத்து சமாச்சாரங்க டோய்! குண்டெல்லாம் வச்சிருக்காங்க. அதுல ஒண்ணோட பேரு பெடார்டு (petard). இதை வச்சுதான் அந்தக் காலத்துல கோட்டைக் கதவு, பெரிய பெரிய இழுவை பாலத்தையெல்லாம்

உடைச்சாங்களாம். பக்கத்துலயே வச்சிருக்காங்க சங்கிலிக் குண்டை. பாய் மரக் கப்பல்ல இருந்த பாய்மரங்களை உடைக்கறதுக்கு இந்தக் குண்டைப் பயன்படுத்துவாங்களாம். அப்புறம் நம்மூர் அரிவாள், வாள், கத்திச் சமாசாரங்கள். அங்கங்க சட்டிப் பீரங்கின்னு சின்னதா வச்சிருக்காங்க.

உள்ளயே அந்தக் காலத்து... எந்தக் காலத்து...? ஆங்... பத்தொன்பதாம் நூற்றாண்டு அரச பிரதிநிதி குழுவோட பேண்ட்டு, சட்டை, கோட்! அப்புறம் காலாட்படை, குதிரைப் படை வீரர்களோட உடுப்புங்க. ஊதா, சிவப்பு, மஞ்சள்னு அவங்க உடுப்பெல்லாம் நல்லாதான் இருக்கு பார்க்கறதுக்கு. யார்ட்டயும் சொல்லாதீங்க. காதை கொடுங்க. அதுல ரெண்டு மட்டும் ரொம்ப அழுக்கா இருக்குங்க.

அப்படியே ரைட்டுல திரும்பினா கண்ணாடிக் கூண்டுக்குள்ள ஒரு மனுஷன்! அடப்பாவிகளா இவரை ஏன் உள்ளப் பூட்டி வச்சிருக்காங்கன்னு விசாரிச்சேன். அட, பொம்மை! முழுச் சீருடையணிந்த ஒரு படைத் தலைவனோட மாடல்! அதான பார்த்தேன்! எப்படிடா காத்துப் போகாத கண்ணாடிக் கூண்டுல மனுஷன் உயிரோட இருப்பான்னு?

முதல் மாடிக்குப் போனா, பெரிய ஹால். உள்ளே பெரிய பெரிய ஓவியங்கள். அப்படியே கண்ணுல ஒத்திக்கலாம் மாதிரி. விக்டோரியா ராணி, ராபர்ட் கிளைவ், நவாப் வாலாஜா, 1900-ல மெட்ராஸ் கவர்னராக இருந்த ஆர்தர் ஹேவ்லாக் இவங்களோட படங்கள். வரைஞ்சதா, போட்டோவான்னே கண்டுபிடிக்க முடியலைனா பாருங்களேன்!

பக்கத்து அறைக்குள்ள போனா பூராவும் அந்தக் காலத்துத் துட்டு. அதான் நாணயங்கள். பெங்கால்ல, மும்பையில அடிக்கப்பட்ட நாணயங்கள். கிழக்கிந்திய கம்பெனி, இந்தோ-போர்ச்சுக்கல், இந்தோ-டேனிஷ், டச்சு நாணயங்கள்னு நிறைய இருக்கு. மூணு கண்டக்டர் பைப் புடிக்கறாப்புல அத்தனை காசுங்க!

இன்னொரு மாடி இருக்குன்னாங்க. மேல ஏறிப் போய்ப் பார்த்தேன்... யப்பாடி... அந்தக் காலத்து மெட்ராஸை அப்படியே வரைஞ்சி வச்சிருக்காங்க. பீச் ரோட்ல எவ்ளோ மரம், குதிரை வண்டி, ச்சே... நம்பவே முடியலைங்க... இன்னொரு படத்துல பாய்மரக் கப்பல் மூலமா வெள்ளைக்காரங்க கடற்கரையில இறங்குறது... அவங்களை நம்மாளுங்க பல்லக்குல தூக்கிட்டுப் போறதுன்னு... நிறைய ஓவியங்கள்.

எதிர் அறைக்குள்ள நுழைஞ்சா, ஃபோட்டோ சட்டம் மாதிரி வச்சு அதுக்குள்ள துருப்பிடிச்ச(?) பேப்பரையெல்லாம் வச்சிருக்காங்க. அது ரொம்ப இத்துப் போய் இருக்கு. யார் எழுதின கடுதாசின்னு பக்கத்துல இருந்தவர்ட்ட கேட்டேன். ராபர்ட் கிளைவ் எழுதின கடுதாசியாம். இப்படி பாதுகாத்து வச்சிருக்காங்க. மூணு மாசம் முன்னால என் மருமகன் எழுதின கடுதாசியைக் காணலைனு நான் இன்னமும் தேடிட்டிருக்கேன். இங்க என்னடான்னா 1756ம் வருஷத்துல எழுதினதையெல்லாம் பாதுகாத்து வச்சிருக்காங்க.

எத்தனை பத்திரமா வச்சுருக்காங்கன்னு நினைச்சுகிட்டே திரும்பி வந்து வாசல்ல வச்சக் குடையைத் தேடினா... காணலை!

— சலாம்ஜி

படம்: ஜரிஸ்



## பிரிந்த வேளை...!

சினிமா, டி.வியில் கைகோத்து உலா வந்த மூர்த்தி - ரமேஷ் கோஷ்டியில் விரிசல் ஏற்பட்டதையடுத்து இப்போது ரமேஷ் காட்டில் செம மழை! 'மனசு ப்ளஸ்; 'ஆலயம்', 'அப்பா செல்லம்' என்று 'டி.வி தொடர்'இறது அவரது பட்டியல். லோ பட்ஜெட்டில் படம் ஒன்றை டைரக்ட் பண்ண இருக்கிறார். 'இந்தப் படம்தான் என் லட்சியம்: இரண்டு பேரைத் தவிர பாக்கியெல்லாம் புது நடிகர்கள்தான். இதை எப்படியாவது வெற்றிப் படமாக்குவேன்'' என்றவரிடம் ''உங்க இரண்டு பேருக்குமிடையில் என்ன சார் பிரச்னை?'' என்றால் சிரித்துக் கொண்டே அவர் சொல்லும் பதில்: 'மனசு!'

— ஏக்

**ஸ்டார் டி.வியின் செய்தியாளராகப் பல வெளிநாடுகளுக்குப் போய் வந்தவர் சூர்யா கங்காதரன். ஆப்கானிஸ்தானத்தில் தங்கியிருந்து, இவர் எழுதிய தாலிபன் கட்டுரைகள் பல இதழ்களில் தொடர்ந்து வெளியாகி வருகின்றன. சென்னை வந்திருந்த அவரைச் சந்தித்தோம் :**



# முஷாரஃப் ஆட்சி முடிவுக்கு வருமா?

● **தாலிபன் என்றால் என்ன அர்த்தம்?**

தாலிப் என்றால் ஸ்டூடண்ட். மாணவர் இயக்கம் என்பது மாதிரி அர்த்தம். ஆனால் இது மாணவர் படை அல்ல. ஆப்கானிஸ்தான் ஆட்சி இவர்களிடம்தான் இப்போது இருக்கிறது.

● **இப்போதைய அதிபர்?**

முல்லா முகமது உமர் எனும் அமீர்.

● **இந்தியன் ஏர்லைன்ஸ் விமானம் ஹைஜாக் செய்யப்பட்டபோது, தாலிபன் இந்தியாவுக்கு ஆதரவாக இருந்ததா?**

முதலில் இந்தியாவுக்கு ஆதரவாக நடந்து கொள்வது போல்தான் இருந்தது. பிறகு காபூலில் உள்ள பாகிஸ்தானின் ஐஎஸ்ஐ உளவு அதிகாரி கந்தஹார் வந்ததும் அவர்கள் போக்கை மாற்றிக் கொண்டு விட்டார்கள். 'நீங்கள்தான் என்ன பேசுவது, எப்படிக் கையாளுவது என்பதை முடிவு செய்ய வேண்டும்!' என்று இந்திய அதிகாரிகளிடம் கையை விரித்து விட்டார்கள். இந்திய அரசு கடைசியில் மூன்று தீவிரவாதிகளை விடுதலை செய்து பயணிகள் உயிரைக் காப்பாற்றியது எல்லாருக்கும் தெரிந்த விஷயம். ஆனால் அதே விமானத்தில் இந்திய உளவுப் படையான ரா(RAW) அதிகாரி ஒருவர் முக்கிய ஆவணங்கள் அடங்கிய பெட்டியுடன் பயணம் செய்தது பலருக்கும் தெரியாது. ஆனால், நல்ல வேளையாக எந்தவித அசம்பாவிதமும் நடந்து விடவில்லை.

● **தாலிபன் அரசுக்குப் பொருளாதார ஆதரவு எந்தவிதத்தில் கிடைக்கிறது?**

ட்ரக்ஸ்தான். போதை மருந்துச் செடிகளை ஏராளமாகப் பயிர் செய்து உலகம் முழுக்க அதை விற்பதில்தான் அவர்கள் பொருளாதாரமே இருக்கிறது. இரண்டாவது, அவர்கள் தயாரிக்கும் துப்பாக்கி வகைகள். வீதி வீதியாகப் பட்டறைகள் அமைத்து ஏராளமாக இவற்றைத் தயாரிக்கிறார்கள். சுலபமாக விற்கவும் செய்கிறார்கள்.

அமெரிக்காவுக்கு எதிராகப் போராட்டம் நடத்தி வரும் ஒசாமா பின் லேடன் ஆப்கானிஸ்தானத்தில்தான் இருக்கிறார்.

● **ஒசாமாவை பெரிய பணக்காரர் என்கிறார்களே?**

அவர் சவுதி அரேபியாவைச் சேர்ந்தவர். குடும்பச் சொத்து என்று சுமார் 300 பில்லியன் டாலர் பணம் அவர்வசம் இருக்கிறது. இதில் பல மில்லியன் டாலர்களை அங்கங்கே முதலாகப் போட்டு வைத்து, அதிலிருந்தும் பணம் கிடைக்கிறது அவருக்கு. என்னதான் அமெரிக்கா அச்சுறுத்தினாலும், ஆப்கானிஸ்தான் அவரைக் காட்டிக் கொடுக்காது. முன்பு ரஷ்யப் படைகள் ஆப்கனிஸ்தானில் இருந்தபோது, அமெரிக்கா அவர்களுக்கு உதவியது. அமெரிக்க உளவுப் படை சிஐஏ அங்கே நன்றாகக் காலூன்றி வேலை செய்தது. இப்போது நிலைமை அப்படி அல்ல.

● **பாகிஸ்தானில் முஷ்ரஃப் ஆட்சி தொடருமா?**

இந்த ஆண்டு வரைதான் அவரால் தாக்குப்பிடிக்க முடியும் என்று சொல்கிறார்கள். முஷ்ரஃப் ஒரு மொஹாஜிர். அதாவது இந்தியாவிலிருந்து போனவர். முன்னாள் பிரதமர் நவாஸ் ஷெரீஃப் பாகிஸ்தான் பஞ்சாபி. இவர் ஒரே சமயத்தில் நீதித் துறை, நிர்வாகத் தலைமை, இராணுவம் எல்லாரையும் பகைத்துக் கொண்டு விட்டார். அது அவர் செய்த தவறு. நவாஸ் ஷெரீஃபின் சகோதரர் ஷாபாஸ் கெட்டிக்காரர் என்கிறார்கள். அவர் ஒருநாள் பாகிஸ்தான் பிரதமராகப் பொறுப்பேற்கக் கூடும் என்று சொல்கிறார்கள்.

— எஸ்.வி.என்.



# ஜேம்ஸ் பாண்டு

**கா**ர்ட்டூன்களில் எலி, பூனை, முயல் இதுகளெல்லாம் உடம்பை அஷ்டகோணலாக்கிக் கொள்வதற்கும், ஓடுவதற்கும், விழுவதற்கும் ஜனங்கள் இவ்வளவு சிரிக்கிறார்களே, பார்த்திபனையும் பிரபுதேவாவையும் இதையெல்லாம் செய்யச் சொன்னால் சிரிக்காமலா போய்விடுவார்கள் என்ற ஒரு நம்பிக்கையில் டைரக்டர் படம் எடுத்திருப்பது புரிகிறது. நாமும் அந்த நம்பிக்கையில் மண் அள்ளிப் போட வேண்டாம் என்று எவ்வளவோ முயற்சி செய்து பார்க்கிறோம்... ஹூம், முயற்சி திருவினையாக்கவில்லை!

'தில்'லோடு ஏதாவது செய்து காண்பித்தால் ரூபா கொடுப்பார்களாம். 'தில் ரூபா' என்ற இந்த நிகழ்ச்சியை ஒரு தனியார் டீவி. நடத்துவதாக காண்பித்து கிண்டல் செய்கிறார்கள் படத்தில். நமக்கோ, 'நாட் எ பாடு ஐடியா' என்று ஏதாவது ஒரு டீவி. சேனல் 'பிரைம்-டைம்'ஐ பிடித்துக் கொண்டு 'கால்கேட் தில்ரூபா', 'பஜாஜ் தில்ரூபா' என்று ஆரம்பித்துத் தொலைத்து விடப்போகிறதே என்று வயிற்றைக் கலக்குகிறது.

பார்த்திபனுக்குச் சென்னை மாநகரத்து தூய தமிழ் பேசும் காரெக்டர். கேட்கவா வேண்டும்?... அள்ளி விட்டிருப்பார் போலும் வசனங்களை. சென்ஸார் கத்திரி 'மியூட்' பண்ணி கலாய்த்திருக்கிறது.

மீசையையும் எடுத்துவிட்டு ஒரு கோல்டு ஃப்ரேம் கண்ணாடியையும் போட்டவுடன் நிழல்கள் ரவி படு ஷோக்காக இருக்கிறார். இந்த புது 'கெட்-அப்'இல் இன்னும் பல ரவுண்டு வரலாம், கமான் 'ஷாடோஸ்'!

நகைச்சுவையை பிரசென்ட் பண்ண 'பேக்கிரவுண்டி'ல் ஒரு கொலைக் கதையைத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அந்தக் கதை, பரவாயில்லை, சற்று அழுத்தமாகவே இருக்கிறது. (சிட்ஃபண்டுகாரர்கள் வரிசையாக திவால் ஆனபோது நாமெல்லாம் கஷ்டப்பட்டோமோ இல்லையோ, அந்த 'சப்ஜெக்ட்'ஐ உடும்புப்பிடியாகப் பிடித்துக்கொண்டு இந்த சினிமா கதாசிரியர்கள் நம்மளை படுத்தும் பாடு இருக்கிறதே, அப்பப்பா!) பேசாமல் அந்தக் கதையை பேஸ் பண்ணி ஒரு 'மர்ம படம்' கொடுத்திருக்கலாம். இவர்கள் நம்மைச் சிரிக்க வைக்கவில்லை என்று யார் அழுதார்கள்?

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

**"எந்நேரமும் உன் சந்நிதியிலே நான் இருக்க வேண்டும் ஐயா!" – தில்லை நடராஜரைக் குறித்து கோபாலகிருஷ்ண பாரதியார் இப்படிப் பாடினார். அவரவரும் தங்கள் இஷ்ட தெய்வத்தின் சந்நிதியை நாடிச் செல்கையில் அக்கடவுளின் தோற்ற தத்துவம் குறித்தும் வழிபாடு பற்றியும் அறியும்படி, ஸ்ரீ மகா பெரியவர் அருளியவற்றிலிருந்து திரட்டிய தொகுப்பு இது :**



ஜகத்காரணப் பொருள் நாமெல்லாம் பார்த்துப் பார்த்து ஸந்தோஷப்பட வேண்டுமென்பதற்காக, நராகாரமாக மட்டுமின்றி, மநுஷ்ய சரீரத்திலேயே கழுத்துக்கு மேலே யானையாக ரூபம் கொண்டிருக்கிறது; திரும்பத் திரும்ப ஆராத ஆசையோடு பார்க்கச் செய்கிற யானை முகத்தை வைத்துக் கொண்டு தோன்றியிருக்கிறது.

பிள்ளையாரென்றால் உடனே தோப்புக்கரணத்தைத்தான் நினைத்துக் கொள்கிறோம். மற்ற ஸ்வாமிகள் மாதிரி இவர் ரொம்ப ச்ரமம் தருகிற ஸ்வாமி இல்லை. பெருமாளென்றால் அங்க ப்ரதக்ஷிணம்; 'முழங்கால் முறிச்சான்' மலை ஏறணும். முருகனுக்குக் காவடி என்று பெரிசாகக் கட்டித் தூக்கிக் கொண்டு மைல் கணக்காக மலை மேல் ஏறிப் போகணும்; அலகு செடில் குத்திக் கொள்வது என்றெல்லாம் கூட உண்டு. ஈச்வரனுக்கோ ஒரே பசியும் பட்டினியுமாய் உபவாஸமிருக்க வேண்டும். இப்படியெல்லாமில்லாமல் ரொம்பக் கொஞ்சமாக வேலை வாங்குகிறவர், ஸ்வல்ப ச்ரமமே தருகிறவர் பிள்ளையார்தான். அதுவுங்கூட வேடிக்கையாக, குழந்தை விளையாட்டு மாதிரி, அல்லது குழந்தைக்கு விளையாட்டுக் காட்டுகிற மாதிரித்தானிருக்கும். நெற்றியில் குட்டிக் கொள்வது,



**"எந்நேரமும் உன் சந்நிதியிலே நான் இருக்க வேண்டும் ஐயா!" – தில்லை நடராஜரைக் குறித்து கோபாலகிருஷ்ண பாரதியார் இப்படிப் பாடினார். அவரவரும் தங்கள் இஷ்ட தெய்வத்தின் சந்நிதியை நாடிச் செல்கையில் அக்கடவுளின் தோற்ற தத்துவம் குறித்தும் வழிபாடு பற்றியும் அறியும்படி, ஸ்ரீ மகா பெரியவர் அருளியவற்றிலிருந்து திரட்டிய தொகுப்பு இது :**



ஜகத்காரணப் பொருள் நாமெல்லாம் பார்த்துப் பார்த்து ஸந்தோஷப்பட வேண்டுமென்பதற்காக, நராகாரமாக மட்டுமின்றி, மநுஷ்ய சரீரத்திலேயே கழுத்துக்கு மேலே யானையாக ரூபம் கொண்டிருக்கிறது; திரும்பத் திரும்ப ஆராத ஆசையோடு பார்க்கச் செய்கிற யானை முகத்தை வைத்துக் கொண்டு தோன்றியிருக்கிறது.

பிள்ளையாரென்றால் உடனே தோப்புக்கரணத்தைத்தான் நினைத்துக் கொள்கிறோம். மற்ற ஸ்வாமிகள் மாதிரி இவர் ரொம்ப ச்ரமம் தருகிற ஸ்வாமி இல்லை. பெருமாளென்றால் அங்க ப்ரதக்ஷிணம்; 'முழங்கால் முறிச்சான்' மலை ஏறணும். முருகனுக்குக் காவடி என்று பெரிசாகக் கட்டித் தூக்கிக் கொண்டு மைல் கணக்காக மலை மேல் ஏறிப் போகணும்; அலகு செடில் குத்திக் கொள்வது என்றெல்லாம் கூட உண்டு. ஈச்வரனுக்கோ ஒரே பசியும் பட்டினியுமாய் உபவாஸமிருக்க வேண்டும். இப்படியெல்லாமில்லாமல் ரொம்பக் கொஞ்சமாக வேலை வாங்குகிறவர், ஸ்வல்ப ச்ரமமே தருகிறவர் பிள்ளையார்தான். அதுவுங்கூட வேடிக்கையாக, குழந்தை விளையாட்டு மாதிரி, அல்லது குழந்தைக்கு விளையாட்டுக் காட்டுகிற மாதிரித்தானிருக்கும். நெற்றியில் குட்டிக் கொள்வது,

தோப்புக்கரணம் போடுவது இரண்டையுந்தான் சொல்கிறேன். ஒருத்தர் தோப்புக்கரணம் போட்டால் குழந்தையே முதற்கொண்டு அதை வேடிக்கையாகப் பார்த்துக் கொண்டு, தன் ஸ்வபாவப்படி தானும் அப்படி 'இமிடேட்' பண்ணும்.

இந்தத் தோப்புக்கரணத்தை ஆதியில் உண்டாக்கியவர் மஹாவிஷ்ணுதான். அவர் ஒரு ஸமயம் ஸஹோதரியைப் பார்ப்பதற்காகவும், தமக்கு ரொம்பவும் ஆப்தமான பரமேச்வரனோடு ஸல்லாபிப்பதற்காகவும், மருமான் கணேசரைக் கொஞ்சி விளையாடுவதற்காகவும் கைலாஸத்துக்கு வந்திருந்தார். அப்போது தம்முடைய சக்ரத்தைச் சுற்றிக் குழந்தைக்கு வேடிக்கை காட்டினார். உடனே குழந்தை தும்பிக்கையை நீட்டிச் சக்ரத்தைப் பிடுங்கிக் கொண்டு லபக்கென்று வாய்க்குள் போட்டு நன்றாக அடக்கிக் கொண்டு விட்டது. மஹாவிஷ்ணு நயமாகவும் பயமாகவும் எத்தனை பண்ணியும் அது சக்ரத்தை வெளியே போடமாட்டேனென்று அடம் பண்ணி விளையாடிற்று. அப்போதுதான் மஹாவிஷ்ணு யுக்தி பண்ணி, இப்படிக் காதைப் பிடித்துக் கொண்டு தோப்புக்கரணம் போட்டார். அதைப் பார்த்ததும், எப்போதும் சிரித்த முகமாயிருக்கும் 'ப்ரஸன்ன வதன'க் குழந்தை விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தது. சிரிக்கிறபோது வாயில் அடக்கிக் கொண்ட சக்ரமும் குபுக்கென்று வெளியிலே வந்து விழுந்தது. சடக்கென்று அதை மஹாவிஷ்ணு எடுத்து வைத்துக் கொண்டு விட்டார்.



மஹாவிஷ்ணு கைகளால் காதைப் பிடித்துக் கொண்டது ஸம்ஸ்கிருதத்தில் "தோர்பி: கர்ணம்" என்று குறிப்பிடப்பட்டது. "தோர்பி:" என்றால் "கைகளால்". "கர்ணம்" என்பது காது என்று தெரிந்ததே. கையால் காதைப் பிடித்துக் கொள்ளும் 'தோர்பி(ஹ்) கர்ண'மே தோப்பிக்கரணம், தோப்புக்கரணம் என்றெல்லாம்



தோப்புக்கரணம் போடுவது இரண்டையுந்தான் சொல்கிறேன். ஒருத்தர் தோப்புக்கரணம் போட்டால் குழந்தையே முதற்கொண்டு அதை வேடிக்கையாகப் பார்த்துக் கொண்டு, தன் ஸ்வபாவப்படி தானும் அப்படி 'இமிடேட்' பண்ணும்.

இந்தத் தோப்புக்கரணத்தை ஆதியில் உண்டாக்கியவர் மஹாவிஷ்ணுதான். அவர் ஒரு ஸமயம் ஸஹோதரியைப் பார்ப்பதற்காகவும், தமக்கு ரொம்பவும் ஆப்தமான பரமேச்வரனோடு ஸல்லாபிப்பதற்காகவும், மருமான் கணேசரைக் கொஞ்சி விளையாடுவதற்காகவும் கைலாஸத்துக்கு வந்திருந்தார். அப்போது தம்முடைய சக்ரத்தைச் சுற்றிக் குழந்தைக்கு வேடிக்கை காட்டினார். உடனே குழந்தை தும்பிக்கையை நீட்டிச் சக்ரத்தைப் பிடுங்கிக் கொண்டு லபக்கென்று வாய்க்குள் போட்டு நன்றாக அடக்கிக் கொண்டு விட்டது. மஹாவிஷ்ணு நயமாகவும் பயமாகவும் எத்தனை பண்ணியும் அது சக்ரத்தை வெளியே போடமாட்டேனென்று அடம் பண்ணி விளையாடிற்று. அப்போதுதான் மஹாவிஷ்ணு யுக்தி பண்ணி, இப்படிக் காதைப் பிடித்துக் கொண்டு தோப்புக்கரணம் போட்டார். அதைப் பார்த்ததும், எப்போதும் சிரித்த முகமாயிருக்கும் 'ப்ரஸன்ன வதன'க் குழந்தை விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்தது. சிரிக்கிறபோது வாயில் அடக்கிக் கொண்ட சக்ரமும் குபுக்கென்று வெளியிலே வந்து விழுந்தது. சடக்கென்று அதை மஹாவிஷ்ணு எடுத்து வைத்துக் கொண்டு விட்டார்.



மஹாவிஷ்ணு கைகளால் காதைப் பிடித்துக் கொண்டது ஸம்ஸ்கிருதத்தில் "தோர்பி: கர்ணம்" என்று குறிப்பிடப்பட்டது. "தோர்பி:" என்றால் "கைகளால்". "கர்ணம்" என்பது காது என்று தெரிந்ததே. கையால் காதைப் பிடித்துக் கொள்ளும் 'தோர்பி(ஹ்) கர்ண'மே தோப்பிக்கரணம், தோப்புக்கரணம் என்றெல்லாம்

Supplement to KALKI 21.5.2000 3



ஆகிவிட்டது.

**"ஸ்**வாமி" என்ற பெயர் வாஸ்தவத்தில் ஒருத்தருக்குத்தான் உண்டு. இப்போது நாம் சொல்கிற சாமிகள் எல்லாம் அந்த ஒருவரிட மிருந்துதான் அவர் பெயரையே கடனாகக் கேட்டு வாங்கித் தங்க ளுக்கும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அந்த நிஜமான ஸ்வாமி யாரென்றால் சுப்பிரமணியர்தான்; முருகன், முருகப் பெருமான் என்று இந்தத் தமிழ் தேசத்தில் தனியன் போடு சொல்லப்படுகிறவர்தான். அவர் குழந்தையாக இருக்கிற கடவுள்; குமாரஸ்வாமி.

'முருகன்' 'முருகன்' என்பது தமிழ்நாட்டில் வழங்குகிற வெகுசிறப் பான பெயர். 'முருகன்' என்றாலும் 'அழகானவன்', 'என்றும் இளமை நலம் மாறாத சௌந்தர்யம் வாய்ந்தவன்' என்பதே அர்த்தம்.

அழகு என்றால் அது வெறும் சரீர அழகா? அருளின் அழகுதான் இப்படி தேக காந்தியாக வந்திருக்கிறது. பரமேசுவரன் அம்பாள் சம்பந்தத்தோடு இப்படிக் குமாரனாக ஆவிர்பவித்தபோது வீரம், ஞானம், சௌந்தர்யம் இவற்றோடு அருளிலும் அதிகப் பிரகாசத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

ஸத்-சித்-ஆனந்தம் என்று சொல்வார்கள். அதுதான் பரம்பொருள். இதிலே ஸத்(இருப்பு) பரமேசுவரன்; இருக்கிறோம் என்பதை உணர்ந்து சக்தியைக் காட்டுகிற 'சித்' அம்பாள்; இப்படி உணர்ந்ததில் பேரானந்தம் பிறக்கிறது. இந்த ஆனந்தமே சுப்ரம் மணியர். சிவம் என்கிற மங்களமும், அம்பாள் என்கிற காருண்யமும் கலந்த பரம உத்திருஷ்டமான ஸ்தானம் அவர். சச்சிதானந்தத்தையே 'சோமாஸ் கந்தர்' என்று





ஆகிவிட்டது.

**"ஸ்**வாமி" என்ற பெயர் வாஸ்தவத்தில் ஒருத்தருக்குத்தான் உண்டு. இப்போது நாம் சொல்கிற சாமிகள் எல்லாம் அந்த ஒருவரிட மிருந்துதான் அவர் பெயரையே கடனாகக் கேட்டு வாங்கித் தங்க ளுக்கும் வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அந்த நிஜமான ஸ்வாமி யாரென்றால் சுப்பிரமணியர்தான்; முருகன், முருகப் பெருமான் என்று இந்தத் தமிழ் தேசத்தில் தனியன் போடு சொல்லப்படுகிறவர்தான். அவர் குழந்தையாக இருக்கிற கடவுள்; குமாரஸ்வாமி.

'முருகன்' 'முருகன்' என்பது தமிழ்நாட்டில் வழங்குகிற வெகுசிறப் பான பெயர். 'முருகன்' என்றாலும் 'அழகானவன்', 'என்றும் இளமை நலம் மாறாத சௌந்தர்யம் வாய்ந்தவன்' என்பதே அர்த்தம்.

அழகு என்றால் அது வெறும் சரீர அழகா? அருளின் அழகுதான் இப்படி தேக காந்தியாக வந்திருக்கிறது. பரமேசுவரன் அம்பாள் சம்பந்தத்தோடு இப்படிக் குமாரனாக ஆவிர்பவித்தபோது வீரம், ஞானம், சௌந்தர்யம் இவற்றோடு அருளிலும் அதிகப் பிரகாசத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார்.

ஸத்-சித்-ஆனந்தம் என்று சொல்வார்கள். அதுதான் பரம்பொருள். இதிலே ஸத்(இருப்பு) பரமேசுவரன்; இருக்கிறோம் என்பதை உணர்ந்து சக்தியைக் காட்டுகிற 'சித்' அம்பாள்; இப்படி உணர்ந்ததில் பேரானந்தம் பிறக்கிறது. இந்த ஆனந்தமே சுப்ரம் மணியர். சிவம் என்கிற மங்களமும், அம்பாள் என்கிற காருண்யமும் கலந்த பரம உத்திருஷ்டமான ஸ்தானம் அவர். சச்சிதானந்தத்தையே 'சோமாஸ் கந்தர்' என்று

4 Supplement to KALKI 21.5.2000

தமிழ்நாட்டுச் சிவாலயங்களில் எல்லாம் வைத்து உற்சவம் நடத்துகிறோம். ஈசுவரனுக்கும் அம்பாளுக்கும் நடுவே, இருவருக்கும் பொதுவான மத்ய ஸ்தானமாக, சுப்பிரமணியர் குழந்தை ரூபத்தில் இருப்பார். உமையோடும், ஸ்கந்தனோடும் கூடியவர் (ஸஹ உமா ஸ்கந்தர்) தான் ஸோமாஸ்கந்தரான பரமேசுவரன். 'பிள்ளையார்' என்று விக்நேசுவரரையே சொல்கிறபோதிலும் 'குமரன்' என்று சிறப்பிக்கப்படுகிற இளைய பிள்ளையை மட்டும் தாய் தந்தையரோடு வைத்து மூன்று மூர்த்தியாகச் செய்திருக்கிறார்கள். 'பிள்ளை என்றால் இவன்தான்' என்று எல்லோரும் பெருமைப்படுகிற மாதிரி, பிதாவே பெருமைப்பட்டு தோல்வியை ஒப்புக் கொள்கிற மாதிரி, இப்படி உத்தம அம்சங்கள் எல்லாவற்றிலும் உச்சமாக இருக்கிறார் சுப்ரம்மணியஸ்வாமி.



சிவம்தான் ஸகல க்ருத்யங்களுக்கும் காரணமான முழு முதற்கடவுள். ஸகல க்ருத்யமும் அடங்கிப்போன சாந்தமும் அது தான். ஜீவனுக்குக் கர்மா என்ற ஒன்று ஏற்பட்ட பின் அதை அநுபவித்தால்தானே தீர்க்க முடியும்? அதற்கு 1. சரீரம், 2. அதன் புறக்கரணம் மட்டுமின்றி அகக்கரணம் (மனஸ், புத்தி முதலியவை). 3. இவற்றை வைத்துக் கொண்டு வினையை அறுவடை செய்கிற களமாக உள்ள இந்த ஜகத் என்பது, 4. அறுவடையை அநுபவிப்பது என்பவை தேவையாயிருக்கின்றன. (முறையே) தநு. கரணம், புவநம், போகம் என்று சொல்லும் இந்த நாலையும் பரமாத்மா கொடுப்பதுதான் 'அநுக்ரஹம்'. இது சின்ன அநுக்ரஹம். பெரிய அநுக்ரஹம், கடைசியில் இதெல்லாவற்றிலிருந்தும், அதாவது திரோதானத்தினால் உண்டான மாயா லோக வாழ்க்கையி



தமிழ்நாட்டுச் சிவாலயங்களில் எல்லாம் வைத்து உற்சவம் நடத்துகிறோம். ஈசுவரனுக்கும் அம்பாளுக்கும் நடுவே, இருவருக்கும் பொதுவான மத்ய ஸ்தானமாக, சுப்பிரமணியர் குழந்தை ரூபத்தில் இருப்பார். உமையோடும், ஸ்கந்தனோடும் கூடியவர் (ஸஹ உமா ஸ்கந்தர்) தான் ஸோமாஸ்கந்தரான பரமேசுவரன். 'பிள்ளையார்' என்று விக்நேசுவரரையே சொல்கிறபோதிலும் 'குமரன்' என்று சிறப்பிக்கப்படுகிற இளைய பிள்ளையை மட்டும் தாய் தந்தையரோடு வைத்து மூன்று மூர்த்தியாகச் செய்திருக்கிறார்கள். 'பிள்ளை என்றால் இவன்தான்' என்று எல்லோரும் பெருமைப்படுகிற மாதிரி, பிதாவே பெருமைப்பட்டு தோல்வியை ஒப்புக் கொள்கிற மாதிரி, இப்படி உத்தம அம்சங்கள் எல்லாவற்றிலும் உச்சமாக இருக்கிறார் சுப்ரம்மணியஸ்வாமி.



சிவம்தான் ஸகல க்ருத்யங்களுக்கும் காரணமான முழு முதற்கடவுள். ஸகல க்ருத்யமும் அடங்கிப்போன சாந்தமும் அது தான். ஜீவனுக்குக் கர்மா என்ற ஒன்று ஏற்பட்ட பின் அதை அநுபவித்தால்தானே தீர்க்க முடியும்? அதற்கு 1. சரீரம், 2. அதன் புறக்கரணம் மட்டுமின்றி அகக்கரணம் (மனஸ், புத்தி முதலியவை). 3. இவற்றை வைத்துக் கொண்டு வினையை அறுவடை செய்கிற களமாக உள்ள இந்த ஜகத் என்பது, 4. அறுவடையை அநுபவிப்பது என்பவை தேவையாயிருக்கின்றன. (முறையே) தநு. கரணம், புவநம், போகம் என்று சொல்லும் இந்த நாலையும் பரமாத்மா கொடுப்பதுதான் 'அநுக்ரஹம்'. இது சின்ன அநுக்ரஹம். பெரிய அநுக்ரஹம், கடைசியில் இதெல்லாவற்றிலிருந்தும், அதாவது திரோதானத்தினால் உண்டான மாயா லோக வாழ்க்கையி

Supplement to KALKI 21.5.2000 5

விருந்தே, ஜீவனை விடுவித்து மோக்ஷ பதத்தைத் தருவதுதான். நடராஜாவின் குஞ்சிதபதம் அந்தப் பதத்தைத்தான் தருகிறது. அதனால்தான் தூக்கிய திருவடி என்று அதற்கு ஏற்றம்.

நடராஜாவின் நாட்டியத்திற்குப் பஞ்சக்ருத்ய பரமானந்தத் தாண்டவம் என்று பெயர். ஒரு கையில் அவர் பிடித்துக் கொண்டிருக்கிற டமருகத்தின் சப்தத்தினால்தான் ஸ்ருஷ்டி உண்டாகிறது. அபயஹஸ்தத்தினால் 'ஸ்திதி' என்ற பரிபாலனம் செய்கிறார். இன்னொரு கையிலிருக்கும் அக்னியால் ஸம்ஹாரம் பண்ணுகிறார். முஸலகனின் மேல ஊன்றியிருக்கிற அவருடைய வலது பாதத்தால திரோதான க்ருத்யத்தை நடத்துகிறார். முடிவாக, குஞ்சித பாதம் என்ற இடது திருவடியைத் தூக்கிக் காட்டி, ''இதைப் பிடித்துக் கொண்டால் அதுதான் மோக்ஷாநுக்ரஹம்'' என்று தெரிவிக்கிறார்.



'ராமன்' என்றாலே ஆனந்தமாக இருப்பவன் என்று அர்த்தம்; மற்றவர்களுக்கு ஆனந்தத்தைத் தருகிறவன் என்றும் அர்த்தம். எத்தனைவிதமான துக்கங்கள் வந்தாலும், அதனால் மனம் சலனம் அடையாமல் ஆனந்தமாக தர்மத்தையே அனுசரித்துக் கொண்டு ஒருத்தன் இருந்தான் என்றால் அது ஸ்ரீ ராமன்தான். வெளிப்பார்வைக்கு அவன் துக்கப்பட்டதாகத் தெரிந்தாலும், உள்ளுக்குள்ளே ஆனந்தமாகவே இருந்தான்.

சுக துக்கங்களில் சலனமடையாமல், தான் ஆனந்தமாக இருந்து கொண்டு, மற்றவர்களுக்கும் ஆனந்தத்தை ஊட்டுவது தான் யோகம். அப்படியிருப்பவனே யோகி. இவ்வாறு மனசு அலையாமல் கட்டிப் போடுவதற்குச் சாமானிய



விருந்தே, ஜீவனை விடுவித்து மோக்ஷ பதத்தைத் தருவதுதான். நடராஜாவின் குஞ்சிதபதம் அந்தப் பதத்தைத்தான் தருகிறது. அதனால்தான் தூக்கிய திருவடி என்று அதற்கு ஏற்றம்.

நடராஜாவின் நாட்டியத்திற்குப் பஞ்சக்ருத்ய பரமானந்தத் தாண்டவம் என்று பெயர். ஒரு கையில் அவர் பிடித்துக் கொண்டிருக்கிற டமருகத்தின் சப்தத்தினால்தான் ஸ்ருஷ்டி உண்டாகிறது. அபயஹஸ்தத்தினால் 'ஸ்திதி' என்ற பரிபாலனம் செய்கிறார். இன்னொரு கையிலிருக்கும் அக்னியால் ஸம்ஹாரம் பண்ணுகிறார். முஸலகனின் மேல ஊன்றியிருக்கிற அவருடைய வலது பாதத்தால திரோதான க்ருத்யத்தை நடத்துகிறார். முடிவாக, குஞ்சித பாதம் என்ற இடது திருவடியைத் தூக்கிக் காட்டி, ''இதைப் பிடித்துக் கொண்டால் அதுதான் மோக்ஷாநுக்ரஹம்'' என்று தெரிவிக்கிறார்.



'ராமன்' என்றாலே ஆனந்தமாக இருப்பவன் என்று அர்த்தம்; மற்றவர்களுக்கு ஆனந்தத்தைத் தருகிறவன் என்றும் அர்த்தம். எத்தனைவிதமான துக்கங்கள் வந்தாலும், அதனால் மனம் சலனம் அடையாமல் ஆனந்தமாக தர்மத்தையே அனுசரித்துக் கொண்டு ஒருத்தன் இருந்தான் என்றால் அது ஸ்ரீ ராமன்தான். வெளிப்பார்வைக்கு அவன் துக்கப்பட்டதாகத் தெரிந்தாலும், உள்ளுக்குள்ளே ஆனந்தமாகவே இருந்தான்.

சுக துக்கங்களில் சலனமடையாமல், தான் ஆனந்தமாக இருந்து கொண்டு, மற்றவர்களுக்கும் ஆனந்தத்தை ஊட்டுவது தான் யோகம். அப்படியிருப்பவனே யோகி. இவ்வாறு மனசு அலையாமல் கட்டிப் போடுவதற்குச் சாமானிய

6 Supplement to KALKI 21.5.2000

மனிதர்களுக்கான வழி, வேத சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற தர்மங்களை ஒழுக்கத்தோடு, கட்டுப்பாட்டோடு பின்பற்றி வாழ்வது தான். சொந்த விருப்பு வெறுப்புக்கு இலக்காகாமல் வேதம் விதிக்கிற தர்மப்படி வாழ ஆரம்பித்து விட்டால், தானாகவே மனசின் சஞ்சலம் குறைந்து, அது தெளிய ஆரம்பிக்கும். இந்தத் தெளிவால் மனசு எப்போதும் ஆனந்தமாக, இலேசாக இருக்கும். இந்த சித்த சுத்தி மோக்ஷத்திலேயே கொண்டு சேர்த்து விடும்.

ஜனங்களுக்கெல்லாம் ஒரு பெரிய உதாரணமாக வேத தர்மங்களை அப்படியே அநுசரித்து அநுசரித்து ஆனந்தமாக வாழ்ந்து காட்டுவதற்காக ஸ்ரீமந் நாராயணனே ராமனாக அவதரித்தார். ராம வாக்கியத்தை எங்கே பார்த்தாலும், 'இது ராம பிராயம்' என்று அவர் சொல்லவே மாட்டார். 'ரிஷிகள் இப்படிச் சொல்கிறார்கள்; சாஸ்திரம் இப்படிச் சொல்கிறது' என்றே அடக்கமாகச் சொல்வார். சகல வேதங்களின் பயனாக அறியப்பட வேண்டிய பரமபுருஷன் எவனோ, அவனே அந்த வேத தர்மத்துக்கு முழுக்க முழுக்கக் கட்டுப்பட்டு, அப்படிக் கட்டுப்பட்டு இருப்பதிலேயே ஆனந்தம் இருக்கிறது என்று காட்டிக் கொண்டு ராமனாக வேஷம் போட்டுக் கொண்டு வாழ்ந்தான்.



'கிருஷ்ண' என்றால் 'கறுப்பு' என்று பொருள். அவனது மேனியும் கறுப்பு.

இப்படி ஒரே கறுப்பான சமயத்தில் (இரவில்)தானும் கறுப்பாக ஆவிர்ப்பவித்தாலும் அவனே ஞான ஒளி. நல்ல கானமேகங்களிடையே



மனிதர்களுக்கான வழி, வேத சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற தர்மங்களை ஒழுக்கத்தோடு, கட்டுப்பாட்டோடு பின்பற்றி வாழ்வது தான். சொந்த விருப்பு வெறுப்புக்கு இலக்காகாமல் வேதம் விதிக்கிற தர்மப்படி வாழ ஆரம்பித்து விட்டால், தானாகவே மனசின் சஞ்சலம் குறைந்து, அது தெளிய ஆரம்பிக்கும். இந்தத் தெளிவால் மனசு எப்போதும் ஆனந்தமாக, இலேசாக இருக்கும். இந்த சித்த சுத்தி மோக்ஷத்திலேயே கொண்டு சேர்த்து விடும்.

ஜனங்களுக்கெல்லாம் ஒரு பெரிய உதாரணமாக வேத தர்மங்களை அப்படியே அநுசரித்து அநுசரித்து ஆனந்தமாக வாழ்ந்து காட்டுவதற்காக ஸ்ரீமந் நாராயணனே ராமனாக அவதரித்தார். ராம வாக்கியத்தை எங்கே பார்த்தாலும், 'இது ராம பிராயம்' என்று அவர் சொல்லவே மாட்டார். 'ரிஷிகள் இப்படிச் சொல்கிறார்கள்; சாஸ்திரம் இப்படிச் சொல்கிறது' என்றே அடக்கமாகச் சொல்வார். சகல வேதங்களின் பயனாக அறியப்பட வேண்டிய பரமபுருஷன் எவனோ, அவனே அந்த வேத தர்மத்துக்கு முழுக்க முழுக்கக் கட்டுப்பட்டு, அப்படிக் கட்டுப்பட்டு இருப்பதிலேயே ஆனந்தம் இருக்கிறது என்று காட்டிக் கொண்டு ராமனாக வேஷம் போட்டுக் கொண்டு வாழ்ந்தான்.



'கிருஷ்ண' என்றால் 'கறுப்பு' என்று பொருள். அவனது மேனியும் கறுப்பு.

இப்படி ஒரே கறுப்பான சமயத்தில் (இரவில்)தானும் கறுப்பாக ஆவிர்ப்பவித்தாலும் அவனே ஞான ஒளி. நல்ல கானமேகங்களிடையே

மின்னல் மாதிரி இத்தனை இருட்டுக்கு நடுவே தோன்றிய ஞான ஒளி. ஞான ஒளியானதால்தான் மங்காத பிரகாசமுடையதாய் இன்றும் என்றும் ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது. அஞ்ஞானத்தால் இருண்டிருக்கும் உலகத்தில்தான் ஞானத்தின் மகிமை அதிகமாக விளங்கும். அப்படியே கிருஷ்ணனின் பெருமை பிரகாசிக்கிறது. அவனுடைய கீதை உலகெங்கும் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அவனுடைய லீலா விநோதங்கள் நிறைந்திருக்கும் ஸ்ரீ பாகவதம் புராண சிரேஷ்டமாக விளங்குகிறது.



உடலுக்கு ஒளியளிப்பது கண். உயிருக்கு ஒளி தருவது ஞானம். உலக உயிர்களுக்கெல்லாம் ஞான ஒளி தருகிற கண்ணாக இருப்பவனே கண்ணன். நம் தென்னாட்டில் அவன் கிருஷ்ணன் மாத்திரம் அல்லாமல் கண்ணனும் ஆகி விட்டான். அகக் கண்ணையும் புறக் கண்ணையும் அம்ருதத்தில் மூழ்கடிக்கும் வடிவம் அவனுடையது. நம் காதின் வழியாக வேணுவினால் கீத அம்ருதத்தையும், உபதேச சாரமான கீதாம்ருதத்தையும் உட்செலுத்திக் குளிரவைக்கும் அந்தக் கண்ணனே நம் உலகுக்குக் கண்; கறுப்பினிடையே விளங்கும் ஒளிகாட்டும் கண்; அந்த ஒளியும் அவன்தான்.

ஸ்ரீ கிருஷ்ணன் ஒரே அவதாரத்தில் அநேக விதமான லீலைகளைச் செய்து நடித்திருக்கிறான். மிகவும் சேஷ்டை செய்யும் குழந்தை, பிறகு மாடு மேய்க்கும் பையன், குழலூதிக் கூத்தாடும் கலைஞன், இவற்றை அநுபவிக்கும் ரசிகன். (சாணூரன், முஷ்டிகன் என்ற கம்ஸனைச் சேர்ந்த மகாமல்லர்களை ஜயித்தபோது) மல்யுத்தத்தில் தேர்ந்தவன், (நக்னஜித் என்ற ராஜாவின் பெண்ணான ஸத்யை என்பவளைக் கலியாணம் செய்து



மின்னல் மாதிரி இத்தனை இருட்டுக்கு நடுவே தோன்றிய ஞான ஒளி. ஞான ஒளியானதால்தான் மங்காத பிரகாசமுடையதாய் இன்றும் என்றும் ஜ்வலித்துக் கொண்டிருக்கிறது. அஞ்ஞானத்தால் இருண்டிருக்கும் உலகத்தில்தான் ஞானத்தின் மகிமை அதிகமாக விளங்கும். அப்படியே கிருஷ்ணனின் பெருமை பிரகாசிக்கிறது. அவனுடைய கீதை உலகெங்கும் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அவனுடைய லீலா விநோதங்கள் நிறைந்திருக்கும் ஸ்ரீ பாகவதம் புராண சிரேஷ்டமாக விளங்குகிறது.



உடலுக்கு ஒளியளிப்பது கண். உயிருக்கு ஒளி தருவது ஞானம். உலக உயிர்களுக்கெல்லாம் ஞான ஒளி தருகிற கண்ணாக இருப்பவனே கண்ணன். நம் தென்னாட்டில் அவன் கிருஷ்ணன் மாத்திரம் அல்லாமல் கண்ணனும் ஆகி விட்டான். அகக் கண்ணையும் புறக் கண்ணையும் அம்ருதத்தில் மூழ்கடிக்கும் வடிவம் அவனுடையது. நம் காதின் வழியாக வேணுவினால் கீத அம்ருதத்தையும், உபதேச சாரமான கீதாம்ருதத்தையும் உட்செலுத்திக் குளிரவைக்கும் அந்தக் கண்ணனே நம் உலகுக்குக் கண்; கறுப்பினிடையே விளங்கும் ஒளிகாட்டும் கண்; அந்த ஒளியும் அவன்தான்.

ஸ்ரீ கிருஷ்ணன் ஒரே அவதாரத்தில் அநேக விதமான லீலைகளைச் செய்து நடித்திருக்கிறான். மிகவும் சேஷ்டை செய்யும் குழந்தை, பிறகு மாடு மேய்க்கும் பையன், குழலூதிக் கூத்தாடும் கலைஞன், இவற்றை அநுபவிக்கும் ரசிகன். (சாணூரன், முஷ்டிகன் என்ற கம்ஸனைச் சேர்ந்த மகாமல்லர்களை ஜயித்தபோது) மல்யுத்தத்தில் தேர்ந்தவன், (நக்னஜித் என்ற ராஜாவின் பெண்ணான ஸத்யை என்பவளைக் கலியாணம் செய்து

8 Supplement to KALKI 21.5.2000

கொள்வதற்கு நிபந்தனையாக ஏழு காளைகளை அடக்க வேண்டும் என்ற போது) காளை மாடுகளை அடக்கிக் கட்டுபவன், ராஜதந்திர நிபுணன், தூது செல்பவன், ஸாரதி. துரௌபதி போல் தீர்க்க முடியாத கஷ்டத்தில் சிக்கிக் கொண்டவர்களை காக்கும் ஆபத்பாந்தவன், குசேலர் போன்ற அநாதர்களை ரட்சிக்கும் பக்த வத்ஸலன், பீஷ்மருக்கு முக்தியே அளித்தவன், பீஷ்மருக்கு மாத்திரமல்ல – தன்னைக் கொல்லும்படியான அம்பைப் பிரேயாகித்த வேடனுக்கும் முக்தி கொடுப்பவன் – இப்படியெல்லாம் லீலை செய்திருக்கிறான். உலகத்தில் நல்லதும் பொல்லாததுமாக, அநேக விதமான மனப் போக்கை உடையவர்களாக ஜீவர்கள் அமைந்திருக்கிறார்கள். வீரனும் சூரனும் திருடனும் ஸ்திரீலோலனும் பேதையும் உழைப்பாளியும் கிழ வனும் குழந்தையும் இறுமாப்புடையவனும் பரோபகாரியும் மனமுருகியவனும் கல்நெஞ்சனும் கஞ்சனும் உதாரியும் மூடனும் கல்விமானும் யோகியும் ஞானியுமாகப் பலவிதமான மனநிலையை உடையவர்கள் உலகத்தில் இருக்கிறார்கள். இவர்களில் தீய அம்சம் உள்ளவர்களை முற்றிலும் நல்ல அம்சங்களைக் கொண்ட ஒரு மகாத்மா அல்லது தெய்வ அவதாரத்தால் ஆகர்ஷிக்க முடியாமலே போகலாம். ஒரு திருடனுக்கு இன்னொரு திருடனைப் பற்றிய கதையே ரசமாயிருக்கும். ஓர் உல்லாச புருஷனுக்கு இன்னோர் உல்லாச புருஷனின் கேளிக்கைகளே சுவாரசியமாக இருக்கும். ஸ்ரீகிருஷ்ணன் நல்லவர்களை மட்டுமின்றி மற்றோரையும் கவரவேண்டுமென்றே ஜாரசோர சிகாமணியாக, கபடனாக, மாயனாக, தந்திரசாலியாக எல்லாமும் வேஷம் போட்டான். பற்பல போக்குக் கொண்ட மக்கள் எல்லாரையும் தனது வகை வகைகளான லீலைகளால் தனித்தனியே ஆகர்ஷித்துத் தன்னுடைய கருணைக்கும் அதன் மூலம் ஞானத்துக்கும்





கொள்வதற்கு நிபந்தனையாக ஏழு காளைகளை அடக்க வேண்டும் என்ற போது) காளை மாடுகளை அடக்கிக் கட்டுபவன், ராஜதந்திர நிபுணன், தூது செல்பவன், ஸாரதி. துரௌபதி போல் தீர்க்க முடியாத கஷ்டத்தில் சிக்கிக் கொண்டவர்களை காக்கும் ஆபத்பாந்தவன், குசேலர் போன்ற அநாதர்களை ரட்சிக்கும் பக்த வத்ஸலன், பீஷ்மருக்கு முக்தியே அளித்தவன், பீஷ்மருக்கு மாத்திரமல்ல – தன்னைக் கொல்லும்படியான அம்பைப் பிரேயாகித்த வேடனுக்கும் முக்தி கொடுப்பவன் – இப்படியெல்லாம் லீலை செய்திருக்கிறான். உலகத்தில் நல்லதும் பொல்லாததுமாக, அநேக விதமான மனப் போக்கை உடையவர்களாக ஜீவர்கள் அமைந்திருக்கிறார்கள். வீரனும் சூரனும் திருடனும் ஸ்திரீலோலனும் பேதையும் உழைப்பாளியும் கிழ வனும் குழந்தையும் இறுமாப்புடையவனும் பரோபகாரியும் மனமுருகியவனும் கல்நெஞ்சனும் கஞ்சனும் உதாரியும் மூடனும் கல்விமானும் யோகியும் ஞானியுமாகப் பலவிதமான மனநிலையை உடையவர்கள் உலகத்தில் இருக்கிறார்கள். இவர்களில் தீய அம்சம் உள்ளவர்களை முற்றிலும் நல்ல அம்சங்களைக் கொண்ட ஒரு மகாத்மா அல்லது தெய்வ அவதாரத்தால் ஆகர்ஷிக்க முடியாமலே போகலாம். ஒரு திருடனுக்கு இன்னொரு திருடனைப் பற்றிய கதையே ரசமாயிருக்கும். ஓர் உல்லாச புருஷனுக்கு இன்னோர் உல்லாச புருஷனின் கேளிக்கைகளே சுவாரசியமாக இருக்கும். ஸ்ரீகிருஷ்ணன் நல்லவர்களை மட்டுமின்றி மற்றோரையும் கவரவேண்டுமென்றே ஜாரசோர சிகாமணியாக, கபடனாக, மாயனாக, தந்திரசாலியாக எல்லாமும் வேஷம் போட்டான். பற்பல போக்குக் கொண்ட மக்கள் எல்லாரையும் தனது வகை வகைகளான லீலைகளால் தனித்தனியே ஆகர்ஷித்துத் தன்னுடைய கருணைக்கும் அதன் மூலம் ஞானத்துக்கும்



Supplement to KALKI 21.5.2000 9



பாத்திரமாக்கிக் கடைத்தேற வைத்த ஸ்ரீ கிருஷ்ணாவதாரமே பரிபூர்ணாவதாரம்.

'நவநீதம்' என்றால் புதுசாக எடுத்தது என்று அர்த்தம். 'நவ' – புதுசாக; 'நீதம்' – எடுக்கப்பட்டது. புத்தம் புதுசாகக் கார்த்தால வேளையில் பசும் பாலில் உறைகுத்தி ஸாயங்காலமே அந்தத் தயிரைச் சிலுப்பி எடுக்கிற வெண்ணெய்தான் நவநீதம்.

நாமெல்லாம் பசுக்கள். நம் மனஸு வெள்ளை வெளேரென்று பாலாக இருக்கணும். அப்போதுதான் கன்னங் கரேலென்று இருக்கிறதால் கிருஷ்ணன் என்றே பேர் வைத்துக் கொண்டவன் நம்மிடம் வருவான். அது வெறுப்பைத் தருகிற கறுப்பு அல்ல; மோஹத்தை உண்டாக்குகிற மேகத்தின் கறுப்பு. கனச்யாம், கனச்யாம் என்கிற போது 'கன' என்றால் 'மேகம்' என்றே அர்த்தம். 'கார்வண்ணன்' என்று சொல்வார்கள். மேகம் எத்தனைக்கெத்தனை கறுப்போ அத்தனைக்கத்தனை அதிக ஜலத்தைக் கொட்டும். அந்த ஜலம் கறுப்பாகவா இருக்கிறது? இப்படிப் பரம பிரேம தாரையைப் பிரவாஹமாகக் கொட்டுகிறவனே கிருஷ்ணன். அடர்ந்த மேகத்திலிருந்தே மஹா ஜ்யோதிஸ்ஸான மின்னல்கள் தோன்றுகிற மாதிரி, ஞானப் பிரகாசம் பளிச்சுப் பளிச்சென்று வெட்ட கீதாசாரியனாக இருக்கிறான் அந்தக் கொண்டல் வண்ணன். இப்படியே அவன் வெளியே கபடும் சூதும் மாயமுமாகத் தெரிந்தாலும் நாம் மனஸைப் பால் வெளுப்பாக்கிக் கொண்டால் பரமசுத்தமான ப்ரேமையோடு நம்மை பாலிக்க, கோபாலனாக வருவான்.

அப்படியே அந்தப் பாலை எடுத்துக் குடிப்பதில்லை அவன். அது தயிராகி அதிலிருந்து புத்தம் புது வெண்ணெய் எடுத்தாகணும். அந்த நவநீதத்தை உண்ணத்தான் வருவான்;





பாத்திரமாக்கிக் கடைத்தேற வைத்த ஸ்ரீ கிருஷ்ணாவதாரமே பரிபூர்ணாவதாரம்.

'நவநீதம்' என்றால் புதுசாக எடுத்தது என்று அர்த்தம். 'நவ' – புதுசாக; 'நீதம்' – எடுக்கப்பட்டது. புத்தம் புதுசாகக் கார்த்தால வேளையில் பசும் பாலில் உறைகுத்தி ஸாயங்காலமே அந்தத் தயிரைச் சிலுப்பி எடுக்கிற வெண்ணெய்தான் நவநீதம்.

நாமெல்லாம் பசுக்கள். நம் மனஸு வெள்ளை வெளேரென்று பாலாக இருக்கணும். அப்போதுதான் கன்னங் கரேலென்று இருக்கிறதால் கிருஷ்ணன் என்றே பேர் வைத்துக் கொண்டவன் நம்மிடம் வருவான். அது வெறுப்பைத் தருகிற கறுப்பு அல்ல; மோஹத்தை உண்டாக்குகிற மேகத்தின் கறுப்பு. கனச்யாம், கனச்யாம் என்கிற போது 'கன' என்றால் 'மேகம்' என்றே அர்த்தம். 'கார்வண்ணன்' என்று சொல்வார்கள். மேகம் எத்தனைக்கெத்தனை கறுப்போ அத்தனைக்கத்தனை அதிக ஜலத்தைக் கொட்டும். அந்த ஜலம் கறுப்பாகவா இருக்கிறது? இப்படிப் பரம பிரேம தாரையைப் பிரவாஹமாகக் கொட்டுகிறவனே கிருஷ்ணன். அடர்ந்த மேகத்திலிருந்தே மஹா ஜ்யோதிஸ்ஸான மின்னல்கள் தோன்றுகிற மாதிரி, ஞானப் பிரகாசம் பளிச்சுப் பளிச்சென்று வெட்ட கீதாசாரியனாக இருக்கிறான் அந்தக் கொண்டல் வண்ணன். இப்படியே அவன் வெளியே கபடும் சூதும் மாயமுமாகத் தெரிந்தாலும் நாம் மனஸைப் பால் வெளுப்பாக்கிக் கொண்டால் பரமசுத்தமான ப்ரேமையோடு நம்மை பாலிக்க, கோபாலனாக வருவான்.

அப்படியே அந்தப் பாலை எடுத்துக் குடிப்பதில்லை அவன். அது தயிராகி அதிலிருந்து புத்தம் புது வெண்ணெய் எடுத்தாகணும். அந்த நவநீதத்தை உண்ணத்தான் வருவான்;

10 Supplement to KALKI 21.5.2000

அதுவும் திருட்டுத்தனமாக!

பக்தி தாபத்திலே வெள்ளை மனஸைக் காய்ச்சினால் அது பொங்கும். அப்புறம் அந்த உணர்ச்சி வேகம் அடங்க அதைக் கொஞ்சம் ஆற்றி சாந்தத்தை உறை குத்தனும். பால் ஓடுகிறது போல, ஆடுகிறது போலத் தயிர் ஓடுவதில்லை. ஆடுவதில்லை; அப்படியே கெட்டியாக, சாந்தமாக இருந்து விடுகிறது. அவனுக்கு சாந்தமும் வேணும்; லீலையின் சலனமும் வேண்டும். அப்போதுதான் முடிவிலே சாந்தத்திலேயே எல்லா சலனமும் அடங்கியிருப்பதும், அத்தனை சலனத்துக்கும் அடிப்படையாக சாந்தமே இருந்து கொண்டிருப்பதும் தெரியும்.

• மீனாக்ஷி- சுந்தரேஸ்வரர்



ஓடாமல் ஆடாமல் சாந்தமாக இருக்கிற தயிரைப் போட்டுக் கடை கடை என்று கடைய வேண்டியிருக்கிறது. ஹ்ருதயப் பானைக்குள் இருக்கிற தயிரில் ஸத்யத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தை (இதை ஞான விசாரம், ஆத்ம விசாரம் என்பார்கள்) மத்தாகப் போட்டு, ஒரு முக சிந்தனை என்ற கயிற்றால் கடைந்தால் பூர்ணத்வம் என்ற வெண்ணெய் வரும். அதைத் துளிக்கூடப் பழசாகிவிடாமல், அது நவநீதமாக இருக்கிறபோதே வந்து எடுத்துக் கொண்டு விடுவான். பூர்ணத்வம் இந்த நம்முடைய சரீரப் பானைக்குள் எப்படி இருக்க முடியும்? அதனால் பூர்ணனான அவனிடமே போய்விடும். தனியாக நாம் என்று ஒன்று இல்லாமல் அவனுக்குள் அவனாகவே போய்விடுவோம் என்று அர்த்தம்.

திருட்டுத்தனமாக எடுத்துக் கொள்கிறான் என்று ஏன் சொல்ல வேண்டும்? பகவான் ஸாதாரண அதிதி மாதிரி



அதுவும் திருட்டுத்தனமாக!

பக்தி தாபத்திலே வெள்ளை மனஸைக் காய்ச்சினால் அது பொங்கும். அப்புறம் அந்த உணர்ச்சி வேகம் அடங்க அதைக் கொஞ்சம் ஆற்றி சாந்தத்தை உறை குத்தனும். பால் ஓடுகிறது போல, ஆடுகிறது போலத் தயிர் ஓடுவதில்லை. ஆடுவதில்லை; அப்படியே கெட்டியாக, சாந்தமாக இருந்து விடுகிறது. அவனுக்கு சாந்தமும் வேணும்; லீலையின் சலனமும் வேண்டும். அப்போதுதான் முடிவிலே சாந்தத்திலேயே எல்லா சலனமும் அடங்கியிருப்பதும், அத்தனை சலனத்துக்கும் அடிப்படையாக சாந்தமே இருந்து கொண்டிருப்பதும் தெரியும்.

• மீனாக்ஷி- சுந்தரேஸ்வரர்



ஓடாமல் ஆடாமல் சாந்தமாக இருக்கிற தயிரைப் போட்டுக் கடை கடை என்று கடைய வேண்டியிருக்கிறது. ஹ்ருதயப் பானைக்குள் இருக்கிற தயிரில் ஸத்யத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தை (இதை ஞான விசாரம், ஆத்ம விசாரம் என்பார்கள்) மத்தாகப் போட்டு, ஒரு முக சிந்தனை என்ற கயிற்றால் கடைந்தால் பூர்ணத்வம் என்ற வெண்ணெய் வரும். அதைத் துளிக்கூடப் பழசாகிவிடாமல், அது நவநீதமாக இருக்கிறபோதே வந்து எடுத்துக் கொண்டு விடுவான். பூர்ணத்வம் இந்த நம்முடைய சரீரப் பானைக்குள் எப்படி இருக்க முடியும்? அதனால் பூர்ணனான அவனிடமே போய்விடும். தனியாக நாம் என்று ஒன்று இல்லாமல் அவனுக்குள் அவனாகவே போய்விடுவோம் என்று அர்த்தம்.

திருட்டுத்தனமாக எடுத்துக் கொள்கிறான் என்று ஏன் சொல்ல வேண்டும்? பகவான் ஸாதாரண அதிதி மாதிரி

Supplement to KALKI 21.5.2000 11

வந்தால் அவனை வேறேயாக வைத்து ராஜோபசாரம் பண்ணி conscious ஆகத்தானே (புத்தி பூர்வமாகத்தானே) வெண்ணெயைத் தருவோம்? அப்படி புத்தி பூர்வமாக நம்மை



அவனிடம் சரணாகதி பண்ணிக் கொள்ள நமக்கு அப்போது புத்தி வருமோ, வராதோ? 'சரணாகதி பண்ணுகிறேன்' என்கிறபோதே அப்படிச் சொல்கிற ஒரு 'நான்' தனியாக வந்துவிடுகிறதே! இதனால்தான் நமக்குத் தெரியாமல் நாம் unconscious ஆக இருக்கிறபோதே நம்மை எடுத்துக் கொண்டால்தான் உண்டு என்று திருடனாக வருகிறான்!

ஆலமரத்தின் கீழே உட்கார்ந்து கொண்டு ஞானோபதேசம் பண்ணுகிறவர் பரமேச்வரன்; வட வ்ருக்ஷ மூல நிவாஸி. மஹா விஷ்ணு ஆலிலை மேலே படுத்துக் கொண்டு ஞான உபதேசத்துக்கு நேர் ஆப்போஸிட்டாகத் தோன்றும் மாயா விலாஸத்தைக் காட்டுகிற வட பத்ரசாயி. மாயா விலாஸத்தைக் காட்டியே ஞானம் கொடுத்து விடுகிறார். ப்ர-லயம் என்பதாக அத்தனை மாயா லோகமும் ஸ்ருஷ்டியும் தன்னிலே லயித்துப் போய் விடுவதைத்தானே காட்டு கிறார்! மாயையிலிருந்து நம்மை விடுவித்து முக்தி தரவே இப்படி தர்சனம் தருகிறார். அதனால்தான் இந்த அவஸரத்திலே (ரூப பேதத்திலே) அவரை "முகுந்தன்" என்பது. "முகுந்தன்" என்றால் முக்தி தருகிறவன் என்று அர்த்தம்.

*கராரவிந்தேந பதாரவிந்தம் முகாரவிந்தே விநிவேசயந்தம்*
*வடஸ்ய பத்ரஸ்ய புடே சயாநம் பாலம் முகுந்தம் மநஸா ஸ்மராமி*



வந்தால் அவனை வேறேயாக வைத்து ராஜோபசாரம் பண்ணி conscious ஆகத்தானே (புத்தி பூர்வமாகத்தானே) வெண்ணெயைத் தருவோம்? அப்படி புத்தி பூர்வமாக நம்மை



அவனிடம் சரணாகதி பண்ணிக் கொள்ள நமக்கு அப்போது புத்தி வருமோ, வராதோ? 'சரணாகதி பண்ணுகிறேன்' என்கிறபோதே அப்படிச் சொல்கிற ஒரு 'நான்' தனியாக வந்துவிடுகிறதே! இதனால்தான் நமக்குத் தெரியாமல் நாம் unconscious ஆக இருக்கிறபோதே நம்மை எடுத்துக் கொண்டால்தான் உண்டு என்று திருடனாக வருகிறான்!

ஆலமரத்தின் கீழே உட்கார்ந்து கொண்டு ஞானோபதேசம் பண்ணுகிறவர் பரமேச்வரன்; வட வ்ருக்ஷ மூல நிவாஸி. மஹா விஷ்ணு ஆலிலை மேலே படுத்துக் கொண்டு ஞான உபதேசத்துக்கு நேர் ஆப்போஸிட்டாகத் தோன்றும் மாயா விலாஸத்தைக் காட்டுகிற வட பத்ரசாயி. மாயா விலாஸத்தைக் காட்டியே ஞானம் கொடுத்து விடுகிறார். ப்ர-லயம் என்பதாக அத்தனை மாயா லோகமும் ஸ்ருஷ்டியும் தன்னிலே லயித்துப் போய் விடுவதைத்தானே காட்டு கிறார்! மாயையிலிருந்து நம்மை விடுவித்து முக்தி தரவே இப்படி தர்சனம் தருகிறார். அதனால்தான் இந்த அவஸரத்திலே (ரூப பேதத்திலே) அவரை "முகுந்தன்" என்பது. "முகுந்தன்" என்றால் முக்தி தருகிறவன் என்று அர்த்தம்.

*கராரவிந்தேந பதாரவிந்தம் முகாரவிந்தே விநிவேசயந்தம்*
*வடஸ்ய பத்ரஸ்ய புடே சயாநம் பாலம் முகுந்தம் மநஸா ஸ்மராமி*

12 Supplement to KALKI 21.5.2000

'தாமரைப் பூ மாதிரி இருக்கிற கால் கட்டை விரலைத் தாமரைப் பூ மாதிரியே இருக்கிற கையினால் பிடித்திழுத்து தாமரைப் பூ மாதிரி இருக்கிற வாய்க்குள்ளே போட்டுக் கொண்டு ஆலிலை மேல் சயனித்திருக்கும் குழந்தை முகுந்தனை முழு மனஸோடு ஸ்மரிக்கிறேன்' என்று அர்த்தம்.

ஆலிலைக்கு ஒரு விசேஷமுண்டு. அதிலே ஜீவஸாரம் ரொம்ப அதிகம். அதனால்தான் அது எத்தனை வாடினாலும் மற்ற இலைகள் மாதிரி வற்றிப் போய் நொறுங்குவதில்லை. சருகாகிற போது கூட மெத்தென்றே இருக்கும். அதனாலேயே பகவான் குழந்தையாக வருகிறபோது மேலும் ஸொகஸாக உள்ள தனக்கு மெத்தையாக அதை 'சூஸ்' பண்ணிக் கொண்டிருக்கிறான்.



ஆல விருக்ஷத்துக்கு எத்தனையோ உபயோகங்கள். ஒரு பெரிய ஸைன்யமே அதன் கீழே தண்டு இறங்கலாம். பரோபகாரத்துக்கு அது ஒரு ரூபகம். அத்தனாம் பெரிய மரத்துக்கு இத்தனூண்டு விதை. இந்த அணு மாத்ர விதையில் அந்தப் பெரிய மரமே இருப்பது. அணுவில் அணுவாயுள்ள பரமாத்மாவே அகண்ட ப்ரமாண்டமாயும் இருக்கிறார் என்பதை நினைப்பூட்டுகிறது. எல்லா மரத்துக்கும்தானே இப்படி என்றாலும் மற்ற மரம் போல ஆலுக்கு எவரும் விதை ஊன்றுவதில்லை. அதுவாகவே எப்படியோ முளைத்துக் கொள்கிறது. இது ஈச்வரன், ஸ்வயம்பு, தான்தோன்றி என்ற தத்வ விளக்கமாய் இருக்கிறது. தானே விழுது விட்டுத் தன்னைத் தாங்கிக் கொண்டு, அந்த பலத்தில் மேலும் மேலும் விஸ்தாரமாகிக் கொண்டே போகிறது.

ஸம்ஸார ஸாகரத்தில் அலைபாய்கிற நமக்கு ஆலிலையைக் காட்டி நிலையான



'தாமரைப் பூ மாதிரி இருக்கிற கால் கட்டை விரலைத் தாமரைப் பூ மாதிரியே இருக்கிற கையினால் பிடித்திழுத்து தாமரைப் பூ மாதிரி இருக்கிற வாய்க்குள்ளே போட்டுக் கொண்டு ஆலிலை மேல் சயனித்திருக்கும் குழந்தை முகுந்தனை முழு மனஸோடு ஸ்மரிக்கிறேன்' என்று அர்த்தம்.

ஆலிலைக்கு ஒரு விசேஷமுண்டு. அதிலே ஜீவஸாரம் ரொம்ப அதிகம். அதனால்தான் அது எத்தனை வாடினாலும் மற்ற இலைகள் மாதிரி வற்றிப் போய் நொறுங்குவதில்லை. சருகாகிற போது கூட மெத்தென்றே இருக்கும். அதனாலேயே பகவான் குழந்தையாக வருகிறபோது மேலும் ஸொகஸாக உள்ள தனக்கு மெத்தையாக அதை 'சூஸ்' பண்ணிக் கொண்டிருக்கிறான்.



ஆல விருக்ஷத்துக்கு எத்தனையோ உபயோகங்கள். ஒரு பெரிய ஸைன்யமே அதன் கீழே தண்டு இறங்கலாம். பரோபகாரத்துக்கு அது ஒரு ரூபகம். அத்தனாம் பெரிய மரத்துக்கு இத்தனூண்டு விதை. இந்த அணு மாத்ர விதையில் அந்தப் பெரிய மரமே இருப்பது. அணுவில் அணுவாயுள்ள பரமாத்மாவே அகண்ட ப்ரமாண்டமாயும் இருக்கிறார் என்பதை நினைப்பூட்டுகிறது. எல்லா மரத்துக்கும்தானே இப்படி என்றாலும் மற்ற மரம் போல ஆலுக்கு எவரும் விதை ஊன்றுவதில்லை. அதுவாகவே எப்படியோ முளைத்துக் கொள்கிறது. இது ஈச்வரன், ஸ்வயம்பு, தான்தோன்றி என்ற தத்வ விளக்கமாய் இருக்கிறது. தானே விழுது விட்டுத் தன்னைத் தாங்கிக் கொண்டு, அந்த பலத்தில் மேலும் மேலும் விஸ்தாரமாகிக் கொண்டே போகிறது.

ஸம்ஸார ஸாகரத்தில் அலைபாய்கிற நமக்கு ஆலிலையைக் காட்டி நிலையான

Supplement to KALKI 21.5.2000 13



நித்யத்வத்தை, நிராலம்ப தத்வத்தை உணர்த்துகிறான் வடபத்ரசாயி.

மரத்தை விட எத்தனையோ அகன்ற அகண்ட தத்வம் அவன். அந்த மரம் எத்தனை பெரிசாயிருந்தாலும், எத்தனை காலமிருந்தாலும் அதன் பரப்புக்கு எல்லை உண்டு. அதன் காலத்துக்கும் முடிவு உண்டு. அவனோ முடிவேயில்லாத அகண்டன். அனந்தன். ஆனாலும் இந்த மஹா ப்ரபாவத்தை மறைத்துக் கொண்டு, நாம் அவனை எடுத்து வைத்துக் கொண்டு கொஞ்சுகிற விதத்தில் ஸரள ஸ்வபாவத்துடன் கூடிய குழந்தையாக இருக்கிறான். "ஒண்ணும் கவலைப்படாதேயப்பா! என் மாதிரி குழந்தை உள்ளத்தோடு இரு. சம்ஸார வெள்ளத்திலேயே அப்போது நீ அலையில் அடிபடாமல் உன் பாட்டுக்கு ஆனந்தமாக, அதை ஒரு விளையாட்டாக எடுத்துக் கொண்டு மிதந்து கொண்டிருக்கலாம்" என்று சொல்லாமல் சொல்கிறான். சிலுப்புவதாலே கொந்தளிக்கிற மோரிலே வெண்ணெய் பட்டுக் கொள்ளாமல் மிதப்பது போல ஸம்ஸார ஸாகரத்தில் அவனே வெண்ணெய்க் கட்டியாக மிதப்பது நாமும் அப்படி ஆக வேண்டும் என்று நம்மை நினைக்கச் செய்வதற்குத்தான்.

**லோ**கத்துக்கெல்லாம் பிரஸித்தமாக, வரப்ரஸாதினியாக இருக்கப்பட்டவள் மீநாம்பிகை. காருண்யத்தோடு லாவண்யமும் ஆதிபத்ய சக்தியும் சேர்ந்திருக்கிறவள் மீநாக்ஷி. ஆறுமாஸம் தன்னிடம் செங்கோல், ஆறு மாஸம் ஸுந்தரேச்வரரிடம் செங்கோல் என்றிப்படி லோக முழுவதற்கும் ராஜ்யபாரம் பண்ணுகிறவள். நித்தியப்படி பூஜை, நைவேத்யம் முதலியவற்றைப் பார்த்தாலோ, ஈச்வரனுக்கு அவள் ஸரிஸமானம் மட்டுமில்லை, அவனை விட ஒரு படி மேலே என்று தோன்றுகிறது. பூஜை, நைவேத்தியம் எல்லாம் முதலில் அவளுக்குப் பண்ணி விட்டு அப்புறம்தான் ஈச்வரனுக்குப் பண்ணுவது





நித்யத்வத்தை, நிராலம்ப தத்வத்தை உணர்த்துகிறான் வடபத்ரசாயி.

மரத்தை விட எத்தனையோ அகன்ற அகண்ட தத்வம் அவன். அந்த மரம் எத்தனை பெரிசாயிருந்தாலும், எத்தனை காலமிருந்தாலும் அதன் பரப்புக்கு எல்லை உண்டு. அதன் காலத்துக்கும் முடிவு உண்டு. அவனோ முடிவேயில்லாத அகண்டன். அனந்தன். ஆனாலும் இந்த மஹா ப்ரபாவத்தை மறைத்துக் கொண்டு, நாம் அவனை எடுத்து வைத்துக் கொண்டு கொஞ்சுகிற விதத்தில் ஸரள ஸ்வபாவத்துடன் கூடிய குழந்தையாக இருக்கிறான். "ஒண்ணும் கவலைப்படாதேயப்பா! என் மாதிரி குழந்தை உள்ளத்தோடு இரு. சம்ஸார வெள்ளத்திலேயே அப்போது நீ அலையில் அடிபடாமல் உன் பாட்டுக்கு ஆனந்தமாக, அதை ஒரு விளையாட்டாக எடுத்துக் கொண்டு மிதந்து கொண்டிருக்கலாம்" என்று சொல்லாமல் சொல்கிறான். சிலுப்புவதாலே கொந்தளிக்கிற மோரிலே வெண்ணெய் பட்டுக் கொள்ளாமல் மிதப்பது போல ஸம்ஸார ஸாகரத்தில் அவனே வெண்ணெய்க் கட்டியாக மிதப்பது நாமும் அப்படி ஆக வேண்டும் என்று நம்மை நினைக்கச் செய்வதற்குத்தான்.

**லோ**கத்துக்கெல்லாம் பிரஸித்தமாக, வரப்ரஸாதினியாக இருக்கப்பட்டவள் மீநாம்பிகை. காருண்யத்தோடு லாவண்யமும் ஆதிபத்ய சக்தியும் சேர்ந்திருக்கிறவள் மீநாக்ஷி. ஆறுமாஸம் தன்னிடம் செங்கோல், ஆறு மாஸம் ஸுந்தரேச்வரரிடம் செங்கோல் என்றிப்படி லோக முழுவதற்கும் ராஜ்யபாரம் பண்ணுகிறவள். நித்தியப்படி பூஜை, நைவேத்யம் முதலியவற்றைப் பார்த்தாலோ, ஈச்வரனுக்கு அவள் ஸரிஸமானம் மட்டுமில்லை, அவனை விட ஒரு படி மேலே என்று தோன்றுகிறது. பூஜை, நைவேத்தியம் எல்லாம் முதலில் அவளுக்குப் பண்ணி விட்டு அப்புறம்தான் ஈச்வரனுக்குப் பண்ணுவது

14 Supplement to KALKI 21.5.2000

என்று மதுரையில் மட்டும் மாறுதலாக வழக்கம் இருக்கிறது.

தமிழில், 'அங்கயற்கண்ணி' என்று அம்பாளைச் சொல்வார்கள். 'அம்' என்றால் அழகிய, 'கயல்' என்றால் மீன். மீன் போன்ற கண்ணுள்ளவள்; மீநாக்ஷி என்று அர்த்தம். 'அங்கச்சி, அங்கச்சி' என்றே மதுரையில் எந்தப் பெண்ணையும் கூப்பிடுவது இதனால்தான்.

நீண்ட கால பொது நம்பிக்கைப்படி, கவி மரபுப்படி (Poetic tradition படி) – தாய் மீன் தன் கண்ணால் முட்டையைப் பார்த்து பார்த்தே குஞ்சு பொரித்துவிடும். அப்புறமும் தன் கண் பார்வையாலேயே அதற்குப் பசியாற்றிப் போஷித்து விடும். தாய் மீனானது இப்படித் திருஷ்டியாலேயே சிசு ரக்ஷணை பண்ணி விடுகிறது என்பது ஐதிஹ்யம் (ஐதீகம்).

ரூபத்தில் மட்டுமில்லாமல், திருஷ்டி மாத்திரத்தால் குழந்தைகளை ரக்ஷிக்கிற குணத்தாலும் அம்பாளின் நேத்திரம் மீனாக இருக்கிறது. அம்பாளின் குழந்தைகள் யார்? எல்லாருந்தான்; எல்லாமுந்தான். ஈச்வரனைக் கூட அவள் குழந்தைதான் என்று ஒரு பாவத்தில், தத்வார்த்தமாகச் சொல்லியிருக்கிறது. புல் பூண்டிலிருந்து ஆரம்பித்து பிரம்மாதிகள் வரை எல்லாரையும் தன் கடாக்ஷ அம்ருதத்தால் நனைத்து நனைத்தே உய்விக்கற பரம கருணையுள்ள லோக ஜனனிதான் மீநாக்ஷி. மீன் போல் ரூபமுள்ள அவளுடைய கண்ணின் திருஷ்டி பட்டமாத்திரத்தில், மீன் குஞ்சுக்குத் தாயாரின் திருஷ்டியாலேயே வயிறு நிறைந்து விடுகிற மாதிரி நம் மனஸ் நிறைந்து விடுகிறது. அவளுடைய கடாக்ஷமே ஞானப் பாலாக உயிரை, அறிவை வளர்த்து உய்வித்து விடுகிறது.



"அநிமேஷா:" – "கண்ணைக் கொட்டாமல்" என்று 'ஸௌந்தர்ய லஹரி' ச்லோகத்தில் மீனைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. மீநாக்ஷியும் கண்ணைக் கொட்டுவதில்லை. கொட்டினால் அந்த fraction of a second



என்று மதுரையில் மட்டும் மாறுதலாக வழக்கம் இருக்கிறது.

தமிழில், 'அங்கயற்கண்ணி' என்று அம்பாளைச் சொல்வார்கள். 'அம்' என்றால் அழகிய, 'கயல்' என்றால் மீன். மீன் போன்ற கண்ணுள்ளவள்; மீநாக்ஷி என்று அர்த்தம். 'அங்கச்சி, அங்கச்சி' என்றே மதுரையில் எந்தப் பெண்ணையும் கூப்பிடுவது இதனால்தான்.

நீண்ட கால பொது நம்பிக்கைப்படி, கவி மரபுப்படி (Poetic tradition படி) – தாய் மீன் தன் கண்ணால் முட்டையைப் பார்த்து பார்த்தே குஞ்சு பொரித்துவிடும். அப்புறமும் தன் கண் பார்வையாலேயே அதற்குப் பசியாற்றிப் போஷித்து விடும். தாய் மீனானது இப்படித் திருஷ்டியாலேயே சிசு ரக்ஷணை பண்ணி விடுகிறது என்பது ஐதிஹ்யம் (ஐதீகம்).

ரூபத்தில் மட்டுமில்லாமல், திருஷ்டி மாத்திரத்தால் குழந்தைகளை ரக்ஷிக்கிற குணத்தாலும் அம்பாளின் நேத்திரம் மீனாக இருக்கிறது. அம்பாளின் குழந்தைகள் யார்? எல்லாருந்தான்; எல்லாமுந்தான். ஈச்வரனைக் கூட அவள் குழந்தைதான் என்று ஒரு பாவத்தில், தத்வார்த்தமாகச் சொல்லியிருக்கிறது. புல் பூண்டிலிருந்து ஆரம்பித்து பிரம்மாதிகள் வரை எல்லாரையும் தன் கடாக்ஷ அம்ருதத்தால் நனைத்து நனைத்தே உய்விக்கற பரம கருணையுள்ள லோக ஜனனிதான் மீநாக்ஷி. மீன் போல் ரூபமுள்ள அவளுடைய கண்ணின் திருஷ்டி பட்டமாத்திரத்தில், மீன் குஞ்சுக்குத் தாயாரின் திருஷ்டியாலேயே வயிறு நிறைந்து விடுகிற மாதிரி நம் மனஸ் நிறைந்து விடுகிறது. அவளுடைய கடாக்ஷமே ஞானப் பாலாக உயிரை, அறிவை வளர்த்து உய்வித்து விடுகிறது.



"அநிமேஷா:" – "கண்ணைக் கொட்டாமல்" என்று 'ஸௌந்தர்ய லஹரி' ச்லோகத்தில் மீனைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. மீநாக்ஷியும் கண்ணைக் கொட்டுவதில்லை. கொட்டினால் அந்த fraction of a second

Supplement to KALKI 21.5.2000 15

(விநாடித் துளியில்) தன் கடாக்ஷாம்ருதம் குழந்தைகளுக்கு இல்லாமல் போய் விடுமோ என்பதால் எப்போதும் விழிப்போடு லோகத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கிறாள்.

மீநாக்ஷியின் அம்ருத கடாக்ஷம் படுகிற இடமெல்லாம் மதுரமாகிறது மதுரத்துக்கு, இனிமைச் சுவைக்கு, பெயர் போனது அம்ருதம்தானே? ஜீவஜந்துக்கள் மதுரம் ஆவது என்றால் என்ன? அன்புமயமாவது என்றுதான் அர்த்தம். பரிபூர்ணத்வம் அடைவதே ஜீவனுக்கு மதுரம். கட்டைக் கசங்காய் கடைசியில் பக்குவமாகிறபோது கனிந்து மதுரமாவது போல், அநேக துர்க்குணங்கள் கொண்ட நாம் கனிந்து மாறிக்கொண்டே போய்ப் பக்குவமாகிப் பெறுகிற பூர்ண நிலைதான் நமக்கு மதுரம். அப்படிப்பட்ட பூர்ணத்வ மதுரத்தை நமக்குத் தருவது மீநாம்பிகையின் கடைக்கண். லோகத்தில் இருக்கிறபோதே நிறைவைத் தந்து, அப்புறம் இந்த லோகம், ஸம்ஸார பாசம் இல்லாமல் மோக்ஷானந்தம் தருகிறது.



இப்படி ஜீவனுக்குப் பூர்ணத்வம் என்ற மதுரத்தைத் தரும் மீநாக்ஷியின் மதுர கடாக்ஷம் விசேஷமாகப் பரவியிருப்பதால் தான் அவளுடைய க்ஷேத்ரத்துக்கே மதுரை என்று பெயர் இருக்கிறது. அம்பாளின் கடைக்கண் அமுது அலை அலையாகப் பரவியிருப்பதால் அது மதுரையாகிறது.

**கா**ஞ்சிபுரத்தில் பரம கருணாமூர்த்தியான அம்பாள் எப்படியிருக்கிறாள்? கரும்பு வில்லும் (இக்ஷு சாபம்) மலரம்பும் (புஷ்ப பாணம்) வைத்திருக்கிறாள். இந்த இரண்டும் இன்னொருத்தருக்கும் உண்டு. மன்மதன் என்கிற காமன்தான் அது. காமன் காமாக்ஷி இருவருக்கும் கரும்பு வில், புஷ்பபாணம் ஆகியன காமன் (common). பொது. மன்மதன் கரும்புவில்லை வைத்துக் கொண்டிருக்கிறான். அதற்கு நாண் தேன்வண்டுகள்.



(விநாடித் துளியில்) தன் கடாக்ஷாம்ருதம் குழந்தைகளுக்கு இல்லாமல் போய் விடுமோ என்பதால் எப்போதும் விழிப்போடு லோகத்தை ரக்ஷித்துக் கொண்டிருக்கிறாள்.

மீநாக்ஷியின் அம்ருத கடாக்ஷம் படுகிற இடமெல்லாம் மதுரமாகிறது மதுரத்துக்கு, இனிமைச் சுவைக்கு, பெயர் போனது அம்ருதம்தானே? ஜீவஜந்துக்கள் மதுரம் ஆவது என்றால் என்ன? அன்புமயமாவது என்றுதான் அர்த்தம். பரிபூர்ணத்வம் அடைவதே ஜீவனுக்கு மதுரம். கட்டைக் கசங்காய் கடைசியில் பக்குவமாகிறபோது கனிந்து மதுரமாவது போல், அநேக துர்க்குணங்கள் கொண்ட நாம் கனிந்து மாறிக்கொண்டே போய்ப் பக்குவமாகிப் பெறுகிற பூர்ண நிலைதான் நமக்கு மதுரம். அப்படிப்பட்ட பூர்ணத்வ மதுரத்தை நமக்குத் தருவது மீநாம்பிகையின் கடைக்கண். லோகத்தில் இருக்கிறபோதே நிறைவைத் தந்து, அப்புறம் இந்த லோகம், ஸம்ஸார பாசம் இல்லாமல் மோக்ஷானந்தம் தருகிறது.



இப்படி ஜீவனுக்குப் பூர்ணத்வம் என்ற மதுரத்தைத் தரும் மீநாக்ஷியின் மதுர கடாக்ஷம் விசேஷமாகப் பரவியிருப்பதால் தான் அவளுடைய க்ஷேத்ரத்துக்கே மதுரை என்று பெயர் இருக்கிறது. அம்பாளின் கடைக்கண் அமுது அலை அலையாகப் பரவியிருப்பதால் அது மதுரையாகிறது.

**கா**ஞ்சிபுரத்தில் பரம கருணாமூர்த்தியான அம்பாள் எப்படியிருக்கிறாள்? கரும்பு வில்லும் (இக்ஷு சாபம்) மலரம்பும் (புஷ்ப பாணம்) வைத்திருக்கிறாள். இந்த இரண்டும் இன்னொருத்தருக்கும் உண்டு. மன்மதன் என்கிற காமன்தான் அது. காமன் காமாக்ஷி இருவருக்கும் கரும்பு வில், புஷ்பபாணம் ஆகியன காமன் (common). பொது. மன்மதன் கரும்புவில்லை வைத்துக் கொண்டிருக்கிறான். அதற்கு நாண் தேன்வண்டுகள்.

16 Supplement to KALKI 21.5.2000

வளைந்த கரும்புவில்லின் ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரையில் குறுக்காக வண்டுகள் நாண் மாதிரி வரிசையாகச் சேர்ந்திருக்கின்றன. இந்தக் கரும்பு வில்லில் ஐந்து மலர் அம்புகளைத் தொடுத்துத்தான் சமஸ்த ஜீவப் பிரபஞ்சத்தையும் மன்மதன் ஆட்டி வைக்கிறான். உலகத்தில் உள்ள தித்திப்பு பட்சணங்கள் அத்தனையும் வெல்லம் சர்க்கரையில் செய்ததுதான். வெல்லம், சர்க்கரைக்கு ஆதாரம் கரும்பு. தித்திப்புச் சுவை மன்மதனுக்கு வில். சுகந்தத்துக்கும் மென்மைக்கும் ரூப சௌந்தர்யத்துக்கும் புஷ்பங்கள் பெயர் போனவை. இப்படிப்பட்ட புஷ்பங்களில் ஐந்து அவனுக்கு பாணங்களாக இருக்கின்றன. காதுக்கு சுகமான ரீங்காரம் வண்டிடமிருந்து வருகிறது. இப்படியாக தன் வில், அம்பு, நாண் இவற்றால் நம் பஞ்சேந்திரியங்களுக்கான அத்தனை விதமான அழகுகளையும் காட்டி லோகத்தைக் காமத்தில் கட்டிப் போடுகிறான்



என்று அர்த்தம். அம்பாள்தான் அவனுக்கு இப்படி இரும்பு வில்லுக்கும் பாணத்துக்கும் பதிலாகக் கரும்பு வில்லையும் மலர்ப் பாணங்களையும் தந்து, எல்லா உயிரினங்களையும் கவர்ந்து இழுத்து ஆட்டி வைக்கிற சக்தியை அனுக்கிரகிக்கிறாள். சிருஷ்டி லீலை நடக்க வேண்டும் என்பதற்காகக் காமனுக்கு இந்த அதிகாரம் தந்திருக்கிறாள்.

ஆனால் ஜீவப் பிரபஞ்சம் முழுவதும் எப்போதும் இந்திரிய சுகங்கள் என்கிற துக்கத்திலேயே சிக்கிக் கொண்டு கிடப்பதையும் அம்பாள் விரும்பவில்லை. லோக ரீதியாக வாழ்க்கை நடத்துகிறவர்களும் காமத்தினால் தர்மத்தை விட்டுவிடக் கூடாது; அர்த்த காமங்களையும் (பொருள் ஈட்டுதலையும், ஆசைகளை அனுபவிப்பதையும்) கூட தர்மத்துடனேயே இணைத்து ஒழுங்கோடு வாழ வேண்டும். மனசும் இந்திரியமும் போன போக்கில் விட்டு விடாமல் அவற்றைத் தர்மத்தில்



வளைந்த கரும்புவில்லின் ஒரு கோடியிலிருந்து மறுகோடி வரையில் குறுக்காக வண்டுகள் நாண் மாதிரி வரிசையாகச் சேர்ந்திருக்கின்றன. இந்தக் கரும்பு வில்லில் ஐந்து மலர் அம்புகளைத் தொடுத்துத்தான் சமஸ்த ஜீவப் பிரபஞ்சத்தையும் மன்மதன் ஆட்டி வைக்கிறான். உலகத்தில் உள்ள தித்திப்பு பட்சணங்கள் அத்தனையும் வெல்லம் சர்க்கரையில் செய்ததுதான். வெல்லம், சர்க்கரைக்கு ஆதாரம் கரும்பு. தித்திப்புச் சுவை மன்மதனுக்கு வில். சுகந்தத்துக்கும் மென்மைக்கும் ரூப சௌந்தர்யத்துக்கும் புஷ்பங்கள் பெயர் போனவை. இப்படிப்பட்ட புஷ்பங்களில் ஐந்து அவனுக்கு பாணங்களாக இருக்கின்றன. காதுக்கு சுகமான ரீங்காரம் வண்டிடமிருந்து வருகிறது. இப்படியாக தன் வில், அம்பு, நாண் இவற்றால் நம் பஞ்சேந்திரியங்களுக்கான அத்தனை விதமான அழகுகளையும் காட்டி லோகத்தைக் காமத்தில் கட்டிப் போடுகிறான்



என்று அர்த்தம். அம்பாள்தான் அவனுக்கு இப்படி இரும்பு வில்லுக்கும் பாணத்துக்கும் பதிலாகக் கரும்பு வில்லையும் மலர்ப் பாணங்களையும் தந்து, எல்லா உயிரினங்களையும் கவர்ந்து இழுத்து ஆட்டி வைக்கிற சக்தியை அனுக்கிரகிக்கிறாள். சிருஷ்டி லீலை நடக்க வேண்டும் என்பதற்காகக் காமனுக்கு இந்த அதிகாரம் தந்திருக்கிறாள்.

ஆனால் ஜீவப் பிரபஞ்சம் முழுவதும் எப்போதும் இந்திரிய சுகங்கள் என்கிற துக்கத்திலேயே சிக்கிக் கொண்டு கிடப்பதையும் அம்பாள் விரும்பவில்லை. லோக ரீதியாக வாழ்க்கை நடத்துகிறவர்களும் காமத்தினால் தர்மத்தை விட்டுவிடக் கூடாது; அர்த்த காமங்களையும் (பொருள் ஈட்டுதலையும், ஆசைகளை அனுபவிப்பதையும்) கூட தர்மத்துடனேயே இணைத்து ஒழுங்கோடு வாழ வேண்டும். மனசும் இந்திரியமும் போன போக்கில் விட்டு விடாமல் அவற்றைத் தர்மத்தில்

Supplement to KALKI 21.5.2000 17

கட்டுப்படுத்த வேண்டும். லோக விவகாரத்தை முழுதும் விடாமலே இப்படி கொஞ்சம் கட்டுப்பாட்டுடன் இருப்பது முதல் நிலை. அப்புறம் மனசு, இந்திரியம் இவை கொஞ்சம் கூடச் சலனமே இல்லாமல் இருக்கிற ஞானநிலை சித்திக்கும். அந்த நிலை வந்து விட்டால் அப்புறம் ஜன்மமே இல்லை. சிருஷ்டி லீலைக்கு சகாயம் செய்கிற மன்மதனுக்கு இங்கு வேலையே இல்லை. மன்மதனுக்குக் காமத்தை உண்டாக்குகிற சக்தியைத் தந்த அம்பாளேதான், காம விகாரத்தைக் கட்டுப்படுத்த தர்மத்தையும், முடிவாக அவளுடைய சிருஷ்டி லீலையிலிருந்து விடுபடுகிற ஞானநிலையான மோக்ஷத்தையும் ஏற்படுத்தியிருக்கிறாள்.

ஐயன் என்பது 'ஆர்ய' என்பதன் திரிபு. 'ஆர்ய' என்றால் 'மதிப்புக்குரிய' என்று பொருள். சாக்ஷாத் பரமேசுவரனுக்கும், நாராயணமூர்த்திக்கும் ஜனித்த குழந்தையை விட மதிப்புக்குகந்தவர் எவருண்டு? ஞானமும் தபசும் கலந்த சிவனின் பிரம்ம அம்சம், கிருபையும் சௌந்தரியமும் கலந்த விஷ்ணுவின் க்ஷத்ர அம்சம் இரண்டுமே நாம் உய்வு பெற அத்தியாவசியமாகும். ஹரிஹர புத்ரனாகிய ஐயப்பனிடம் இவையெல்லாமே ஒன்று சேர்ந்திருப்பதாகக் கொள்ளலாம். இதனால்தான் போலிருக்கிறது, சிவபெருமானின் மற்ற இரு பாலர்களைப் பிள்ளையார் என்றும் குமரன் என்றும் குழந்தைகளைக் குறிக்கிற சொல்லால் குறிப்பிட்டாலும், அவரது மூன்றாவது புத்திரனான சாஸ்தாவை மட்டும் மதிப்புக்குரியவராக – ஆர்யராக – ஐயனாராகக் குறிப்பிடுகிறோம்.



ஸரஸ்வதி பூஜையானது சரத்காலத்தில் வருகிறது. 'சரத்' காலத்தில் நிகழ்வதால்தான் இந்த நவராத்திரிக்கே 'சாரத' நவராத்திரி என்று பெயர்



கட்டுப்படுத்த வேண்டும். லோக விவகாரத்தை முழுதும் விடாமலே இப்படி கொஞ்சம் கட்டுப்பாட்டுடன் இருப்பது முதல் நிலை. அப்புறம் மனசு, இந்திரியம் இவை கொஞ்சம் கூடச் சலனமே இல்லாமல் இருக்கிற ஞானநிலை சித்திக்கும். அந்த நிலை வந்து விட்டால் அப்புறம் ஜன்மமே இல்லை. சிருஷ்டி லீலைக்கு சகாயம் செய்கிற மன்மதனுக்கு இங்கு வேலையே இல்லை. மன்மதனுக்குக் காமத்தை உண்டாக்குகிற சக்தியைத் தந்த அம்பாளேதான், காம விகாரத்தைக் கட்டுப்படுத்த தர்மத்தையும், முடிவாக அவளுடைய சிருஷ்டி லீலையிலிருந்து விடுபடுகிற ஞானநிலையான மோக்ஷத்தையும் ஏற்படுத்தியிருக்கிறாள்.

ஐயன் என்பது 'ஆர்ய' என்பதன் திரிபு. 'ஆர்ய' என்றால் 'மதிப்புக்குரிய' என்று பொருள். சாக்ஷாத் பரமேசுவரனுக்கும், நாராயணமூர்த்திக்கும் ஜனித்த குழந்தையை விட மதிப்புக்குகந்தவர் எவருண்டு? ஞானமும் தபசும் கலந்த சிவனின் பிரம்ம அம்சம், கிருபையும் சௌந்தரியமும் கலந்த விஷ்ணுவின் க்ஷத்ர அம்சம் இரண்டுமே நாம் உய்வு பெற அத்தியாவசியமாகும். ஹரிஹர புத்ரனாகிய ஐயப்பனிடம் இவையெல்லாமே ஒன்று சேர்ந்திருப்பதாகக் கொள்ளலாம். இதனால்தான் போலிருக்கிறது, சிவபெருமானின் மற்ற இரு பாலர்களைப் பிள்ளையார் என்றும் குமரன் என்றும் குழந்தைகளைக் குறிக்கிற சொல்லால் குறிப்பிட்டாலும், அவரது மூன்றாவது புத்திரனான சாஸ்தாவை மட்டும் மதிப்புக்குரியவராக – ஆர்யராக – ஐயனாராகக் குறிப்பிடுகிறோம்.



ஸரஸ்வதி பூஜையானது சரத்காலத்தில் வருகிறது. 'சரத்' காலத்தில் நிகழ்வதால்தான் இந்த நவராத்திரிக்கே 'சாரத' நவராத்திரி என்று பெயர்

18 Supplement to KALKI 21.5.2000



ஏற்பட்டிருக்கிறது. சாரதா என்ற பெயர் ஸரஸ்வதி தேவிக்கும் ஏற்பட்டிருக்கிறது.

மூக பஞ்சசதியின் ஆர்யா சதக சுலோகமொன்று காமாக்ஷியை சரஸ்வதியாகவே பாவிக்கிறது. 'விமலபடீ' என்று அது ஆரம்பமாகிறது. அதாவது, மாசு மறுவே இல்லாத தூய வெள்ளைக் கலை உடுத்தியிருக்கிறாள் என்கிறார். காச்மீரம் முழுதுமே இப்படித்தான் வெண்பனி மலைகளால் மூடப்பட்டு சரஸ்வதி மயமாக இருக்கிறது. சரத் காலத்தின் விசேஷமும் இதுதான். 'சரத் சந்திரன்' என்று கவிகள் விசேஷித்துச் சொல்கிற நிலவு இந்தக் காலத்தில்தான் மிகவும் தாவள்யமாக லோகம் முழுவதற்கும் தூய சந்திரிகையை ஆடை மாதிரி போர்த்துகிறது. இந்த சரத் காலத்தில்தான் ஆகாசத்துக்கும் வெள்ளாடை போர்த்தினது போல் எங்கே பார்த்தாலும் வெண் முகில்கள் சஞ்சரிக்கின்றன. சரஸ்வதி அநுக்ரஹிக்கிர உண்மையான 'வித்யை' சரத்கால சந்திரனைப் போலவும், சரத்கால மேகத்தைப் போலவும், தாப சாந்தியாக, தூய்மையாக இருக்கும். வெறும் படிப்பு பலவிதமான தாபங்களையே உண்டாக்குகிறது. மெய்யறிவே தாபசாந்தியைத் தரும்.

ஜபமாலையும் ஏட்டுச் சுவடியும் ஞானத்தைத் தெரிவிக்கிற அடையாளங்கள் என்று எல்லாருக்கும் தெரியும். பரம ஞான மூர்த்திகளான தக்ஷிணாமூர்த்தி, சரஸ்வதி தேவி இருவர் கைகளிலும் இவற்றைக் காணலாம்.

சரஸ்வதி சகல கலாவாணி, வித்யா ஸ்வரூபிணி என்று எல்லோருமே அறிவீர்கள். 'சர்வ வித்யைகளுக்கும் பிரபு (ஈசானன்)' என்றே வேதம் சதாசிவனான தக்ஷிணாமூர்த்தியைச் சொல்லுகிறது.

சரஸ்வதி தக்ஷிணாமூர்த்தி இருவரும் அக்ஷமாலை, சுவடி இவற்றோடு சந்திர கலையைத் தலையில் தரித்திருக்கிறார்கள். அதற்குப் பேரே 'கலை'. 'கலை' என்றால், எது வளருகிறதோ





ஏற்பட்டிருக்கிறது. சாரதா என்ற பெயர் ஸரஸ்வதி தேவிக்கும் ஏற்பட்டிருக்கிறது.

மூக பஞ்சசதியின் ஆர்யா சதக சுலோகமொன்று காமாக்ஷியை சரஸ்வதியாகவே பாவிக்கிறது. 'விமலபடீ' என்று அது ஆரம்பமாகிறது. அதாவது, மாசு மறுவே இல்லாத தூய வெள்ளைக் கலை உடுத்தியிருக்கிறாள் என்கிறார். காச்மீரம் முழுதுமே இப்படித்தான் வெண்பனி மலைகளால் மூடப்பட்டு சரஸ்வதி மயமாக இருக்கிறது. சரத் காலத்தின் விசேஷமும் இதுதான். 'சரத் சந்திரன்' என்று கவிகள் விசேஷித்துச் சொல்கிற நிலவு இந்தக் காலத்தில்தான் மிகவும் தாவள்யமாக லோகம் முழுவதற்கும் தூய சந்திரிகையை ஆடை மாதிரி போர்த்துகிறது. இந்த சரத் காலத்தில்தான் ஆகாசத்துக்கும் வெள்ளாடை போர்த்தினது போல் எங்கே பார்த்தாலும் வெண் முகில்கள் சஞ்சரிக்கின்றன. சரஸ்வதி அநுக்ரஹிக்கிர உண்மையான 'வித்யை' சரத்கால சந்திரனைப் போலவும், சரத்கால மேகத்தைப் போலவும், தாப சாந்தியாக, தூய்மையாக இருக்கும். வெறும் படிப்பு பலவிதமான தாபங்களையே உண்டாக்குகிறது. மெய்யறிவே தாபசாந்தியைத் தரும்.

ஜபமாலையும் ஏட்டுச் சுவடியும் ஞானத்தைத் தெரிவிக்கிற அடையாளங்கள் என்று எல்லாருக்கும் தெரியும். பரம ஞான மூர்த்திகளான தக்ஷிணாமூர்த்தி, சரஸ்வதி தேவி இருவர் கைகளிலும் இவற்றைக் காணலாம்.

சரஸ்வதி சகல கலாவாணி, வித்யா ஸ்வரூபிணி என்று எல்லோருமே அறிவீர்கள். 'சர்வ வித்யைகளுக்கும் பிரபு (ஈசானன்)' என்றே வேதம் சதாசிவனான தக்ஷிணாமூர்த்தியைச் சொல்லுகிறது.

சரஸ்வதி தக்ஷிணாமூர்த்தி இருவரும் அக்ஷமாலை, சுவடி இவற்றோடு சந்திர கலையைத் தலையில் தரித்திருக்கிறார்கள். அதற்குப் பேரே 'கலை'. 'கலை' என்றால், எது வளருகிறதோ

Supplement to KALKI 21.5.2000 19

அது. வித்யைக்கு முடிவே இல்லை. 'கற்றது கைமண்ணளவு கல்லாதது உலகளவு' என்று சரஸ்வதியே விநயத்தோடு நினைக்கிறாளாம். இவள் தலையில் வைத்திருப்பது மூன்றாம் பிறை. அது பூரண சந்திரனாக வளர வேண்டும்.

சரஸ்வதிக்கும் தட்சிணாமூர்த்தியைப் போலவே நெற்றிக் கண் உண்டு. ஆசை பஸ்மமானாலொழிய ஞானமில்லை. அதற்காகத்தான் காமனை எரித்த நெற்றிக்கண் இவளிடமும் இருக்கிறது. இவ்விரண்டு தெய்வங்களுக்கும் ஜடாமகுடம் இருக்கிறது. அதுவும் ஞானிகளின் அடையாளம்.



இருவருமே வெள்ளை வெளேரென்று இருக்கிறார்கள். ஏழு வர்ணங்களில் சேராத வெள்ளை, பரம நிர்மலமான சுத்த ஸத்வ நிலையைக் குறிப்பது. இந்த வெள்ளையும் கூட இன்னும் நிர்மலமாக, தன் வழியாக ஒளி ஊடுருவிச் செல்கிற அளவுக்கு தெளிந்து விடுகிறபோது ஸ்படிகமாகிறது.

தக்ஷிணாமூர்த்தி, சரஸ்வதி இருவருமே இப்படிப்பட்ட ஸ்படிகத்தினாலான அக்ஷ மாலையைத் தான் வைத்திருக்கிறார்கள். வெள்ளை நிறம், சந்திர கலை, ஸ்படிக மாலை ஆகிய இவற்றை நினைத்தாலே நமக்கு ஒரு தூய்மை, தாப சாந்தி, அமைதி எல்லாம் உண்டாகின்றன.

ஆஞ்சநேய ஸ்வாமியின் அஜாட்யம், அவருக்கு வந்த விக்னம் - இந்த இரண்டு மாதிரியுமே எங்கேயும் பார்க்க முடியாது! அத்தனை விக்னத்தையும் தவிடு பொடியாக்கிய அஜாட்யம் அவருடையது! அவதாரம் பண்ணியவுடனேயே, (பரிவோடு) பச்சைக் குழந்தை... விர்ர்ர்ரென்று ஒரே வேகமாக, உதய ஸூர்யனை சிவப்புப் பழமென்று நினைத்துக் கொண்டு ஸூர்ய மண்டலத்திற்கே தாவி விட்டது! அப்பவே எதிர்ப்பும் வந்து விட்டது. இந்த்ரன் வஜ்ராயுதத்தால் அடித்துத் தள்ளினான். தாடையே பிளந்து



அது. வித்யைக்கு முடிவே இல்லை. 'கற்றது கைமண்ணளவு கல்லாதது உலகளவு' என்று சரஸ்வதியே விநயத்தோடு நினைக்கிறாளாம். இவள் தலையில் வைத்திருப்பது மூன்றாம் பிறை. அது பூரண சந்திரனாக வளர வேண்டும்.

சரஸ்வதிக்கும் தட்சிணாமூர்த்தியைப் போலவே நெற்றிக் கண் உண்டு. ஆசை பஸ்மமானாலொழிய ஞானமில்லை. அதற்காகத்தான் காமனை எரித்த நெற்றிக்கண் இவளிடமும் இருக்கிறது. இவ்விரண்டு தெய்வங்களுக்கும் ஜடாமகுடம் இருக்கிறது. அதுவும் ஞானிகளின் அடையாளம்.



இருவருமே வெள்ளை வெளேரென்று இருக்கிறார்கள். ஏழு வர்ணங்களில் சேராத வெள்ளை, பரம நிர்மலமான சுத்த ஸத்வ நிலையைக் குறிப்பது. இந்த வெள்ளையும் கூட இன்னும் நிர்மலமாக, தன் வழியாக ஒளி ஊடுருவிச் செல்கிற அளவுக்கு தெளிந்து விடுகிறபோது ஸ்படிகமாகிறது.

தக்ஷிணாமூர்த்தி, சரஸ்வதி இருவருமே இப்படிப்பட்ட ஸ்படிகத்தினாலான அக்ஷ மாலையைத் தான் வைத்திருக்கிறார்கள். வெள்ளை நிறம், சந்திர கலை, ஸ்படிக மாலை ஆகிய இவற்றை நினைத்தாலே நமக்கு ஒரு தூய்மை, தாப சாந்தி, அமைதி எல்லாம் உண்டாகின்றன.

ஆஞ்சநேய ஸ்வாமியின் அஜாட்யம், அவருக்கு வந்த விக்னம் - இந்த இரண்டு மாதிரியுமே எங்கேயும் பார்க்க முடியாது! அத்தனை விக்னத்தையும் தவிடு பொடியாக்கிய அஜாட்யம் அவருடையது! அவதாரம் பண்ணியவுடனேயே, (பரிவோடு) பச்சைக் குழந்தை... விர்ர்ர்ரென்று ஒரே வேகமாக, உதய ஸூர்யனை சிவப்புப் பழமென்று நினைத்துக் கொண்டு ஸூர்ய மண்டலத்திற்கே தாவி விட்டது! அப்பவே எதிர்ப்பும் வந்து விட்டது. இந்த்ரன் வஜ்ராயுதத்தால் அடித்துத் தள்ளினான். தாடையே பிளந்து

20 Supplement to KALKI 21.5.2000

போயிற்று. 'ஹநு' என்றால் தாடை. தாடை போன விசேஷத்தால் 'ஹநுமான்' ஆனார். அதற்காகச் சளைத்து விடவில்லை. ஸூர்யனிடமே போய் நவ வ்யாகரணங்களையும் கற்றுக் கொண்டார். உதயகிரியிலிருந்து அஸ்தகிரி வரை சளைக்காமல், களைக்காமல் ஸூர்யனுக்கு எதிர்முகமாக ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டே கற்றுக் கொண்டார். குழந்தையாகவும் ஒரே உத்ஸாஹ விளையாட்டுப் பண்ணினார். துருதுருவென்று ரிஷிகளின் ஆச்ரமங்களுக்குள்ளேயெல்லாம் புகுந்து ஒரே விஷமமாகப் பண்ணினார். அவர்கள் கோபித்துக் கொண்டு, "உன் திவ்ய சக்தி உனக்கே மறந்து போய் ராமாவதார காலத்தில் அவருக்குக் கார்யம் பண்ணும்படி ஏற்படும் போதுதான் ஞாபகம் வரும்" என்று சபித்து விட்டார்கள். அதற்காகவும் அவர் ஒன்றும் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக் கொண்டுவிடவில்லை. ஒரு வானரம் எத்தனை தொண்டு பண்ண முடியுமோ அத்தனையும் ஸுக்ரீவனுக்குப் பண்ணிக் கொண்டிருந்தார். அங்கேயும் எதிர்ப்பு வந்தது. மஹாவீரனான வாலி ஸுக்ரீவனிடம் சண்டைக்கு வந்தான். அப்போதும் அவர் மனம் தளரவில்லை. ஒரு சாபம் காரணமாக வாலி வர முடியாத ஒரு இடத்துக்கு ஸுக்ரீவனை அழைத்துக் கொண்டு போய் ரக்ஷித்து வைத்துக் கொண்டு தொண்டு செய்து வந்தார். அப்புறம் ஸாக்ஷாத் ராமசந்த்ர மூர்த்தி வந்த பிறகு அவருக்கு திவ்ய சக்தியும் திரும்ப வந்தது. அஸாத்யமான கார்யமெல்லாம் பண்ணினார் – ஸமுத்ரத்தையே தாண்டுவது, மலையையே பறித்து எடுத்துக் கொண்டு வருவது, மஹா பலிஷ்டரான ராக்ஷஸர்களை ஹதாஹதம் பண்ணுவது என்றிப்படி.



அவர் கோபமே இல்லாதவர்... ராமர் அவருக்கு ஞானோபதேசம் பண்ணினாரென்று இருக்கிறது. ஸீதையும் அவருக்கு உபதேசம் பண்ணியிருக்கிறாள். ராமர்



போயிற்று. 'ஹநு' என்றால் தாடை. தாடை போன விசேஷத்தால் 'ஹநுமான்' ஆனார். அதற்காகச் சளைத்து விடவில்லை. ஸூர்யனிடமே போய் நவ வ்யாகரணங்களையும் கற்றுக் கொண்டார். உதயகிரியிலிருந்து அஸ்தகிரி வரை சளைக்காமல், களைக்காமல் ஸூர்யனுக்கு எதிர்முகமாக ஸஞ்சாரம் பண்ணிக் கொண்டே கற்றுக் கொண்டார். குழந்தையாகவும் ஒரே உத்ஸாஹ விளையாட்டுப் பண்ணினார். துருதுருவென்று ரிஷிகளின் ஆச்ரமங்களுக்குள்ளேயெல்லாம் புகுந்து ஒரே விஷமமாகப் பண்ணினார். அவர்கள் கோபித்துக் கொண்டு, "உன் திவ்ய சக்தி உனக்கே மறந்து போய் ராமாவதார காலத்தில் அவருக்குக் கார்யம் பண்ணும்படி ஏற்படும் போதுதான் ஞாபகம் வரும்" என்று சபித்து விட்டார்கள். அதற்காகவும் அவர் ஒன்றும் மூஞ்சியைத் தொங்கப் போட்டுக் கொண்டுவிடவில்லை. ஒரு வானரம் எத்தனை தொண்டு பண்ண முடியுமோ அத்தனையும் ஸுக்ரீவனுக்குப் பண்ணிக் கொண்டிருந்தார். அங்கேயும் எதிர்ப்பு வந்தது. மஹாவீரனான வாலி ஸுக்ரீவனிடம் சண்டைக்கு வந்தான். அப்போதும் அவர் மனம் தளரவில்லை. ஒரு சாபம் காரணமாக வாலி வர முடியாத ஒரு இடத்துக்கு ஸுக்ரீவனை அழைத்துக் கொண்டு போய் ரக்ஷித்து வைத்துக் கொண்டு தொண்டு செய்து வந்தார். அப்புறம் ஸாக்ஷாத் ராமசந்த்ர மூர்த்தி வந்த பிறகு அவருக்கு திவ்ய சக்தியும் திரும்ப வந்தது. அஸாத்யமான கார்யமெல்லாம் பண்ணினார் – ஸமுத்ரத்தையே தாண்டுவது, மலையையே பறித்து எடுத்துக் கொண்டு வருவது, மஹா பலிஷ்டரான ராக்ஷஸர்களை ஹதாஹதம் பண்ணுவது என்றிப்படி.



அவர் கோபமே இல்லாதவர்... ராமர் அவருக்கு ஞானோபதேசம் பண்ணினாரென்று இருக்கிறது. ஸீதையும் அவருக்கு உபதேசம் பண்ணியிருக்கிறாள். ராமர்

Supplement to KALKI 21.5.2000 21



ஞானம் உபதேசித்தார். ஸீதை என்ன உபதேசித்தாள்? ஸீதையென்றால் யார்? ஸாக்ஷாத் தாயார். அதனால் ப்ரேமையை உபதேசித்தாள்! ராவண வதமான தும், ஸீதையிடம் ஸந்தோஷ ஸமாசாரம் தெரிவிப்பதற்காக ஆஞ்ஜநேயர் அசோகவனத்துக்குக் குதித்துக் கொண்டு வந்தார். ராக்ஷஸிகளைப் பார்த்ததும், 'இத்தனை நாளாகத் தாயாரை என்ன பாடுபடுத்திக் கொண்டிருந்தார்கள்? இன்றைக்குத் தொலைத்து விடலாம் அத்தனை பேரையும்' என்று புறப் பட்டார். அப்போது ஸீதை அந்த ராக்ஷஸிகளுக்கும் தாயாராக உபதேசம் பண்ணினாள். "அப்பா, உசந்தவர்களின் லக்ஷணம் கருணைதான். லோகத் திலே தப்புப் பண்ணாதவர்கள் யார்? இவர்களைத் தொடாதே! இவர்கள் என்ன பண்ணுவார்கள்? ராஜ ஸேவகிகள் ராஜாக்ஞைப்படிதானே பண்ண ணும்? அதனால் ராவணன் சொற்படி ஹிம்ஸித்தார்கள். இப்போது விபீஷ ணன் ராஜாவானால் அவன் சொற்படி நமஸ்காரம் பண்ணுவார்கள்" என்றாள்.

அன்றிலிருந்து ஆஞ்ஜநேய ஸ்வாமி ஒரே கருணையாக அன்பாக ஆகிவிட்டார். அதற்காக, தப்பு நடந்தால் சும்மாயிருப்பாரென்று அர்த்தமில்லை. அத்யாவச்யத்திலே தண்டிக்கவும் தண்டிப்பார். கோவிச்சுக்கவும் கோவிச்சுப்பார். இப்படி வெளியிலே இருந்தாலும் உள்ளே யாரானாலும் அவர்களிடம் பூரணமான அன்பு, 'இவா நல்லவாளாகணுமே!' என்ற கவலை தான் இருக்கும்.

எங்கேயும் யாருக்கும் யாரிடமும் கோபம் வேண்டாம். சாந்தி, அன்புதான் ஸமஸ்த ப்ராணிகளிடமும் இருக்கணும். அதுதான் அவருக்குப் பிடிக்கும். ஆனால் அப்படிச் சொல்லிக் கொண்டு நல்லதெல்லாம் அழிந்து போவதைப் பார்த்துக் கொண்டு சும்மா உட்கார்ந்திருந்தால் அவர் ஸரியென்று சொல்ல மாட்டார். மனஸில் எவரிடமும் அன்பு குறையாமலே, கார்யத்தில் பண்ண வேண்டியதை முழு விழிப்போடு சுருசுரு என்று பண்ணிக்





ஞானம் உபதேசித்தார். ஸீதை என்ன உபதேசித்தாள்? ஸீதையென்றால் யார்? ஸாக்ஷாத் தாயார். அதனால் ப்ரேமையை உபதேசித்தாள்! ராவண வதமான தும், ஸீதையிடம் ஸந்தோஷ ஸமாசாரம் தெரிவிப்பதற்காக ஆஞ்ஜநேயர் அசோகவனத்துக்குக் குதித்துக் கொண்டு வந்தார். ராக்ஷஸிகளைப் பார்த்ததும், 'இத்தனை நாளாகத் தாயாரை என்ன பாடுபடுத்திக் கொண்டிருந்தார்கள்? இன்றைக்குத் தொலைத்து விடலாம் அத்தனை பேரையும்' என்று புறப் பட்டார். அப்போது ஸீதை அந்த ராக்ஷஸிகளுக்கும் தாயாராக உபதேசம் பண்ணினாள். "அப்பா, உசந்தவர்களின் லக்ஷணம் கருணைதான். லோகத் திலே தப்புப் பண்ணாதவர்கள் யார்? இவர்களைத் தொடாதே! இவர்கள் என்ன பண்ணுவார்கள்? ராஜ ஸேவகிகள் ராஜாக்ஞைப்படிதானே பண்ண ணும்? அதனால் ராவணன் சொற்படி ஹிம்ஸித்தார்கள். இப்போது விபீஷ ணன் ராஜாவானால் அவன் சொற்படி நமஸ்காரம் பண்ணுவார்கள்" என்றாள்.

அன்றிலிருந்து ஆஞ்ஜநேய ஸ்வாமி ஒரே கருணையாக அன்பாக ஆகிவிட்டார். அதற்காக, தப்பு நடந்தால் சும்மாயிருப்பாரென்று அர்த்தமில்லை. அத்யாவச்யத்திலே தண்டிக்கவும் தண்டிப்பார். கோவிச்சுக்கவும் கோவிச்சுப்பார். இப்படி வெளியிலே இருந்தாலும் உள்ளே யாரானாலும் அவர்களிடம் பூரணமான அன்பு, 'இவா நல்லவாளாகணுமே!' என்ற கவலை தான் இருக்கும்.

எங்கேயும் யாருக்கும் யாரிடமும் கோபம் வேண்டாம். சாந்தி, அன்புதான் ஸமஸ்த ப்ராணிகளிடமும் இருக்கணும். அதுதான் அவருக்குப் பிடிக்கும். ஆனால் அப்படிச் சொல்லிக் கொண்டு நல்லதெல்லாம் அழிந்து போவதைப் பார்த்துக் கொண்டு சும்மா உட்கார்ந்திருந்தால் அவர் ஸரியென்று சொல்ல மாட்டார். மனஸில் எவரிடமும் அன்பு குறையாமலே, கார்யத்தில் பண்ண வேண்டியதை முழு விழிப்போடு சுருசுரு என்று பண்ணிக்

22 Supplement to KALKI 21.5.2000

கொண்டிருந்தால்தான் ஸந்தோஷப்பட்டு எல்லா அநுக்ரஹமும் பண்ணுவார்.

முதலில் அவர்தான் இந்த அநுக்ரஹமே... நம்மைச் சுறுசுறுப்பாக்குகிற அநுக்ரஹமே... அஜாட்ய அநுக்ரஹமே பண்ண வேண்டும். அதற்கு எல்லாரும் ப்ரார்த்தனை செய்து கொள்வோம்!

குணமற்ற பரமாத்ம வஸ்துவிலிருந்துதான் அனந்த கல்யாண குணங்களும் வந்திருக்கின்றன. ரூபமற்ற பரமாத்மாவிடமிருந்துதான் சகல உருவங்களும் தோன்றியிருக்கின்றன. அந்தந்தக் குணத்துக்கு அநுகூலமான ரூபம், முத்திரை, ஆயுதம் முதலியவற்றோடு திவ்விய மூர்த்திகளைக் காட்டினால் அவற்றில் மனசு ஈடுபடுகிறது. புரியாத பரமாத்ம தத்துவத்தை நமக்குப் புரிகிற விதத்தில் உபாசிக்க முடிகிறது.



சகலமும் ஆன பரமாத்மா, நாம் அவரை எந்த ரூபத்தில் உபாசித்தாலும் அந்த ரூபத்தின் மூலம் அருள்புரிகிறார். படிப்படியாக நம் மனநிலையை உயர்த்துகிறார். கடைசியில் மனசே இல்லாத, மனசைக் கடந்த நிலை உண்டாகிறது. மனசு கடந்த அந்த நிலையிலேயே குணமும் ரூபமும் கடந்த பரமாத்மாவை உள்ளபடி அநுபவிக்க முடிகிறது. ஆரம்பத்தில் நமக்குப் பலவித மனோ விகாரங்கள் இருக்கும் போது, 'பரமாத்மா எல்லாம் கடந்தவர்' என்றால் அதில் பிடிப்புக் கொள்ள முடியவில்லை. ரூபத்தில், குணத்தில் அவரை உபாசித்தால், அது முற்றிய நிலையில், எல்லாவற்றுக்கும் அதீதமான பரமாத்மாவை உள்ளபடியே அநுபவிக்க முடிகிறது. மஞ்சள் பழத்தை மஞ்சளாகவே பார்க்கிறபோது மேற்கொண்டு மனசுக்கு வேலை இல்லாததுபோல், பரமாத்மாவைப் பரமாத்மாவாகவே பார்க்கிறபோதும் மனசுக்கு வேலை இல்லாமல் போகிறது. உபாசனையின் போது, "பரமாத்மாவை இப்படி இப்படி பாவனை செய்தால்



கொண்டிருந்தால்தான் ஸந்தோஷப்பட்டு எல்லா அநுக்ரஹமும் பண்ணுவார்.

முதலில் அவர்தான் இந்த அநுக்ரஹமே... நம்மைச் சுறுசுறுப்பாக்குகிற அநுக்ரஹமே... அஜாட்ய அநுக்ரஹமே பண்ண வேண்டும். அதற்கு எல்லாரும் ப்ரார்த்தனை செய்து கொள்வோம்!

குணமற்ற பரமாத்ம வஸ்துவிலிருந்துதான் அனந்த கல்யாண குணங்களும் வந்திருக்கின்றன. ரூபமற்ற பரமாத்மாவிடமிருந்துதான் சகல உருவங்களும் தோன்றியிருக்கின்றன. அந்தந்தக் குணத்துக்கு அநுகூலமான ரூபம், முத்திரை, ஆயுதம் முதலியவற்றோடு திவ்விய மூர்த்திகளைக் காட்டினால் அவற்றில் மனசு ஈடுபடுகிறது. புரியாத பரமாத்ம தத்துவத்தை நமக்குப் புரிகிற விதத்தில் உபாசிக்க முடிகிறது.



சகலமும் ஆன பரமாத்மா, நாம் அவரை எந்த ரூபத்தில் உபாசித்தாலும் அந்த ரூபத்தின் மூலம் அருள்புரிகிறார். படிப்படியாக நம் மனநிலையை உயர்த்துகிறார். கடைசியில் மனசே இல்லாத, மனசைக் கடந்த நிலை உண்டாகிறது. மனசு கடந்த அந்த நிலையிலேயே குணமும் ரூபமும் கடந்த பரமாத்மாவை உள்ளபடி அநுபவிக்க முடிகிறது. ஆரம்பத்தில் நமக்குப் பலவித மனோ விகாரங்கள் இருக்கும் போது, 'பரமாத்மா எல்லாம் கடந்தவர்' என்றால் அதில் பிடிப்புக் கொள்ள முடியவில்லை. ரூபத்தில், குணத்தில் அவரை உபாசித்தால், அது முற்றிய நிலையில், எல்லாவற்றுக்கும் அதீதமான பரமாத்மாவை உள்ளபடியே அநுபவிக்க முடிகிறது. மஞ்சள் பழத்தை மஞ்சளாகவே பார்க்கிறபோது மேற்கொண்டு மனசுக்கு வேலை இல்லாததுபோல், பரமாத்மாவைப் பரமாத்மாவாகவே பார்க்கிறபோதும் மனசுக்கு வேலை இல்லாமல் போகிறது. உபாசனையின் போது, "பரமாத்மாவை இப்படி இப்படி பாவனை செய்தால்

Supplement to KALKI 21.5.2000 23

அதற்கு இன்னின்ன மந்திரம் ஜபிக்க வேண்டும். இன்னின்ன ஆசாரம் வேண்டும். இன்னின்ன பூஜா பத்ததி வேண்டும்" என்று விதிகள் இருக்கின்றன. பாவனை போய், அவரை உள்ளவாறு அறிகிறபோது எந்த விதியும் இல்லை. செயலும் இல்லை. சரீரம், மனசு இவற்றின் காரியமாகிற உபாசனை இப்போதுதான் அநுபவமாகிற ஞானம் என்பதாகப் பழுத்து விடுகிறது.



இந்த ஞானம் நமக்கு ஆரம்பத்திலேயே வந்துவிட்டதாகப் பாவனை செய்துவிடக் கூடாது. உபாசனையே பெரும்பாலான ஜனங்களுக்கு ஞானம் பெற உபாயமாகும். திவ்விய மூர்த்திகள் நாமாகச் செய்கிற கல்பிதமான பாவனை மட்டுமல்ல. பரமாத்மாவே மகான்களுக்கும் ரிஷிகளுக்கும் இந்த ரூபங்கள், மந்திரங்கள், விதிகள் எல்லாவற்றையும் அநுக்கிரகித்திருக்கிறார். பரமாத்மா வாஸ்தவமாகவே இப்படிப்பட்ட மூர்த்திகளாகி, அவற்றை அடைகிற மந்திர, யந்திர, தந்திரங்களாகவும் ஆகியிருக்கிறார். எனவே, உபாசனை முறையை நம்பிக்கையுடன் சிரத்தையுடன் பின்பற்றினால் நிச்சயம் ஞானத்துக்கு வழி உண்டாகும்.

ஞானம் வருவதும் வராததும் இருக்கட்டும். இப்போது உபாசிக்கிறபோது அன்போடு அதைச் செய்ய வேண்டும். இந்த அன்பே, பக்தியே நமக்கு பெரிய நிறைவைத் தரும். அதனால் பகவானின் எல்லையில்லாத அன்பையும் அநுபவிப்போம். அதுவே பெரிய ஆனந்தம். இதற்கப்புறம் அவர் இஷ்டப்பட்டு அத்வைத ஞானம் தரட்டும்; தராமல்தான் இருக்கட்டும். அதைப் பற்றி இப்போது கவலைப்பட வேண்டாம். நாம் செய்யக்கூடியது பக்திதான். இதற்குப் பிரதியாகப் பெறக் கூடிய பகவதநுக்கிரக ஆனந்தமே நமக்குப் போதும்.

**(வானதி பதிப்பக வெளியீடான 'தெய்வத்தின் குரல்' நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டது.)**



அதற்கு இன்னின்ன மந்திரம் ஜபிக்க வேண்டும். இன்னின்ன ஆசாரம் வேண்டும். இன்னின்ன பூஜா பத்ததி வேண்டும்" என்று விதிகள் இருக்கின்றன. பாவனை போய், அவரை உள்ளவாறு அறிகிறபோது எந்த விதியும் இல்லை. செயலும் இல்லை. சரீரம், மனசு இவற்றின் காரியமாகிற உபாசனை இப்போதுதான் அநுபவமாகிற ஞானம் என்பதாகப் பழுத்து விடுகிறது.



இந்த ஞானம் நமக்கு ஆரம்பத்திலேயே வந்துவிட்டதாகப் பாவனை செய்துவிடக் கூடாது. உபாசனையே பெரும்பாலான ஜனங்களுக்கு ஞானம் பெற உபாயமாகும். திவ்விய மூர்த்திகள் நாமாகச் செய்கிற கல்பிதமான பாவனை மட்டுமல்ல. பரமாத்மாவே மகான்களுக்கும் ரிஷிகளுக்கும் இந்த ரூபங்கள், மந்திரங்கள், விதிகள் எல்லாவற்றையும் அநுக்கிரகித்திருக்கிறார். பரமாத்மா வாஸ்தவமாகவே இப்படிப்பட்ட மூர்த்திகளாகி, அவற்றை அடைகிற மந்திர, யந்திர, தந்திரங்களாகவும் ஆகியிருக்கிறார். எனவே, உபாசனை முறையை நம்பிக்கையுடன் சிரத்தையுடன் பின்பற்றினால் நிச்சயம் ஞானத்துக்கு வழி உண்டாகும்.

ஞானம் வருவதும் வராததும் இருக்கட்டும். இப்போது உபாசிக்கிறபோது அன்போடு அதைச் செய்ய வேண்டும். இந்த அன்பே, பக்தியே நமக்கு பெரிய நிறைவைத் தரும். அதனால் பகவானின் எல்லையில்லாத அன்பையும் அநுபவிப்போம். அதுவே பெரிய ஆனந்தம். இதற்கப்புறம் அவர் இஷ்டப்பட்டு அத்வைத ஞானம் தரட்டும்; தராமல்தான் இருக்கட்டும். அதைப் பற்றி இப்போது கவலைப்பட வேண்டாம். நாம் செய்யக்கூடியது பக்திதான். இதற்குப் பிரதியாகப் பெறக் கூடிய பகவதநுக்கிரக ஆனந்தமே நமக்குப் போதும்.

(வானதி பதிப்பக வெளியீடான 'தெய்வத்தின் குரல்' நூல்களிலிருந்து தொகுக்கப்பட்டது.)

24 Supplement to KALKI 21.5.2000

# "எல்லாரும் க்ஷேமமா இருங்கோ"

*மேச்சேரி பட்டு சாஸ்திரிகள். எழுபது வயதைக் கடந்தவர். சுமார் பத்து வயதில் காஞ்சி மடத்துடன் இவருக்கு ஏற்பட்ட பழக்கம் இன்றும் தொடர்கிறது. 1994ம் வருடம் ஜனவரி மாதம் எட்டாம் தேதி பிற்பகலில் பரமாச்சாரியார் சித்தியடைந்ததற்கு முன்பு, கடைசியாக அவருடன் பேசியவர் மேச்சேரி பட்டு சாஸ்திரிகள்தான். தற்போது சென்னை மேற்கு மாம்பலத்தில் வசிக்கும் பட்டு சாஸ்திரிகள், பரமாச்சாரியாருடன் தமக்கு ஏற்பட்ட சில அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளுகிறார்:*

**கா**ஞ்சிபுரத்திலிருந்து சுமார் முப்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கிராமம் மேச்சேரி. சுமார் நாற்பது வருடங்களுக்கு முன்பு, இங்கு (ஆதி)சங்கர ஜெயந்தியைக் கொண்டாடும்படி வயலின் வித்வான் சுந்தர சாஸ்திரி என்பவரிடம் கூறிய பரமாச்சாரியார், என்னை அவருக்கு உதவியாக இருக்கும்படிப் பணித்தார். பத்து வருடங்கள் சங்கர ஜெயந்தி அமோகமாக மேச்சேரியில் நடந்தது. அதன்பின், பரமாச்சாரியார், என்னைக் கூப்பிட்டு, 'நீயே இனிமேல் நடத்திவை' என்று உத்தரவு கொடுத்தார்.

"சங்கர ஜெயந்தி நடத்தறது பெரிய விஷயம். என்னால முடியுமா?" என்று நான் கேட்ட போது, "எல்லாம் முடியும்டா! போய் நடத்து" என்றார். அந்த வருடம் ஆரம்பித்ததுதான்,



"எல்லாரும் க்ஷேமமா இருங்கோ"

மேச்சேரி பட்டு சாஸ்திரிகள். எழுபது வயதைக் கடந்தவர். சுமார் பத்து வயதில் காஞ்சி மடத்துடன் இவருக்கு ஏற்பட்ட பழக்கம் இன்றும் தொடர்கிறது. 1994ம் வருடம் ஜனவரி மாதம் எட்டாம் தேதி பிற்பகலில் பரமாச்சாரியார் சித்தியடைந்ததற்கு முன்பு, கடைசியாக அவருடன் பேசியவர் மேச்சேரி பட்டு சாஸ்திரிகள்தான். தற்போது சென்னை மேற்கு மாம்பலத்தில் வசிக்கும் பட்டு சாஸ்திரிகள், பரமாச்சாரியாருடன் தமக்கு ஏற்பட்ட சில அனுபவங்களைப் பகிர்ந்து கொள்ளுகிறார்:

காஞ்சிபுரத்திலிருந்து சுமார் முப்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கிராமம் மேச்சேரி. சுமார் நாற்பது வருடங்களுக்கு முன்பு, இங்கு (ஆதி)சங்கர ஜெயந்தியைக் கொண்டாடும்படி வயலின் வித்வான் சுந்தர சாஸ்திரி என்பவரிடம் கூறிய பரமாச்சாரியார், என்னை அவருக்கு உதவியாக இருக்கும்படிப் பணித்தார். பத்து வருடங்கள் சங்கர ஜெயந்தி அமோகமாக மேச்சேரியில் நடந்தது. அதன்பின், பரமாச்சாரியார், என்னைக் கூப்பிட்டு, 'நீயே இனிமேல் நடத்திவை' என்று உத்தரவு கொடுத்தார்.

"சங்கர ஜெயந்தி நடத்தறது பெரிய விஷயம். என்னால முடியுமா?" என்று நான் கேட்ட போது, "எல்லாம் முடியும்டா! போய் நடத்து" என்றார். அந்த வருடம் ஆரம்பித்ததுதான்,

Supplement to KALKI 21.5.2000 25

கடந்த 30 வருடங்களாக, மேச்சேரியில் சங்கர ஜெயந்தி நடைபெற்று வருகிறது.

"பரமாச்சாரியாரே மூன்று தடவைகள், சங்கர ஜெயந்தி நடக்கிறபோது மேச்சேரிக்கு வந்து நேரில் அனுக்கிரகம் செய்திருக்கிறார். ஒருதடவை அப்படி வந்திருந்தபோது, 'குருபக்தி' பற்றி சுமார் ஒரு மணிநேரம் பிரசங்கம் செய்தார் பரமாச்சாரியார்.



இன்னொரு தடவை, பூஜையை ஆரம்பித்து வைத்துவிட்டுப் புறப்படுகிறபோது, "மூணுநாள் நிகழ்ச்சியையும் பெரியவாள் இங்கேயே தங்கி, பார்த்து, அனுக்கிரகம் பண்ணிவிட்டுப் போகணும்" என்று நான் விண்ணப்பித்தபோது, "நான் இருந்தால் உனக்குத்தான் கஷ்டம்: நீ மூணு நாளுக்கு என்ன வேணுமோ அதையெல்லாம் தயார் பண்ணி வெச்சிருப்பே! நான் தங்கினால், என்னைப் பார்க்க நிறைய பேர் வருவா! நீ வெச்சிருக்கிறதெல்லாம் ஒரே நாளில தீர்ந்து போயிடும்! உனக்கு ஏன் வீண் கஷ்டம்?" என்று சொன்னார்.

"முப்பது வருடங்களுக்கு முன்பு ஒரு தடவை சென்னை சம்ஸ்கிருதக் கல்லூரியில் பெரியவாள் முகாமிட்டிருந்தார். நானும் கூடவே இருந்தேன். ஒரு கட்டத்தில்



கடந்த 30 வருடங்களாக, மேச்சேரியில் சங்கர ஜெயந்தி நடைபெற்று வருகிறது.

"பரமாச்சாரியாரே மூன்று தடவைகள், சங்கர ஜெயந்தி நடக்கிறபோது மேச்சேரிக்கு வந்து நேரில் அனுக்கிரகம் செய்திருக்கிறார். ஒருதடவை அப்படி வந்திருந்தபோது, 'குருபக்தி' பற்றி சுமார் ஒரு மணிநேரம் பிரசங்கம் செய்தார் பரமாச்சாரியார்.



இன்னொரு தடவை, பூஜையை ஆரம்பித்து வைத்துவிட்டுப் புறப்படுகிறபோது, "மூணுநாள் நிகழ்ச்சியையும் பெரியவாள் இங்கேயே தங்கி, பார்த்து, அனுக்கிரகம் பண்ணிவிட்டுப் போகணும்" என்று நான் விண்ணப்பித்தபோது, "நான் இருந்தால் உனக்குத்தான் கஷ்டம்: நீ மூணு நாளுக்கு என்ன வேணுமோ அதையெல்லாம் தயார் பண்ணி வெச்சிருப்பே! நான் தங்கினால், என்னைப் பார்க்க நிறைய பேர் வருவா! நீ வெச்சிருக்கிறதெல்லாம் ஒரே நாளில் தீர்ந்து போயிடும்! உனக்கு ஏன் வீண் கஷ்டம்?" என்று சொன்னார்.

"முப்பது வருடங்களுக்கு முன்பு ஒரு தடவை சென்னை சம்ஸ்கிருதக் கல்லூரியில் பெரியவாள் முகாமிட்டிருந்தார். நானும் கூடவே இருந்தேன். ஒரு கட்டத்தில்

26 Supplement to KALKI 21.5.2000

ஊருக்குப் புறப்படுவதாகக் கூறி உத்தரவு கேட்டேன். பெரியவாள் உத்தரவு தரவில்லை. அங்கேயே தங்கிவிட்டேன். மறுநாள் இரவு, என்னைக் கூப்பிட்டு, "நீ புறப்படு; நேரே மேச்சேரிக்குப் போ" என்று உத்தரவு கொடுத்தார். ராத்திரியே புறப்பட்டு, பஸ் பிடித்து, ஊருக்கு வந்தால், எனக்கு இனிய அதிர்ச்சி! என் மனைவிக்குப் சுகப் பிரசவம் ஆகியிருந்தது. பெண் குழந்தை. உமாமகேஸ்வரி என்று பெயர் சூட்டினோம்.



இதற்கு முன்பு, என் மனைவிக்கு முதல் பிரசவம் ஆனதும் மறக்க முடியாத அனுபவம்தான். என் மனைவிக்கு சீமந்தம் செய்ய வேண்டும். பெரியவாளே நல்ல நாள் பார்த்துச் சொல்லி அனுக்கிரகம் பண்ண வேண்டும் என்று நான் கேட்டுக் கொண்டேன். பெரியவாளே நாள் குறிப்பிட்டுச் சொன்னதோடு இல்லாமல், "உனக்கு சீமந்த புத்திரன்தான் பிறக்கப்போகிறான். குழந்தைக்கு சந்திரமௌலி என்று பேர் வை" என்று கூறினார். பெரியவாள் குறித்துக் கொடுத்த நாளில், சீமந்தம் நடந்து, எங்களுக்குப் பெரியவாள் கூறியபடியே சீமந்த புத்திரன் பிறந்தான். அவனுக்கு சந்திரமௌலி என்றே பெயர் சூட்டினோம்.

ஒருமுறை சோளிங்கரில் பெரியவாள் முகாமிட்டிருந்தார். நான் தரிசனம் செய்யப் போயிருந்தேன். பெரியவாள், மலையேறி, கோவில்களுக்குச் சென்று தரிசனம் முடித்து, திரும்பி வந்தார். நானும் கூடவே போய் வந்தேன். உத்தரவு வாங்கிக் கொண்டு புறப்படத் தயாரான என்னிடம், "உனக்கு சமைக்கத் தெரியுமா? என்று கேட்டார். எனக்குப் பெரிசாய் சமையல் அனுபவம் இல்லையென்றாலும், பெரியவாள் கேட்கிறபோது, 'தெரியாது' என்று சொல்ல முடியுமா? 'சமைக்கத் தெரியும்' என்று சொல்லி விட்டேன்."

"இவா எல்லாம் என்னைப் பார்க்க வந்திருக்கா. பசியோட அனுப்பலாமா? இவாளுக்கு



ஊருக்குப் புறப்படுவதாகக் கூறி உத்தரவு கேட்டேன். பெரியவாள் உத்தரவு தரவில்லை. அங்கேயே தங்கிவிட்டேன். மறுநாள் இரவு, என்னைக் கூப்பிட்டு, "நீ புறப்படு; நேரே மேச்சேரிக்குப் போ" என்று உத்தரவு கொடுத்தார். ராத்திரியே புறப்பட்டு, பஸ் பிடித்து, ஊருக்கு வந்தால், எனக்கு இனிய அதிர்ச்சி! என் மனைவிக்குப் சுகப் பிரசவம் ஆகியிருந்தது. பெண் குழந்தை. உமாமகேஸ்வரி என்று பெயர் சூட்டினோம்.



இதற்கு முன்பு, என் மனைவிக்கு முதல் பிரசவம் ஆனதும் மறக்க முடியாத அனுபவம்தான். என் மனைவிக்கு சீமந்தம் செய்ய வேண்டும். பெரியவாளே நல்ல நாள் பார்த்துச் சொல்லி அனுக்கிரகம் பண்ண வேண்டும் என்று நான் கேட்டுக் கொண்டேன். பெரியவாளே நாள் குறிப்பிட்டுச் சொன்னதோடு இல்லாமல், "உனக்கு சீமந்த புத்திரன்தான் பிறக்கப்போகிறான். குழந்தைக்கு சந்திரமௌலி என்று பேர் வை" என்று கூறினார். பெரியவாள் குறித்துக் கொடுத்த நாளில், சீமந்தம் நடந்து, எங்களுக்குப் பெரியவாள் கூறியபடியே சீமந்த புத்திரன் பிறந்தான். அவனுக்கு சந்திரமௌலி என்றே பெயர் சூட்டினோம்.

ஒருமுறை சோளிங்கரில் பெரியவாள் முகாமிட்டிருந்தார். நான் தரிசனம் செய்யப் போயிருந்தேன். பெரியவாள், மலையேறி, கோவில்களுக்குச் சென்று தரிசனம் முடித்து, திரும்பி வந்தார். நானும் கூடவே போய் வந்தேன். உத்தரவு வாங்கிக் கொண்டு புறப்படத் தயாரான என்னிடம், "உனக்கு சமைக்கத் தெரியுமா? என்று கேட்டார். எனக்குப் பெரிசாய் சமையல் அனுபவம் இல்லையென்றாலும், பெரியவாள் கேட்கிறபோது, 'தெரியாது' என்று சொல்ல முடியுமா? 'சமைக்கத் தெரியும்' என்று சொல்லி விட்டேன்."

"இவா எல்லாம் என்னைப் பார்க்க வந்திருக்கா. பசியோட அனுப்பலாமா? இவாளுக்கு

Supplement to KALKI 21.5.2000 27

சமைச்சுப் போடு!'' என்றார்.

பெரியவாள் 'இவா' என்று குறிப்பிட்டது முன்னாள் ஜனாதிபதி ஆர்.வி.யின் மனைவி, ஆந்திர ஐ.ஜி.யின் மனைவி உட்பட அன்று பெரியவாளை தரிசிக்க வந்திருந்த சில முக்கிய மான பக்தர்களைத்தான்.

பெரியவாளுக்கு பக்தர் ஒருவர் கொண்டு வந்த அரிசியை என்னிடம் கொடுத்தார்கள். பக்கத்திலிருந்த பெட்டிக் கடையிலிருந்து கத்திரிக்காய் மற்றும் உப்பு, புளி, மிளகாய் வாங்கிக்



கொண்டேன். பக்தர்கள் கொண்டு வந்து கொடுத்த தேங்காயிலிருந்து இரண்டை எடுத்துக் கொண்டேன். ஒரு சத்திரத்திலிருந்து சில பாத்திரங் கள் கொண்டு வரப்பட்டன. மூன்று கற்களை அடுப்பு போல வைத்து தீ மூட்டினேன். சாதம் வடித்து, சாம்பார் செய்து விட்டேன். அங்கிருந்த பாறையை சுத்தம் பண்ணி விட்டு அதிலேயே தேங்காயை வைத்து அரைத்து துவையல் தயார் செய்தேன். ஒரு சைக்கிளை எடுத்துக் கொண்டுபோய் ஊருக்குள்ளிருந்த ஒரு கடையிலிருந்து கொஞ்சம் தயிர் வாங்கிக் கொண்டு வந்து, மோராக்கினேன். அனைவரும் சாப்பிட்டு விட்டுப் புறப்பட்டனர். ''எல்லாரும் சாப்பிட்டாளா?'' என்று கேட்டார். ''சாப்பிட்டாச்சு'' என்றேன். ''நீ சாப்பிட்டாயா?'' என்று கேட்டார். 'ஆச்சு' என்றேன். என்னை ஆசீர்வதித்து, புறப்பட உத்தரவு கொடுத்தார்.

வடக்கே ஷோலாப்பூரில் பெரியவாள் முகாமிட்டிருந்தபோது தரிசனம் பண்ண நானும் அங்கு போயிருந்தேன். அன்று இரவு எல்லோரும் தரிசனம் பண்ணிவிட்டுப் புறப்பட்டுப் போன பிறகு, பல்வேறு விஷயங்கள் குறித்தும் பேசிக் கொண்டிருந்தார். ''எவ்வளவு நேரம் நின்னுண்டே இருப்பே? உட்காரு'' என்றார். ஆனால், பெரியவாளுக்கு எதிரே உட்கார



சமைச்சுப் போடு!'' என்றார்.

பெரியவாள் 'இவா' என்று குறிப்பிட்டது முன்னாள் ஜனாதிபதி ஆர்.வி.யின் மனைவி, ஆந்திர ஐ.ஜி.யின் மனைவி உட்பட அன்று பெரியவாளை தரிசிக்க வந்திருந்த சில முக்கிய மான பக்தர்களைத்தான்.

பெரியவாளுக்கு பக்தர் ஒருவர் கொண்டு வந்த அரிசியை என்னிடம் கொடுத்தார்கள். பக்கத்திலிருந்த பெட்டிக் கடையிலிருந்து கத்திரிக்காய் மற்றும் உப்பு, புளி, மிளகாய் வாங்கிக்



கொண்டேன். பக்தர்கள் கொண்டு வந்து கொடுத்த தேங்காயிலிருந்து இரண்டை எடுத்துக் கொண்டேன். ஒரு சத்திரத்திலிருந்து சில பாத்திரங் கள் கொண்டு வரப்பட்டன. மூன்று கற்களை அடுப்பு போல வைத்து தீ மூட்டினேன். சாதம் வடித்து, சாம்பார் செய்து விட்டேன். அங்கிருந்த பாறையை சுத்தம் பண்ணி விட்டு அதிலேயே தேங்காயை வைத்து அரைத்து துவையல் தயார் செய்தேன். ஒரு சைக்கிளை எடுத்துக் கொண்டுபோய் ஊருக்குள்ளிருந்த ஒரு கடையிலிருந்து கொஞ்சம் தயிர் வாங்கிக் கொண்டு வந்து, மோராக்கினேன். அனைவரும் சாப்பிட்டு விட்டுப் புறப்பட்டனர். ''எல்லாரும் சாப்பிட்டாளா?'' என்று கேட்டார். ''சாப்பிட்டாச்சு'' என்றேன். ''நீ சாப்பிட்டாயா?'' என்று கேட்டார். 'ஆச்சு' என்றேன். என்னை ஆசீர்வதித்து, புறப்பட உத்தரவு கொடுத்தார்.

வடக்கே ஷோலாப்பூரில் பெரியவாள் முகாமிட்டிருந்தபோது தரிசனம் பண்ண நானும் அங்கு போயிருந்தேன். அன்று இரவு எல்லோரும் தரிசனம் பண்ணிவிட்டுப் புறப்பட்டுப் போன பிறகு, பல்வேறு விஷயங்கள் குறித்தும் பேசிக் கொண்டிருந்தார். ''எவ்வளவு நேரம் நின்னுண்டே இருப்பே? உட்காரு'' என்றார். ஆனால், பெரியவாளுக்கு எதிரே உட்கார

எனக்கு மனமில்லை. அவருக்கு எதிரே, வாசல் படியில் நின்று கொண்டே இரவு மூணு மணி வரை அவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டுத் தூங்கப் போனேன். அப்போது உடன் வந்த மடத்துச் சிப்பந்தியை அழைத்து, "நாளைக்குக் காலை இவன் ரயில் ஏறணும். பொங்கல் பண்ணி, விடுங்கள். சாப்பிட்டுவிட்டுப் போகட்டும்" என்றார்.

மறுநாள் காலை பொங்கல் ரெடி, சாப்பிட்டுவிட்டு, ரயிலுக்குப் புறப்பட்ட சமயம், பெரியவாள், "வழியில் ஒண்ணும் வாங்கிச் சாப்பிடமாட்டாயே! பசிக்குமே!" என்று சொல்லியபடி தானே பக்தர்கள் கொண்டு வந்து கொடுத்திருந்த பலவித பழங்களிலிருந்தும் கொஞ்சம் கொஞ்சம் எடுத்து ஒரு சிறு கூடையில் போட்டு, "வழியில் சாப்பிடு; பட்டினி கிடக்காதே" என்று அன்போடு கொடுத்து அனுப்பினார்.



திருமழிசையில் பெரியவாள் முகாமிட்டிருந்த சமயத்தில் நிகழ்ந்த சம்பவம் இது. நானும் போயிருந்தேன். பெரியவாள், என்னிடம், "போய் குளத்துல ஸ்நானம் பண்ணிட்டு, அப்படியே கோவிலைப் பிரதட்சிணம் பண்ணிவிட்டுவா" என்றார். நானும் போய் குளத்தில் குளித்துவிட்டு, கோவிலைப் பிரதட்சிணம் பண்ணிவிட்டு வந்தேன். என்னிடம், "கோவிலில் என்ன பார்த்தே?" என்று கேட்டார். "விசேஷமா ஒண்ணும் பார்க்கலையே" என்றேன். "அப்படியா? மறுபடி ஒரு தரம் கோவிலுக்குப் போய் பிரதட்சிணம் பண்ணிவிட்டு வா" என்றார். மறுபடியும் போய் கோவிலில் பிரதட்சிணமாய் வந்து கொண்டிருந்தபோது, அந்த வைஷ்ணவக் கோவிலுக்குள்ளே, ஒரு பிள்ளையார் சன்னதி இருப்பதை கவனித்தேன்.

கோவிலிலிருந்து வந்தவுடன், "இப்ப ஏதாவது விசேஷமா கவனிச்சியா? என்று கேட்டார்.



எனக்கு மனமில்லை. அவருக்கு எதிரே, வாசல் படியில் நின்று கொண்டே இரவு மூணு மணி வரை அவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்துவிட்டுத் தூங்கப் போனேன். அப்போது உடன் வந்த மடத்துச் சிப்பந்தியை அழைத்து, "நாளைக்குக் காலை இவன் ரயில் ஏறணும். பொங்கல் பண்ணி, விடுங்கள். சாப்பிட்டுவிட்டுப் போகட்டும்" என்றார்.

மறுநாள் காலை பொங்கல் ரெடி, சாப்பிட்டுவிட்டு, ரயிலுக்குப் புறப்பட்ட சமயம், பெரியவாள், "வழியில் ஒண்ணும் வாங்கிச் சாப்பிடமாட்டாயே! பசிக்குமே!" என்று சொல்லியபடி தானே பக்தர்கள் கொண்டு வந்து கொடுத்திருந்த பலவித பழங்களிலிருந்தும் கொஞ்சம் கொஞ்சம் எடுத்து ஒரு சிறு கூடையில் போட்டு, "வழியில் சாப்பிடு; பட்டினி கிடக்காதே" என்று அன்போடு கொடுத்து அனுப்பினார்.



திருமழிசையில் பெரியவாள் முகாமிட்டிருந்த சமயத்தில் நிகழ்ந்த சம்பவம் இது. நானும் போயிருந்தேன். பெரியவாள், என்னிடம், "போய் குளத்துல ஸ்நானம் பண்ணிட்டு, அப்படியே கோவிலைப் பிரதட்சிணம் பண்ணிவிட்டுவா" என்றார். நானும் போய் குளத்தில் குளித்துவிட்டு, கோவிலைப் பிரதட்சிணம் பண்ணிவிட்டு வந்தேன். என்னிடம், "கோவிலில் என்ன பார்த்தே?" என்று கேட்டார். "விசேஷமா ஒண்ணும் பார்க்கலையே" என்றேன். "அப்படியா? மறுபடி ஒரு தரம் கோவிலுக்குப் போய் பிரதட்சிணம் பண்ணிவிட்டு வா" என்றார். மறுபடியும் போய் கோவிலில் பிரதட்சிணமாய் வந்து கொண்டிருந்தபோது, அந்த வைஷ்ணவக் கோவிலுக்குள்ளே, ஒரு பிள்ளையார் சன்னதி இருப்பதை கவனித்தேன்.

கோவிலிலிருந்து வந்தவுடன், "இப்ப ஏதாவது விசேஷமா கவனிச்சியா? என்று கேட்டார்.

Supplement to KALKI 21.5.2000 29



"ம்... பிள்ளையார் சன்னதி இருந்தது. பிள்ளையாருக்கு, தென்கலை நாமம் போட்டிருந்தது" என்றேன். "ம்... கவனிச்சியா? அவாளுக்கும் பிள்ளையார் உண்டு; நாமம் போட்டு, 'தும்பிக்கை ஆழ்வார்'னு சொல்லுவா" என்றார்.

**வே**லூரில், எங்கள் மாட்டுப் பெண், எங்கள் பேத்தியை பிரசவித்த சமயம், ஐந்தாவது மாதத்தில், எங்கள் இல்லத்துக்குக் கூட்டி வரும்போது, அப்படியே காஞ்சிபுரம் வழியாக வந்து, பெரியவாளை தரிசனம் செய்வதாய் முடிவு செய்தோம். கைக் குழந்தையுடன் என் பையனும், மாட்டுப் பெண்ணும் பெரியவாளை தரிசிக்கப் போனார்கள். பெரியவாளுடன் கூட இருப்பவர்களிடம் குழந்தையைக் கொடுக்க, பெரியவாள், குழந்தையை மடியில் விடு' என்றார். குழந்தையைப் பார்த்து, சிரித்தது அந்த தெய்வம். தன் கழுத்தில் இருந்த ஏலக்காய் மாலையைக் கழற்றி, குழந்தைக்கு அணிவித்துவிட்டு, "யார் குழந்தை?" என்று கேட்க, பக்கத்திலிருந்தவர்கள், "மேச்சேரி பட்டு சாஸ்திரிகள் பேத்தி" என்று சொன்னவுடன், பெரியவாள், "அப்படியா? இவ எங்க வாத்தியார் (காஞ்சி மடத்து பிரதான புரோகிதர்) பேத்தியா?" என்று இருதடவை கேட்டார். என் பிள்ளை சொல்ல இதைக் கேட்டபோது எனக்கு மெய்சிலிர்த்தது.

**கா**ஞ்சிபுரத்தில் மடத்தின் சார்பில் ஒரு முறை அதிருத்ரயாகம் நடந்தபோது, அதை நடத்தி வைத்த என்னை, மடத்திலிருந்து, யாக சாலை இருந்த பங்காரு தோட்டம் வரை யானை மீது உட்கார வைத்து அழைத்துப் போக உத்தரவிட்டார். எனக்கோ பயமாகவும்,





"ம்... பிள்ளையார் சன்னதி இருந்தது. பிள்ளையாருக்கு, தென்கலை நாமம் போட்டிருந்தது" என்றேன். "ம்... கவனிச்சியா? அவாளுக்கும் பிள்ளையார் உண்டு; நாமம் போட்டு, 'தும்பிக்கை ஆழ்வார்'னு சொல்லுவா" என்றார்.

**வே**லூரில், எங்கள் மாட்டுப் பெண், எங்கள் பேத்தியை பிரசவித்த சமயம், ஐந்தாவது மாதத்தில், எங்கள் இல்லத்துக்குக் கூட்டி வரும்போது, அப்படியே காஞ்சிபுரம் வழியாக வந்து, பெரியவாளை தரிசனம் செய்வதாய் முடிவு செய்தோம். கைக் குழந்தையுடன் என் பையனும், மாட்டுப் பெண்ணும் பெரியவாளை தரிசிக்கப் போனார்கள். பெரியவாளுடன் கூட இருப்பவர்களிடம் குழந்தையைக் கொடுக்க, பெரியவாள், குழந்தையை மடியில் விடு' என்றார். குழந்தையைப் பார்த்து, சிரித்தது அந்த தெய்வம். தன் கழுத்தில் இருந்த ஏலக்காய் மாலையைக் கழற்றி, குழந்தைக்கு அணிவித்துவிட்டு, "யார் குழந்தை?" என்று கேட்க, பக்கத்திலிருந்தவர்கள், "மேச்சேரி பட்டு சாஸ்திரிகள் பேத்தி" என்று சொன்னவுடன், பெரியவாள், "அப்படியா? இவ எங்க வாத்தியார் (காஞ்சி மடத்து பிரதான புரோகிதர்) பேத்தியா?" என்று இருதடவை கேட்டார். என் பிள்ளை சொல்ல இதைக் கேட்டபோது எனக்கு மெய்சிலிர்த்தது.

**கா**ஞ்சிபுரத்தில் மடத்தின் சார்பில் ஒரு முறை அதிருத்ரயாகம் நடந்தபோது, அதை நடத்தி வைத்த என்னை, மடத்திலிருந்து, யாக சாலை இருந்த பங்காரு தோட்டம் வரை யானை மீது உட்கார வைத்து அழைத்துப் போக உத்தரவிட்டார். எனக்கோ பயமாகவும்,

30 Supplement to KALKI 21.5.2000

கூச்சமாகவும் இருந்தது. தயங்கியபோது, "ஆச்சாரியாரை இப்படித்தான் கௌரவிக்கணும். பேசாம போ" என்றார். எனக்கு யானை சவாரி கிடைத்தது!

எழுபத்தைந்தாம் வருடம். மேச்சேரியிலிருந்து மெட்ராசுக்கு வந்து விட்டோம். குடும்பத்தில் ரொம்ப கஷ்ட ஜீவனம். அரிசிக்குக் கூடத் தட்டுப்பாடு. ஒருநாள் திடீரென்று ஒரு முன்பின் அறிமுகமில்லாத மனிதர் எங்கள் வீட்டு விலாசம் கேட்டுக் கொண்டு வந்தார். பின்னாலேயே ஒருவர் ஒரு மூட்டையைத் தூக்கிக் கொண்டு வந்தார். வீட்டுக்குள் வந்த அவர்கள், மூட்டையை இறக்கி வைத்தார்கள். எங்களுக்கு யார் இவர்கள்? இது என்ன மூட்டை? என்று புரியாமல் குழப்பம். வந்தவரே விளக்கினார். "பெரியவாள்தான் எங்களை இங்கே அனுப்பி வைத்தார். நான் அரிசி வியாபாரி. மடத்துக்கு, பெரியவாளை தரிசிக்கச் சென்றிருந்தபோது, உங்கள் விலாசம் கொடுத்து, ஒரு மூட்டை அரிசி கொண்டு போய்க் கொடுக்கச் சொன்னார்" என்று அவர் சொன்னபோது பெரியவாளின் கருணையைக் கண்டு எங்களுக்கு ஆனந்தக் கண்ணீரே வந்துவிட்டது.

• பட்டு சாஸ்திரி
(படம்: வெங்கடேஷ்)



பெரியவாள் சித்தியடைந்த தினமான 1994 ஜனவரி எட்டாம் தேதி நான் அவரை தரிசித்த அனுபவத்தைச் சொல்லுகிறேன். பெரியவாள், தமது அறையில் படுத்திருந்தார். கால் முதல் பாதி உடம்பு வரை போர்த்தியிருந்தது. அன்று பெரியவாளின் ஜன்ம நட்சத்திரமான அனுஷம் என்பதால் வழக்கப்படி, மடத்திலே ஹோமம் செய்துவிட்டுப் பிரசாதத்தை எடுத்துக் கொண்டு அவரது அறை இருந்த பக்கம் போனேன்.



கூச்சமாகவும் இருந்தது. தயங்கியபோது, "ஆச்சாரியாரை இப்படித்தான் கௌரவிக்கணும். பேசாம போ" என்றார். எனக்கு யானை சவாரி கிடைத்தது!

எழுபத்தைந்தாம் வருடம். மேச்சேரியிலிருந்து மெட்ராசுக்கு வந்து விட்டோம். குடும்பத்தில் ரொம்ப கஷ்ட ஜீவனம். அரிசிக்குக் கூடத் தட்டுப்பாடு. ஒருநாள் திடீரென்று ஒரு முன்பின் அறிமுகமில்லாத மனிதர் எங்கள் வீட்டு விலாசம் கேட்டுக் கொண்டு வந்தார். பின்னாலேயே ஒருவர் ஒரு மூட்டையைத் தூக்கிக் கொண்டு வந்தார். வீட்டுக்குள் வந்த அவர்கள், மூட்டையை இறக்கி வைத்தார்கள். எங்களுக்கு யார் இவர்கள்? இது என்ன மூட்டை? என்று புரியாமல் குழப்பம். வந்தவரே விளக்கினார். "பெரியவாள்தான் எங்களை இங்கே அனுப்பி வைத்தார். நான் அரிசி வியாபாரி. மடத்துக்கு, பெரியவாளை தரிசிக்கச் சென்றிருந்தபோது, உங்கள் விலாசம் கொடுத்து, ஒரு மூட்டை அரிசி கொண்டு போய்க் கொடுக்கச் சொன்னார்" என்று அவர் சொன்னபோது பெரியவாளின் கருணையைக் கண்டு எங்களுக்கு ஆனந்தக் கண்ணீரே வந்துவிட்டது.

• பட்டு சாஸ்திரி
(படம்: வெங்கடேஷ்)



பெரியவாள் சித்தியடைந்த தினமான 1994 ஜனவரி எட்டாம் தேதி நான் அவரை தரிசித்த அனுபவத்தைச் சொல்லுகிறேன். பெரியவாள், தமது அறையில் படுத்திருந்தார். கால் முதல் பாதி உடம்பு வரை போர்த்தியிருந்தது. அன்று பெரியவாளின் ஜன்ம நட்சத்திரமான அனுஷம் என்பதால் வழக்கப்படி, மடத்திலே ஹோமம் செய்துவிட்டுப் பிரசாதத்தை எடுத்துக் கொண்டு அவரது அறை இருந்த பக்கம் போனேன்.

மணி பனிரெண்டே முக்கால் இருக்கும்.

"ஹோமம் எல்லாம் நல்லபடியா முடிஞ்சது. இதோ பிரசாதம்! பெரியவாளிடம் சேர்த்து விடுங்கள்" என்று அங்கிருந்தவர்களிடம் சொன்னபோது, "நீங்களே உள்ளே போய்க் கொடுத்து விடுங்களேன்" என்று சொன்னார்கள். உள்ளே போய், பெரியவாள் அருகில் குனிந்து நின்றேன்.



"யாரு?" என்று அவர் கேட்க, உடனிருந்த வேதபுரி என்பவர், மேச்சேரி பட்டு சாஸ்திரிகள்" என்றார்.

"அப்படியா?" என்று கேட்டுக் கொண்டவர், "என் பக்கமாய்த் திரும்பி, "சௌக்கியமா?" என்றார்.

"சௌக்கியமா இருக்கேன்" என்றேன்.

"எல்லாரும் க்ஷேமமா இருங்கோ" என்று சொல்லிவிட்டு, உடனே அதையே இன்னொரு தடவையும் திருப்பிச் சொன்னார். இதற்கு பல நாட்கள் முன்பிருந்தே யாருக்கும் பெரியவாள் தரிசனம் தரவில்லை. பேச்சும் மிகவும் குறைந்து விட்டது. என்னிடம் பெரியவாள் சில வார்த்தைகள் பேசியது என்னை மெய்சிலிர்க்க வைத்தது. வெளியில் வருகிறபோது, நான் அழுதுவிட்டேன். அதன்பின்பு, பெரியவாள் யாரிடமும் பேசவில்லையாம். சரியாக பிற்பகல் இரண்டுமணி ஐம்பத்து மூன்று நிமிடத்துக்கு சித்தியடைந்து விட்டார்.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**



மணி பனிரெண்டே முக்கால் இருக்கும்.

"ஹோமம் எல்லாம் நல்லபடியா முடிஞ்சது. இதோ பிரசாதம்! பெரியவாளிடம் சேர்த்து விடுங்கள்" என்று அங்கிருந்தவர்களிடம் சொன்னபோது, நீங்களே உள்ளே போய் கொடுத்து விடுங்களேன்" என்று சொன்னார்கள். உள்ளே போய், பெரியவாள் அருகில் குனிந்து நின்றேன்.



"யாரு?" என்று அவர் கேட்க, உடனிருந்த வேதபுரி என்பவர், மேச்சேரி பட்டு சாஸ்திரிகள்" என்றார்.

"அப்படியா?" என்று கேட்டுக் கொண்டவர், "என் பக்கமாய்த் திரும்பி, "சௌக்கியமா?" என்றார்.

"சௌக்கியமா இருக்கேன்" என்றேன்.

"எல்லாரும் க்ஷேமமா இருங்கோ" என்று சொல்லிவிட்டு, உடனே அதையே இன்னொரு தடவையும் திருப்பிச் சொன்னார். இதற்கு பல நாட்கள் முன்பிருந்தே யாருக்கும் பெரியவாள் தரிசனம் தரவில்லை. பேச்சும் மிகவும் குறைந்து விட்டது. என்னிடம் பெரியவாள் சில வார்த்தைகள் பேசியது என்னை மெய்சிலிர்க்க வைத்தது. வெளியில் வருகிறபோது, நான் அழுதுவிட்டேன். அதன்பின்பு, பெரியவாள் யாரிடமும் பேசவில்லையாம். சரியாக பிற்பகல் இரண்டுமணி ஐம்பத்து மூன்று நிமிடத்துக்கு சித்தியடைந்து விட்டார்.

சந்திப்பு: **எஸ். சந்திரமௌலி**

32 Supplement to KALKI 21.5.2000

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka